# சிவ வடிவங்கள்

ஆசிரியர் :
சைவத்தமிழ்மணி
வித்துவான் மா. சிவகுருநாத பிள்ளை



A.NO 22751
36/2

தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் — 613 005

22751

# சிவ வடிவங்கள்

36/12

ஆசிரியர் :
சைவத்தமிழ்மணி
வித்துவான் மா. சிவகுருநாத பிள்ளை
சுந்தரபெருமாள் கோயில்,
தஞ்சை மாவட்டம்




தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் — 613 005

ISBN : 81-7090-189-8

தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு : 148

திருவள்ளுவர் ஆண்டு 2022 மார்கழி-திசம்பர் 1991

| | | |
|---|---|---|
| நூல் | : | சிவ வடிவங்கள் |
| ஆசிரியர் | : | சைவத்தமிழ்மணி,<br>வித்துவான் மா. சிவகுருநாத பிள்ளை |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| விலை | : | உருபா. 50 |
| அச்சு | : | அருட்சோதி அச்சகம்,<br>சிதம்பரம். |

# சிவ வடிவங்கள்

## பொருள் அட்டக்கம்

முனைவர்
சி. பாலசுப்பிரமணியன்
துணைவேந்தர்

தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.



# பாராட்டுரை

சிவ வழிபாடு மிகத் தொன்மையானது; தூய்மையானது; செந்தமிழ் மாந்தர் வாழ்ந்த; இடமெங்கும் காணப்படுவது. பரம்பொருளைத் தென்னாடுடைய சிவனாகவும் எந்நாட்டவர்க்கும் இறைவனாகவும் போற்றி வழிபடுபவர் தமிழர்.

குணம் குறி கடந்த பேரொளியாக விளங்குபவன் இறைவன்; இவ்விறைவனை ஒரு குறியின்கண் வைத்து வழிபடும் பொருட்டு அமைந்தது சிவலிங்கம். அருவுருவத்திருமேனியாக விளங்குவது சிவலிங்கம். மண்ணும் விண்ணும் அளாவிய அனல் பிழம்பாய்த் தோன்றிய வடிவம் சிவலிங்கம்.

'சிவ வடிவங்கள்' என்னும் இந்நூலின் ஆசிரியர் சைவத் தமிழ்மணி வித்துவான் ம. சிவகுருநாதபிள்ளை அவர்கள், "சிவலிங்கம் என்பது என்ன?" என ஒரு வினாவை எழுப்பி, "இலிங்கம் என்றால் குறியீடு (சின்னம்) என்று பொருள்; சிவன் என்றால் பரம்பொருள். எனவே சிவலிங்கம் என்பது பரம்பொருளாகச் சிவனைக் குறிக்கும் குறியீடு ஆகும்," என விடையும் அளித்த பிறகு இவ் ஆய்வில் நாம் ஈடுபடத்தேவையில்லை.

சைவத் தமிழ்மணி அவர்கள் தம் இளமைக் காலந்தொட்டு ஈடுபாடு கொண்டுள்ள சிவநெறி பற்றியும் சிவநெறியின் மூல

முழுமுதற் பொருளான சிவம் பற்றியும் அவர்க்குக் குறியீடாக விளங்கும் சிவலிங்கம் பற்றியும் தெளிவான ஒரு பேராய்வு செய்தே இந்நூலினைத் தமிழக மக்களுக்கு வழங்கியுள்ளார்கள்.

சிவலிங்கம் பற்றிய தத்துவக் கருத்துகள், நின்ற, இருந்த, கிடந்த கோலத்துச் சிவலிங்கங்கள், சிவலிங்க அமைப்பு பற்றிய விவரங்கள் ஆகியவை பற்றி நுண்மாண் நுழைபுலம் கொண்டு இந்நூலில் ஆய்வு மேற்கொள்ளப்பெற்றுள்ளது.

இயந்திர உருவில் சிவ வடிவங்களைக் கூறும் வழிவகை யினையும் நூலாசிரியர் அவர்கள் தெளிவாக விளக்குகிறார்கள்.

அறுவகைச் சமயங்களுக்கும் அப்பாற்பட்ட சித்தாந்த சைவத்தின் விளக்கமாக அமைவன சிவாகமங்கள் ஆகம வடிவில் சிவம் வீற்றிருப்பதன் அழகையும் தெளிவுபடுத்துகிறது இந்நூல்.

எளியார்க்கு எளியவனாக விளங்கும் இறைவன், மானிட வடிவம் கொண்டு அடியவர்களுக்கு அருள்புரிந்த தன்மைகளை யும் இலக்கியங்களின் வாயிலாக நூலாசிரியா விளக்குந்திறன் போற்றுதற்குரிய ஒன்றாகும்.

காவியச் செல்வராக விளங்கும் இந்நூலாசிரியர் அவர்கள், ஓவியச் செல்வராகவும் விளங்கும் தன்மையை இந்நூலிலுள்ள ஓவியங்கள் நமக்கு உணர்த்துகின்றன .

சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கும் தமிழகத்தே, இந்நூல் போன்ற பன்னூல்கள் வெளிவருதல் வேண்டும். அவற்றைக் கற்றுத் தமிழக மக்கள், சிறப்பாகத் தமிழக இளைஞர்கள் சமயநெறியின் மெய்யுணர்வைப் பெறுதல் வேண்டும்.

சைவசமயத்தின் பழுத்த பழமாக விளங்கும் சைவத்தமிழ் மணி அவர்கள் இந்நூல் போன்று மேலும் பல நூல்களை உருவாக்கித் தர வேண்டும் என்பது தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் பெருவிருப்பாகும்.

நூலாசிரியர் அவர்கள் பல்லாண்டு பல்லாண்டு வாழ்க! அவர்தம் பணி சிறக்க! என வாழ்த்தி அமைகின்றேன்.

சி. பாலசுப்பிரமணியன்.

**முன்னுரை:-**

## திருச்சிற்றம்பலம்

வடிவேறு திரிசூலம் தோன்றும் தோன்றும்
வளர்சடைமேல் இளமதியம் தோன்றும் தோன்றும்
கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றும்
காதில்வெண் குழைதோடு கலந்து தோன்றும்
இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்
எழில்திகழும் திருமுடியும் இலங்கித் தோன்றும்
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில் திகழும் பூவணத்தெம் புனிதனார்க்கே.

## திருச்சிற்றம்பலம்.

அங்கு இங்கு எனாதபடி பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்தவன் இறைவன். தோற்றமும் முடிவுமில்லாத இவ்விறைவன் ஒப்பற்ற ஒரு முழுமுதலாயும் பெண் ஆண் என இரண்டாயும் குணம் மூன்றாயும் நான்மறைகளாயும் ஐம்பெரும்பூதமாயும் சுவை ஆறாயும் ஏழு ஓசையாயும் திசை எட்டாயும் இன்னும் உடனுறைந்தும் வேறாயும் விளங்குகிறான் என்கிறார் சம்பந்தர். இன்னும் இச்சம்பந்தருடன் திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய இருவரும் தேவாரப்பாக்களில் சிவபிரானது உருவச் சிறப்பினை அகத்தியர் தேவாரத் திரட்டில் திருஉருவம் என்ற பகுதியில் விளக்கிப் பாடியுள்ளதிலும் மற்றும் பலப்பல நூல்களிலும் காணலாம். இவ்வாறெல்லாம் இறைவனது வடிவம் பற்றி நம் அருளாளர்கள் எடுத்துரைத்துள்ளனர். இத்தகைய இறைவனை அடியவர்கள் தம் நினைவு, சொல், பொருள் இம் மூன்று வகையாலும் கண்டு பூசித்து வணங்கும் பெரும்பேறு அடைந்து வருகின்றனர்.

இம்மூன்றில் முதல் இரண்டு வழிகளும் அருளாளர்கட்கே விரைவில் கைகூடுவன. ஆனால் பொருள்வடிவில் கண்டு வழிபட்டு உய்யும் நெறி, கற்றார் கல்லாதார் யாவருக்கும் இயன்றதாகும். இத்தகைய பொருள் வடிவான திருஉருவ வழிபாடு சிற்பம், ஓவியம் இரண்டு வகையில், பண்டுமுதல் இன்றுவரை

# XVIII

மக்களைப் பத்தியில் ஈடுபடச் செய்து வருவது திருக்கோயில் களில் உள்ள தெய்வச் சிலைகள் வழி அறியக்கூடும் உண்மை யாகும். இச்சிற்பச் சிலை வடிவ வணக்கம் பற்றி மாறுபட்ட கருத்துடையோரும் மக்களிடை இருந்துவருகின்றனர்.

இச்சிலை வடிவம் பற்றி நம்நாட்டு மூதறிஞர், பாரத ரத்னா ராஜாஜி அவர்கள் ........ விக்கிரகம் வெறும் சின்னமா? என்னும் தலைப்பில் கூறுவதாவது:

உருவ வழிபாட்டைக் கேலி செய்பவர்கள் அதன் பொருளை மனத்தில் வாங்கிக் கொள்ள வேண்டும். எவ்வாறு நாஸ்திகம் பேசுபவர்களும் தங்கள் தலைவர்களின் படங்களை வைத்து மரியாதை செய்வது, அந்தப்படம் எழுதப்பட்ட காகிதத்துக்கல்ல தலைவரையே சேரும் என்று நினைக்கிறார்களோ அவ்வாறே ஆஸ்திகர்கள் விக்கிரகத்துக்குச் செய்யும் வழிபாடு அந்த விக்கிரகம் குறிப்பிடும் பரம்பொருளுக்கே உரியது.

விக்கிரகம் பரம்பொருளின் சின்னம் என்கிற வாதம் ஒரு புறம் இருக்கட்டும் விக்கிரகத்தை வெறும் சின்னம் என்று மட்டுமே ஏன் கொள்ளவேண்டும். எங்கும் நிறைந்த சர்வ வியாபகமான சக்தியானது பக்தன் வழிபடும் விக்கிரகத்தில் மட்டும் இல்லையா? நாம் காண்கின்ற பௌதிக உலகில் உள்ள சின்னஞ்சிறு அணுவிலும் உறையும் பரம்பொருளின் பராசக்தி யானது ரிஷிகள் தந்துள்ள வருணனைகளின்படி நம்மனத்தில் நாம் உருவாக்கும் திவ்வியமான நாம ரூபங்களிலும் நிச்சயமாக உறைகிறது. எனவே இதெல்லாம் சின்னம் என்று சொல்வ தால் முழு உண்மையும் சொன்னதாகாது.

தெய்வச் சிலைகளின் அமைப்பைக் கூற தியான சுலோகங்கள் உள்ளன. பூசையின்போது வடிவத்தைத் தியானம் செய்தும் மனத்தில் கொள்ள வேண்டிய அந்தத் தெய்வங்களுக்கு உரிய

மந்திரங்களைப்பிழையின்றி உச்சரித்தால் அத்தெய்வ உருவங்கள் சூட்சம சலனத்தால் உருவாகி சாதகனின் மந்திரப் பார்வையில் தோன்றும் எனப்படுகிறது. நேர் முகமாக சில ஆண்டுகளுக்கு முன் பார்த்தனர் என்றும் அமெரிக்க விஞ்ஞானிகள் ஓசையின் சூட்சம சலனங்களை ஆராய்ந்து கண்டுபிடித்தனர் என்றும் கூறுவர்.

சிலை வடிவங்கள் இறைவனின் தத்துவங்களை விளக்குபவை. இவை தொன்மையானவை. விக்கிரக வழிபாடு ஒரு காலத்தில் உலகெங்கும் பரவியிருந்தது. எகிப்தில் உருவவழிபாடு இருந்துள்ளது. கிரேக்கர், உரோமர் இவர்களும் உருவங்களை வைத்து முன் வழிபட்டனர். தீ, மழை, காதல், போர் ஆகிய செயல்களுக்குத் தீக்கடவுள், மழைக்கடவுள், காதற் கடவுள், போர்க்கடவுள் என்று அனைத்து உலகச் செயல்களுக்கும் ஒவ்வோர் அதிதேவதை இருப்பதாகக் கருதி வழிபட்டு வந்துள்ளனர்.

நம் பாரத கண்டத்தைப் பொருத்தமட்டில் சிலைவடிவ வழிபாடு பற்றி எடுத்துரைக்க இங்கு பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்துள்ள கோயில்களே போதுமான சான்றாகும். இங்கு விளங்கும் கோயில்களின் வழிபாட்டினால்தான் இந்திய மக்களது வாழ்வு செம்மை நெறி நின்று வருகிறது. ஆனால் இவ்வாறு விளங்கும் தெய்வ வடிவங்களின் விளக்கங்களை உணர்ந்தோர் சிலர்தாம் எனலாம். இவற்றை உணர்த்த எழுந்துள்ள சிற்ப நூல்கள், புராணங்கள் அளப்பில.

நாகரிக வளர்ச்சி மிகுந்துவரும் இக்காலத்தில், தற்கால அறிஞர் பெருமக்கள் சிறந்த பல நூல்களை ஆய்வுசெய்து, இந்தத் தெய்வ வடிவங்களின் சிறப்பினையும் பெருமையையும் வெளியிட்டு வருகின்றனர். அவற்றுள் இச் "சிவவடிவங்கள்" என்னும் சிறு நூலும் ஒன்று.

என் இளமைமுதல் சிவத்தலங்களை நேரில் சென்று தரிசிக்கும் பழக்கம் என்னுடைய தந்தையாரால் எனக்கு ஏற்பட்டது. அப்படிச் சென்று தரிசிக்கும் கோயில்களில் உள்ள மூலலிங்கம்,

சிறப்பு மூர்த்திகள், கோயில் அமைப்பு இவற்றைப் பற்றிய படங்கள், சிறு குறிப்புகள் வரைந்து வருவேன். இவை எனக்குப் பொழுது போக்கான விளையாடாக இருந்தன. பின்னர் என்னுடைய இருபத்தேழாவது வயதில் சைவத்துறையில் பணி யாற்ற உறுதுணையாக அமைந்தவர்கள். தஞ்சை மாவட்டக் கழக உயர்நிலைப்பள்ளிகளில் தலைமை ஆசிரியராய் இருந்த வரும் மொழி அரசி, திருக்குறள் சொல்லடைவு முதலிய நூல் களின் ஆசிரியரும் சிவபூசைச் செல்வருமான தஞ்சை தமிழ் மணி சாமிவேலாயுதம் பிள்ளை அவர்கள் ஆவார்கள்.

இவர்களது கூட்டுறவால் கொரடாச்சேரியில் சைவ சித்தாந்த ஞாயிறாக விளங்கிய சிவத்திரு. வாலையானந்த சுவாமிகளிடம் சமய விசேட தீக்கை பெற்று சிவபூசை செய்து வந்தேன். இவ்வாறு செய்துவரும் சிவபூசையில் வரும் மூர்த்தி களின் வடிவங்கள் சிலவற்றைப் படமாக வரைந்து வைத்திருந்தேன். இதனை அறிந்திருந்தவர் திருவையாறு அறம் வளர்த்தநாயகியம்மன் கோயில் திருப்பணிச் செல்வர் தேவ கோட்டை அமரர், தமிழ் வள்ளல் திரு சேவு. மெய்யப்பச் செட்டியார் அவர்கள். ஒருமுறை 6–5–1954 இல் தில்லை ஆயிரக்கால் மண்டபத்தில் நிகழ்ந்த கோவை சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்களது பெரியபுராண விளக்கஉரை அரங்கேற்றத்தில், என்னைச் சந்தித்தபோது பள்ளிக் கோடை விடுமுறையில் தங்களது ஊர் தேவகோட் டைக்கு என்னை வரச்சொன்னார்கள். நான் சென்றதும் சிவ பூசை பற்றிய நூல்கள் பலவற்றை என்னிடம் தந்து அவற்றில் வரும் திருவுருவங்களை வரையச் சொன்னார்கள்.

இதற்கிணங்க நான் கோடை விடுமுறையில் மூன்றுமுறை சென்று வரைந்து வந்தபோது சைவ சித்தாந்த சரபம் சிவத்திரு ஈசானசிவாச்சாரிய சுவாமிகள் பார்வையிலும் திருவாடானை சிவத்திரு ஐயாமணிகுருக்கள் அவர்களது பார்வையிலும் வைத்து திருத்தம் செய்து பின் வெளியிட இருந்த தருணம் செட்டியார் அவர்கள் சிவனடி சேர்ந்துவிட்டார்கள். வரைந்த படங்கள் அவர்களிடமே இருந்துவிட்டன.

பின்னர் 1974 இல் நான் தமிழாசிரியர் பணியிலிருந்து ஓய்வு பெற்றபின் முன்வரைந்த நினைவில், சிவபிரானுடைய திரு உருவங்களைமட்டும் வரைந்து வந்தேன். 1986 ஆம் ஆண்டு திசம்பரில் காஞ்சி காமகோடிப் பெரியவர் ஸ்ரீசந்திரசேகரேந்திர சரசுவதிசுவாமிகளைக் கண்டு தரிசித்து இப்படங்களை அவர்கள் திருமுன் வைத்தேன். அம்முனிவர் பெருமான் இப்படங்களை இருதினங்கள் கண்ணுற்று இரண்டொரு திருத்தங்களையும் செய்தருளி வாழ்த்தி நல்லருள் புரிந்தார்கள்.

பின்னர் இப்பட வரிசைகளை வெளியிட என் உள்ளம் விரும்பியதெனினும் வழிதெரியாது திகைத்த சமயம் என் நண்பர் முருகனடித்தொண்டர் திரு இரா. கிருட்டினன் அவர்கள் "நீங்கள் தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழகத் துணைவேந்தர் அவர்களை, இதுசமயம் காண முயலுங்கள்; வெற்றி கிடைக்கும் காரணம்? நீங்கள் செய்துள்ள ஆய்வோ சிவலிங்கம் பற்றியது. இதுசமயம் துணைவேந்தராக இருப்பவர்களோ பெருமதிப்பிற் குரிய டாக்டர், அகத்தியலிங்கம் அவர்கள். இரண்டுமே சிவ லிங்கம் பற்றியவை. வெற்றி கிடைக்கும்" என்றார்.

அதன்படி தஞ்சை தமிழ்ப்பல்கலைக்கழகக் கட்டடக்கலைத் துணைத்தலைவர் டாக்டர் கோ. தெய்வநாயகம் அவர்களது துணை கொண்டு துணைவேந்தர் அவர்களைப் பார்த்தேன். அப் பெருமகனாரவர்கள் இச் 'சிவவடிவங்கள்' ஆய்வுப் பகுதி களைப் பார்த்து 'குறுகிய கால ஆய்வுத்திட்ட'ப் பணியில் இதனைச் செய்ய அருள்கூர்ந்தார்கள். இதற்குப் பல்கலைக் கழகப் பதிவாளர் திரு டாக்டர் பெ. சின்னையன் அவர்களும் துணைப்பதிவாளர் திரு இரா. சுப்பராயலு அவர்களும் உதவி களைச் செய்தார்கள்.

இந்த ஆய்வு சிறப்புற எனக்குத் துணை நின்றவை அறிஞர் பெருமக்கள் பலர் எழுதியுள்ள பல நூல்கள் ஆகும். அடுத்து சிவாச்சாரியர்கள் பலர்தம் அறிவுரைகளும் மற்றும் திருக்கோயில் களில் நான் பார்த்தவையும் கேட்டவையும் ஆகும்.

இந்த ஆய்வினில் சிவத்தின் தொன்மை, மூவகை வடிவம் மந்திர, இயந்திர, இயற்கை செயற்கைப் பொருள்களில், மானிட வடிவில், விலங்குவடிவில், சிவபிரானது வடிவங்கள் படத்துடன் விளக்கப்பட்டுள்ளன.

இந்நூல் சிறந்து விளங்க திருவாவடுதுறை ஆதீனத்தின் 23 ஆவது குருமகா சந்நிதானமாக எழுந்தருளியிருக்கும் திருப்பெருந்திரு சிவப்பிரகாசதேசிக பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள் நல்லருள் புரிந்து ஆதின நூல்நிலையத்தில் நூல்கள் பலவற்றைப் பார்க்கவும் ஆவுடையார் கோயில் மதுரை ஆகிய இடங்களில் உள்ள தங்கள் ஆதீன மடாலயங்களில் தங்கி ஆய்வு செய்யவும் இத்துடன் ஆதீன வெளியீடான திருமந்திரப் பதிப்பில் வந்துள்ள யந்திர வடிவங்களை இச்சிவ வடிவ ஆய்வில் சேர்த்துக் கொள்ளவும் கருணைபாலித்தார்கள்.

இந்த ஆய்வில் சிறப்பிடம் பெறுபவை சிவவடிவப் படங்களாகும். இதற்குரிய புகைப் படங்கள் மற்றும் சில செய்திகளை எனக்குத் திரட்டித் தந்தவர்கள் சென்னை திருவல்லிக்கேணி திருப்புகழ் சபைத்தொண்டரும் 'அருணகிரிநாதர் அடிச்சுவட்டில்' 'மயிலை கும்பாபிடேக மலர்' இவற்றின் ஆசிரியருமான குடந்தை வலைபப்பேட்டை திரு. இரா. கிருட்டினன் ஆவார்கள். இவரும் நானும் மயிலை கும்பாபிடேக மலரில் மகேசுவர வடிவங்கள்' என்னும் தலைப்பில் படவிளக்கங்களுடன் விரிவான கட்டுரை ஒன்றை இடம்பெறச் செய்திருந்தோம்.

மற்றும் சில படங்களை எனக்கு வரைந்து தந்தவர்கள் திருச்சிராப்பள்ளி பீமநகர் ஓவியர் திரு டி. எஸ். இராமு அவர்களும் பாரத அரசின் விருது பெற்ற சுவாமிமலை தேவசேனாபதி அவர்களின் மகன் இராதாகிருட்டினன் அவர்களும் ஆவர்.

இப்பணி நிகழ்ந்துவரும் இடைநாட்களில் கட்டடக்கலைத் துணைத்தலைவர் திரு கோ. தெய்வநாயகம் அவர்கள் இப்பணி தொடர்பாக நல்லாற்றினைச் சுட்டி ஊக்க மளித்து வந்தார்கள்.

மற்றும் அறிஞர் பெருமக்கள் சிலரும் உற்சாகமூட்டிவந்தார்கள் இத்தகைய நல்லோர்களுக்கும் மற்றும் இதற்கு மூலகாரணமான தமிழ்ப்பல்கலைக்கழகத்து முன்னாள் துணைவேந்தர் மாண்புமிகு டாக்டர் ச. அகத்தியலிங்கம் அவர்கட்கும், பதிவாளர் டாக்டர் பெ. சின்னையன் அவர்களுக்கும், துணைப்பதிவாளர் திரு இரா. சுப்பராயலு அவர்கட்கும் எனது நன்றி கலந்த வணக்கத்தைச் செலுத்திக் கொள்கிறேன்:

இந்நூல் நூலாக்கம் பெற்று விரைந்து வெளிவருவதற்கு உறுதுணை புரிந்த தமிழ் பல்கலைக்கழக துணைவேந்தர் மாண்புமிகு முனைவர் சி. பாலசுப்பிரமணியனார் அவர்களுக்கும் பதிவாளர், முனைவர் இராம முத்தையன் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

தஞ்சை சரபோசி அரசினர் கலைக்கல்லூரியில் தமிழ்த் துறையில் பணியாற்றும் எனது மகன் செல்வன் சிவ. திருச்சிற்றம்பலம் இப்பணியில் எனக்குத் தளர்ச்சி தோன்றாது உறுதுணையாக இருந்தனன். இவனுக்கு என் நல்வாழ்த்துக்கள்.

இந்த ஆய்வு நூலில் வரும் செய்திகள் பலநூல்களின் வாயிலாகப் பெறப் பெற்றவை எனினும் சில அவ்வப்போது அறிஞர் பெருமக்களிடமிருந்து கேட்டவையும் நேரில் சென்று பார்த்தவையும் அடியேனது எண்ணமும் சேர்ந்ததாகும். குறைகள் பல இருக்குமெனின் அறிஞர் உலகம் பொறுத்தருளி இந்நூலை ஏற்க வேண்டுகின்றேன்.

ஒன்றுக்கும் பற்றாத எளியேனையும் இவ் ஆய்வினை தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழக வாயிலாக வெளிவரச் செய்ய அருள்பாலித்த எனது வழிபடு கடவுள் இடைமருதுறையும் மகாலிங்கப் பெருமானையும் தில்லைச் சிற்றம்பலத்தில் உலகுய்ய நடமாடும் நடராசப் பெருமானையும் என் மனமொழி மெய்களால் வாழ்த்தி வணங்குகிறேன்.

தஞ்சாவூர்
1—12—91

அன்பின்,
ம. சிவகுருநாத பிள்ளை.

# சிவ வழிபாடுகள்

## 1: சிவத்தின் தொன்மை

நீராரும் கடலுடுத்த நிலவுலகின்கண் முன்னைப் பழமைக்கும் பழமையாயும் பின்னைப் புதுமைக்கும் புதுமையாயும் விளங்குவது சைவ சமயம். 'சிவ வழிபாடே உலகில் மிக்க பழமையானது' என்பர் சர்ஜான் மார்ஷல்[1]. 'சைவத்தின் மேற்சமயம் வேறில்லை அதிற்சார் சிவமாம் தெய்வத்தின் மேற் றெய்வமில்லை'[2] என்பது ஆன்றோர் வாக்கு.

பிற சமயக் கொள்கைகளைப் புறந்தள்ளாது அவை அனைத்தும் உயிர்களின் பக்குவத்திற்கு ஏற்றபடி இறைவன் கருணையினால் அமையப் பெற்றன எனக் கொண்டு அவற்றின் வேறான சிறப்பு சித்தாந்தக் கொள்கையினைத் தன்னகத்தே கொண்டு திகழ்வது சைவ சமயமாகும்.

சைவ சமயத்தின் முழுமுதற் கடவுள் சிவன். சிவம் என்ற சொல்லுக்கு மங்களம் என்று பொருள் உண்டு. மங்கள வடிவினனாய சிவன் மங்களங்கள் அனைத்தும் நல்கும் தன்மையன். எண்குணத்தானாய சிவன் ஆதியும் அந்தமும் இல்லா அருட் பெருஞ்சோதி வடிவினனாவான்.

தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் இறைவனாய் விளங்கும் பெற்றியன். ஒரு நாமம் ஓர் உருவம் இல்லாத சிவனுக்கு ஆயிரம் திருநாமம் பாடித் தெள்ளேணம் கொட்டுவது[3] சைவ சமயம். சிவன் ஒப்புடையனல்லன். ஒருவனல்லன்.

ஓரூரனல்லன் ஓர் உவமனில்லி. அவனருளாலே அவன்தாள் வணங்கும் பெற்றியில் நின்று பக்தி செய்து அவனருளே கண்ணாகக்காணின் அல்லால் இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவ்விறைவன் என்றெழுதிக் காட்டொணாத்[4] தன்மையன் சிவன். அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்திருக்கும் பரிபூரண வடிவினனாய சிவபெருமானுக்கு உருவமைத்து வழிபாடியற்றும் தத்துவ நெறியைக் குறித்து,

'குறிகளும் அடையாளமும் கோயிலும்
நெறிகளும் அவர் நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
பொறியிலீர் மனம் என்கொல் புகாததே' [5]

என்று பேசுகிறார் அப்பர்.

விறகிற் தீயைப் போல், பாலிற் படுநெய்போல் மறைய நின்றுள மாமணிச் சோதியாகிய சிவனை [6] உருவ வடிவிலும் அருவ வடிவிலும் கற்பனை வடிவிலும் இன்னோரன்ன பல்வகையாலும் கண்டு தொழுது களிப்புற்றனர் நம் முன்னோர்.

அவற்றை ஒரு சிறிது தொகுத்து ஆய்வதே 'சிவ வடிவங்கள்' எனும் இவ்வாய்வின் கருதுகோளாகும்.

## 1:2 சிவவடிவங்கள்:

மூவகை வடிவங்கள்

உலக உயிர்கள் அனைத்தும் உய்யும் வண்ணம். முழுமுதற் பொருளாய சிவன் கொண்ட வடிவங்கள் உரு, அரு, அருவுரு என மூன்றாகும்.

... ... ... ... ... ... ஏகத்து
உருவும் அருவும் அருவுருவுமாகி
வருவ வடிவும் பலவாய் .........[7]

எனக் குமரகுருபரர் கூறுகிறார்.

இம்மூன்றையும் தத்துவம், மூர்த்தி, பிரபாவம் என்று ஆகமங்

கள் கூறும். உரு(சகளத்திருமேனி): நான்முகன், திருமால், உருத்திரன் மகேசன், என்னும் நான்கு வடிவங்களாகும்.

அரு (நிட்களத்திருமேனி): வடிவம் இல்லாதது. இது சிவம், சத்தி, விந்து, நாதம் என்றும் நான்காகும்.

அருவுரு(சகள நிட்களத்திருமேனி):வடிவம் இல்லாததுமான சிவலிங்கத் திருமேனியாகும்.

இந்த மூன்றினையும் சிற்பக் கலை நூல்களில்

உரு (சகனம்) தலை, உடல், கை, கால், முதலிய உறுப்புகள் அமைந்த நடராசர், சந்திரசேகரர் முதலிய மகேசுவர வடிவங்கள் என்றும்,

அரு(நிட்களம்): உறுப்புகள் எதுவும் இல்லாத சிவலிங்கம் என்றும்,

அருஉரு(சகளநிட்களம்): இந்த அரு, உரு, இரு கூறுகளும் அமையப்பெற்ற முகலிங்கம் எனவும் கூறப்பட்டுள்ளன.

இங்கு முதலில் கூறப்பட்ட உரு நான்கு, அருநான்கு, அரு உரு ஒன்று ஆக ஒன்பதும் நவம்தரும் பேதம் எனப்படும். இவை யாவும் உயிர்களின் பிறப்பை ஒழிக்க இறைவன் கொண்ட கருணை வடிவங்களாகும்.

இவ்வடிவங்கள் இருவினைக்கு ஈடாகும் என்பும் தசையும், இரத்தமும் நரம்பும் கொண்ட வடிவம் போன்றதன்று. கண்ணாடியில் காணும் தோற்றம் போன்றது. விண்வெளியில் தோன்றும் வானவில் போன்றது. இதனை 'வித்யாதேகம்' என்று ஆகமங்கள் கூறும்,

அவற்றின் விரிவார்ந்த விளக்கங்களை இனி முறையே தனித்தனி அதிகாரங்களில் காண்போம்.

குறிப்புகள்

1. Sir John Marshall! In his preface to "Mohendjar and Indus civilization" Vol-I. Page VII

2. அருணாசல புராணம்
3. திருவாசகம் திருத்தெள்ளேணம் — 1
4. தேவாரம்திருத்தாண்டகம் பதி 97/பா 10
5. மேலது திருக்குறுந்தொகை பதி 90/பா 6
6. மேலது மேலது பதி 90/பா 10
7. கந்தர் கலிவெண்பா, அடிகள் 11, 12.

## 2: அருவுருவம்

'சிவ வடிவங்கள்' என்னும் இவ்வாய்வின் முதற்கூறாக அருவுருவ வடிவினதான 'சிவலிங்கம்' குறித்த பல்வேறு செய்திகளை முதற்கண் காண்போம்.

### 2:1 சிவலிங்கம்

சிவவடிங்களில் மிகவும் தொன்மையானது சிவலிங்கம். குணமும் குறியும் கடந்த பேரொளியாகிய இறைவனை ஒரு குறியின்கண் வைத்து வழிபடும் பொருட்டுத் திகழ்வது சிவ லிங்கமாகும்,

சிவலிங்கம் என்ற சொல்லில் 'லிங்கம்' என்னும் தொடர் 'சித்தரித்தல்' எனப் பொருள்படும். சிவபிரான் படைப்பு முதலான ஐந்தொழில்களாலும் பிரபஞ்சத்தைச் சித்தரிக்கின்ற தால் சிவலிங்கம் எனப் பெயர் ஏற்பட்டது என்பர்.

கண்ணுக்குப் புலப்படாத அருவத் திருமேனிக்கும் கண்ணுக் குப் புலப்படும் உருவத் திருமேனிக்கும் மூலமான இருப்பிட மாகிய சிவபெருமானை அறிந்து வழிபடுதற்கு அடையாளமாக விளங்குவது சிவலிங்கம்.

> "காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்
> நீணாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்
> நாணாது தேடியமால் நான்முகனும் காணநடுச்
> சேணாரும் தழற்பிழம்பாய்த் தோன்றியது ........"

இறைவனுக்கு தடத்தம், சொருபம் என்ற இருநிலைகள் உண்டு. இவற்றுள் சொருபம் என்பது தனியல்பு. தடத்தம்

என்பது அரு, அருஉரு, உரு என மூன்று வடிவங்களாக வரும்.

குணம் குறிகடந்த பேரொளியாகிய இறைவனை ஒரு குறியின் கண்வைத்து வழிபடும் பொருட்டுத் திகழ்வது சிவலிங்கம். இது இறைவனது அருஉருவத்திருமேனி: 'சதாசிவத் திருமேனி' எனவும் கூறப்பெறும்.

ஒன்றும் புலப்படாத அருவினின்றும் புலப்படும் ஓர் அண்ட வடிவமான பிழம்புருவானது பற்றி உருவமும், கை, கால் முதலிய உறுப்புகள் எவையும் புலப்படாமை பற்றிய அருவமும் ஒன்றாகக் காணப்படுதலால் இச்சிவலிங்கம் அரு உருவத் திருமேனி எனப்படுகிறது.

"அனுக்ரஉறாய லோகானாம்
லிங்காளி' சமகேச்வர"

உலகங்களுக்குக் கருணை செய்வதற்காகவே லிங்க வடிவில் மகேசுவரர் விளங்கினார்.

ஸர்வாலிங்க மயீ பூமி
ஸர்வம் லிங்க மயம் ஜகத்
ஸர்வம் லிங்கமயம் தீர்த்தம்
ஸர்வம் லிங்கே பிரதிஷ்டிதம்

பூமி எல்லாம் லிங்கவடிவம். அகில உலகமும் லிங்க வடிவம், புனித தீர்த்தங்கள் யாவும் லிங்கவடிவம்.

இது திருமாலும் நான்முகனும் காணும்படி அருளாலே, அவரிடை விண்ணிற்கும் பாதாளத்திற்கும் அனல்பிழம்பாய்த் தோன்றியதே சிவலிங்கமாகும்.

நான்முகனும் திருமாலும் தாம் தாம் பெரியவர் என வாதிட்டு முடிவு தெரிய சிவபிரானை அடைந்தனர். அப்போது அவர்களது அகந்தையை அடக்கி நல்லறிவு தோற்றுவிக்கச் சிவபிரான் மண்ணிலிருந்து விண்ணளவும் அனல் வடிவாய் நின்று, நான்முகனைத் தன் முடியைக் கண்டு வருமாறும், திருமாலைத் தன் அடியைக் கண்டு வருமாறும் பணித்தார்.

நான்முகன் அன்னப்பறவையாய் வடிவெடுத்து விண் வெளியில் பறந்து சென்று திருமுடியைக் காணாது வந்து கண்ட தாகப் பொய்யுரை பகன்றார். திருமால் பன்றி வடிவாகி மண்ணைக் கிளறிச் சென்று திருவடிகளைக் காணாமல் நின்றார். இவ்வாறு இவ்விருவரும் முடியையும் அடியையும் காணாது நிற்க அனல்வடிவாய்ச் சிவபிரான் நின்ற நிலையே இலிங்கோத்பவ மூர்த்தி வடிவாகும்.

"பிரமனும் மாலும் பிரானே நான் என்னப்
பிரமன்மால் தங்கள் தம் பேதமையாலே
பரமன் அனலாய்ப் பரந்து முன்னிற்க
அரனடி தேடி அரற்று கின்றாரே"[2]

இப்பழைய வரலாறு பண்டு நிகழ்ந்த இடம் தமிழகத்தில் பஞ்சபூதத் தலங்களுள் அனல் வடிவாய்ச் சிவனுறையும் திருவண்ணாமலையாகும்.

"வண் மலரானும் வையமளந்தானும்
நண்ணலரியானை ....................."[3]

"விளவார்கனி படநூறிய கடல்வண்ண னும்வேதக்
கிளர்தாமரை மலர்மேலுறை கேடில் புகழோனும்
அளவாவனம் அழலாகிய அண்ணாமலை அண்ணல்
தளராமுலை முறுவல்லுமை தலைவன்னடி சரணே"[4]

இதனால், திருவண்ணாமலையில் தோன்றிய இவ்விலிங்கோத்பவர் 'அண்ணாமலையார்' என்றும் குறிப்பிடப்படுகிறார். இவ்விலிங்கோத்பவ வடிவம் அனைத்துச் சிவாலயங்களிலும் கிழக்கு நோக்கிக் கருவறையினில் மேற்பக்கம் கிழக்குநோக்கியும் கருவறைக் கோட்டத்தில் இருக்கும்.

சிவபிரான் நடுவில் அடிமுதல் விண்ணளவும் எட்ட நெடிய வடிவில் இருக்க, பிரமன் அன்னவடிவில் மேலே பறந்தும். திருமால் பன்றியாக மண்ணைக் கிளறியும் நிற்கும் சிலைவடிவம் இதுவாகும். இன்றும் இச்சிலையின் வலப்பால் நான்முகனும், இடப்பால் திருமாலும் கைகூப்பி நிற்பர், இத்தகைய வடிவம் தென்னாட்டுக் கோயில்களில் காணப்படுவதாகும். (படம் எண் 1)

ஆனால், வட இந்தியாவில் இராஜஸ்தான் ஜோத்பூரில் காணப்படும் ஓவியம் ஒன்று இவ்வாறு உள்ளது.

மத்தியில் பாணலிங்கம் தீச்சுடர்வடிவில் உயர்ந்துநிற்கிறது. இதனிடை ஐந்து முகங்கள் எட்டுகைகளுடன் சதாசிவவடிவில் சிவபிரான் அமர்ந்துள்ளார். திருக்கரங்கள் எட்டிலும் படைக் கலங்கள் எதுவும் இல்லை. இத்தோற்றத்தின் வலப்பால் நான் முகனும் இடப்பால் திருமாலும் நின்ற நிலையில் குனிந்து வணங்கி நிற்கின்றனர். (படம் எண்- 2)

## 2:1:1: சிவலிங்கத்தின் சில தத்துவக் கருத்துகள்

அபிதான சிந்தாமணியில்[5],

ஆக்கமும் அழிவுமாகிய சம்சாரமானது லயத்தை அடை யும்போது, பூதசாலங்கள் யாவும் சிருட்டிகாலத்தில் எவ்வாறு தோன்றினவோ, அவ்வாறே லயத்தை அடைகின்றன. சிவ லிங்கமானது அவற்றைப் படைக்கும் தன்மை வாய்ந்ததாகையால் அதற்கு 'லிங்கம்' என்று பெயர்.

நிட்களமாயும் சாந்தமாயும், மனத்திற்கும் வாக்குக்கும் அப் பாற்பட்டதும், ஆத்மாவுக்கு அப்பாற்பட்டதுமான அதுவே சம்சாரசாகரத்தில் உழலும் சகல பூதாசாலங்களுக்கும் முத்தி யைக் கொடுக்கும் தன்மை வாய்ந்தது. அதுவே எல்லா வற்றிலும் வியாபித்து அவைகளுள் மறைந்து சகல உலகங் களுக்கும் நாயகனாக விளங்குகிறது. அதனிடமிருந்து சிருட்டிக் காலத்தில் சாந்தி தத்துவம் உண்டாயிற்று. சாந்தி தத்துவத் திலிருந்து 'சத்தி தத்துவம்' தோன்றிற்று. சத்தி தத்துவத்தி லிருந்து 'நாதம்' தோன்றிற்று. அந்த நாதமே 'சத்' என்று கூறப்படுவது.

பிந்துக்கு மேற்பட்ட காலங்களில் ஒன்று பிந்துவானது மனோன்மணி என்று கூறப்படுகிறது.

இதனிடமிருந்து ஈசுவரன் தோற்றம்.
ஈசுவரனிடமிருந்து மகேசவரன் தோற்றம்.

மகேசுவரனிடருந்து விட்டுணு தோற்றம்.
விட்டுணுவிடமிருந்து பிரமன் தோற்றம்.

பிரமனிடமிருந்து 3, 30, 300, 3000 என்று முறையே தேவர்களும், இருடிகளும், தானவர்களும், ரசத்தின் வழியே உண்டாகும் பற்பல சீவராசிகளும் அசுரர்களும் உண்டானார்கள்.

இவற்றில் முதலில் கூறப்பட்ட இலிங்கம், சாந்தி, சத்தி என்ற மூன்றும் நிட்களமாகும். (உருவமற்றவை)

சிவமானது சகலம் எனப்படும்.

நாதம், பிந்தும் இரண்டும் 'மிச்ரம்' எனப்படும். நாதமே இலிங்க வடிவமென்றும் பிந்துவே பீடமென்றும் கூறப்படுகிறது. இலிங்கம் சிவவடிவம். பீடம் சத்தி வடிவம். இலிங்கமும் பீடமும் ஒன்று சேர்ந்து ஒன்றாக இருப்பதால், நெருப்பும் உஷ்ணமும் சேர்ந்து ஒன்றாக இருப்பதுபோலச் சிவமும் சக்தியும் சேர்ந்து ஒன்றாக இருக்கிறது.

## 2:1:1:1 இலிங்கத்தின் தத்துவம்

இலிங்கத்தின் பீடமும் இலிங்கமும் சதாசிவம் வடிவம். அது கன்மசாதாக்கிய வடிவமெனவும் படும். பீடம் சத்தியையும் இலிங்கம் சிவத்தையும் குறிக்கும். இந்த சாதாக்கியத் திருமேனி சர்வ ஆன்மாக்களையும் சர்வ அண்டங்களையும், தன்னுள்ளே அடக்கிக் கொண்டிருக்கும் பரம காரணனை விளக்குவதால் உலகத்து மக்கள் தியானித்து வழிபடுவதற்குச் சிறந்த குறியாயுள்ளது. இதனினும் சிறந்த குறி வேறொன்று இல்லை.[6]

## 2:1:1:2: சிவாலயங்களில் சிவலிங்க அமைப்பு [ஆகமங்களில்]

உருவ வழிபாட்டில் சிவலிங்க வழிபாடே மிக்க தொன்மையானது. இலிங்கம் என்பதற்குரிய பொருளை காரணம், சிரணம் சுப்பிரபேதம், வாதுளம் முதலான ஆகமங்கள் அழகாகவும் தெளிவாகவும் கூறுகின்றன. "எந்த இடத்தில் பிரளய



படம் 1 இலிங்கோத்பவர் தமிழ்நாட்டுச் சிற்பம்



படம் - 2. மானுட லிங்க உறுப்புகள்



படம் 3 மானுடலிங்கம் உறுப்புகள்.

படம் 4 புற்றலிங்க அமைப்பு.

காலத்தில் சேதன அசேதனப் பிரபஞ்சங்கள் அனைத்தும் இலயம் அடைந்து, பின்னர் படைப்புக்காலத்தில் எதிலிருந்து மீண்டும் உற்பத்தியாகின்றனவோ அதுவே இலிங்கம் என்பது. லிம் என்பது லயத்தையும் (ஒடுங்குவதையும்), கம் என்பது வெளிவருதலையும் குறிக்கும். இலிங்கம் என்பது சித்தரித்தல் எனப் பொருள் படும் என்றும், சிவபெருமான் படைப்பு முதலான ஐந்தொழில்களாலும் பிரபஞ்சத்தைச் சித்தரிக்கின்றதால், சிவலிங்கம் எனப் பெயர் ஏற்பட்டது. என்றும் வருணப்பத்ததி என்னும் நூல் விளக்கம் கூறுகிறது. "தேவர்கள் செல்வத்தை அடையும் பொருட்டு, உமது விசித்திர ரூபமாகிய மகாலிங்க மூர்த்தியை அபிடேகம் செய்து வழிபட்டார்கள்" என்று 'ருக்' வேதத்திலும் (5:313) சிவலிங்கத்தைப் பற்றிய குறிப்பு வந்துள்ளது.

சிவலிங்கத்தில் பீடமாக உள்ள பகுதி விந்து என்னும் தத்துவத்தையும், இலிங்கமாக உள்ள பகுதி நாதம் என்னும் தத்துவத்தையும் குறிக்கும் என்றும் நாதவிந்து வடிவான இவ்விரண்டையும் ஒன்றாகச் சேர்த்தலே பிரதிட்டை என்றும் யோகஜம் எனும் ஆகமம் கூறுகிறது[7]

## 2:1:3 சிவலிங்கம்

1. சிவலிங்கமானது மூன்று கூறுகளை உடையது. அடிப்பாகம் நாற்கோண வடிவமாய் நிலத்திற்குத் தலைவனான படைப்புக் கடவுளாய பிரம பாகத்தை உணர்த்துவதாகும்.

2. மத்திபபாகம் எட்டு பட்டையுடைய எண்கோண வடிவமாய் வாமை, சேஷ்டை, ரௌத்திரி, காளி, கலவிகரணி, பலப்பிரதமனி, சர்வபூததமனி என்னும் திருமாலின் எட்டு சத்திகளும், அதனோடு பொருந்த இருக்கும் ஆவுடை எனப்படும் திருப்புறம்பயத் தலவரலாற்றில் மதுரை ஆதீன கர்த்தர் சோமசுந்தர தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள் கூறியுள்ளது மனோன்மணியாகிய ஒன்பதாவது சத்தியும் சேர்ந்து திருமாலின் ஒன்பது சத்திகளாகி, நீருக்கு அதிபதியான காத்தல் எனப்படும் ஸ்திதி தலைவனான திருமாலின் பாகத்தை உணர்த்தும்.

3. மேலுள்ள பாகம் நெருப்பிற்குத் தலைவனும் அழித்தல் மறைத்தல், அருளல், ஆகிய முத்தொழில்களுக்குத் தலைவனான சிவபாகமாகும்.

பூமிக்கு அதிபதியான பிரமபாகம் பூமிக்குள் மறைந்து ஒடுங்கி நிற்கும். நீருக்கு அதிபதியான திருமாலின்பாகம் அபிடேக நீரைத் தாங்கி விரிந்து நிற்கும். நெருப்புக்கு அதிபதியான சிவபாகம் மேலாங்கி சோதிபோல் ஒளியுடனிருக்கும்.

இம்மூன்றும் சேர்ந்த அருவமும், உருவற்ற ஆதியும் அந்தமுமில்லா அரும்பெருஞ்சோதி வடிவே சிவலிங்கமாகும்.

அரசமரம் சுற்றிவருபவர் எல்லோரும் சொல்லிவரும்

''மூலதோ பிரஹ்ம ரூபாய
மத்யதோ விஷ்ணு ரூபிணி
அக்ரதோ சிவரூபாய
விருஷ ராஜாயதே நம:

என்ற மந்திரம் சிவலிங்கத் தத்துவத்தை வலியுறுத்துகிறது.

உலகிலுள்ள எல்லா மரங்களும் அவற்றின் விதைகளும் கனிகளும் எல்லாவகையான முட்டைகளும், சீவராசிகளும், பிண்டங்களும். பூமியும், சந்திரனும், சூரியனும், நட்சத்திரங்களும், அண்டங்கள் பலவும் ஆகாயமும், சிவலிங்கத்தின் மேல் பாகம் போல அமைந்திருப்பது சிந்திக்கவேண்டியது.

## 2 : 1 : 2 சிவலிங்கம் : அறிவியல் தத்துவம்

நிர்க்குணம் — சிவலிங்கம்

சிவலிங்கம் என்பது என்ன? இலிங்கம் என்றால் குறியீடு (சின்னம்) என்று பொருள். சிவன் என்றால் பரம்பொருள். எனவே சிவலிங்கம் என்பது பரம்பொருளாக சிவனைக் குறிக்கும் குறியீடு ஆகும். நாட்டுக்கொடி அந்நாட்டின் குறியீடாக இருப்பது போல ஆகும்.

நம் முன்னோர் ஓர் அழகிய வடிவத்தை இதற்கு எடுத்துக் கொண்டார்கள், ஒரு முட்டை வடிவமான கோள வடிவம்.

அதை கல், மரம், களிமண் இவற்றால் செய்து அதனைச் சிவ லிங்கம் என்று கொண்டார்கள். இந்தக் குறிப்பிட்ட வடிவத்தை ஏன் தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள்?

நாம் வாழ்வது சூரியமண்டலத்தில் சூரியனைச் சுற்றிச் சூழலும் கோள்களில் ஒன்றாக பூமியில் இக்கோள்கள் ஒவ்வொன்றும் இயங்கி வரும் பாதை முழுவட்டமானதன்று. முட்டை வடிவமான பாதையில்தான் இவை வானவெளியில் செல்கின்றன என்ற உண்மையை நம்மவர் கண்டனர். ஏன்? பிரபஞ்ச முழுவதுமே இயங்கி வரும் விண்மீன் மூலமண்டலங்களே (GALAXY) இந்த கதியின்தான் செல்கின்றன.

ஆல்பர்ட் ஐன்சுடன் என்ற மிகப்பெரிய அறிவியல் மேதை வளைந்தும் முட்டைவடிவத்திலும் இருப்பதாக நிரூபித்திருக்கிறார். சந்திரனுக்குச் செல்லும் விண்வெளிக் கலங்களும் இராக்கெட்டுகளும் இந்த நீண்டகோளகதியில் தான் செல்கின்றனவே தவிர நேரான பாதையில் அல்ல.

இயற்பியல் (Physics.) விஞ்ஞானிகள் இவ்வுலகத்திலும், பிரபஞ்சத்திலும் இருக்கும் பல்வகைப் பொருள்கள் எல்லாம் வெவ்வேறு வகையான தனிமங்களில் (Elements) ஆனவை என்றும், தனிமங்களின் மிகச்சிறிய துகள்கள் அணுக்கள் என்றும் கூறுவார்கள்.

அணு என்பது மின்ஆற்றல் கொண்ட உட்கரு. அதனைச் சுற்றி நீள்வட்டப் பாதையில் சுழலும் மின் அணுத்துகள்கள் (Electrons) கொண்ட நுண்ணிய தனிமக் கூறுகளாகும். இந்த உட்கரு புரோட்டான் என்ற நேர்மின்துகளும் நியூட்ரான் என்ற மின் இல்லாச் சிற்றணுத்துகளும் கொண்டதாகும்.

இந்த மின் அணுத்துகள்கள் பொருள்களில் மையத்தைச் சுற்றிச் செல்லும் பாதையும், பூமி சூரியனைச் சுற்றும் பாதை போல நீள்வட்ட வடிவமானது. ஆகவே, அணுக்களையே சூரிய மண்டலத்தில் மிகச்சிறிய வடிவம் எனலாம்.

மனித உடலை எடுத்துக் கொள்வோம். தூல உடலுக்குள்ளே சூக்கும உடல் என்று ஒன்று உள்ளது. எண்ணங்களாலான இவ்வுடல் அதீதமான ஆன்மசக்தி கொண்டவர் கண்ணுக்கு மட்டும் புலப்படும். இந்த சூட்சம உடலும் நீள்வட்ட வடிவில் உள்ளது. தோற்றுவிக்கப்பட்ட எல்லாவற்றிலும் இந்த உண்மையைத்தான் அக்கால முனிவர்கள் கண்டனர். எல்லையற்ற பரம்பொருளாகிய சிவபிரானின் வெளியீடுதான் அனைத்துப் படைப்புகளுமே.

தோற்றமற்ற பொருள்தன்மைதான் பரசிவம். இவ்வெல்லையற்ற அறிவிலிருந்து இந்த எல்லையற்ற ஆற்றலிருந்து அகண்ட சக்திலிருந்து, இந்த அகண்ட ஆன்மாவிலிருந்து பரமாத்மா (Universal spirit) தோற்றுவிக்கப்பட்ட உலகமும், உலகத்தில் உள்ள எல்லாமே நீள்வட்ட வடிவில் உள்ளன. எனவே; இந்த நீள்வட்ட முட்டைவடிவம் சிவமாகிய பரம்பொருளின் குறியீடாகிறது.

மேலும் நீள்வட்ட வடிவத்தில் உள்ள கல்லோ வேறு பொருளாலான வடிவமோ ஒரு வட்ட வடிவமாக அடிப்பாகத்தில் நிறுவப்பட்டிருக்கிறது. காரணம்? ஒரு வட்டத்தில் எல்லாப் புள்ளிகளும் முதலும் முடிவுமாக உள்ளன. ஒவ்வொரு செயலும் அதற்குப் பின்வரும் விளைவுக்குக் காரணமாகவும், அதற்கு முந்தைய செயலின் பின்விளைவாகவும் அமைகிறது.

ஓர் எண்ணம் அதன் பின்வரும் எண்ணம். மேலும் ஓர் எண்ணம் ஒன்று ஒரு சங்கிலிவட்டம் போல் அமைகின்றன. வட்டத்தில் எந்தப் புள்ளியும் முதலாகவும் நடுவாகவும் முடிவாகவும் இருக்க முடியும். இது போன்றே, இறைவனும் அகண்ட எல்லையற்ற பரசித்து. ஆதலால் அவரது மையப் புள்ளி எல்லாவிடத்திலும், அவரது பரிதி எங்குமில்லாமலும் உள்ளன. ஆகவேதான் அகண்ட ஆன்மாவின் பரமாத்மா இந்த நித்த, சித்த அனந்தமான பரமாத்மாவின் குறியீடாக, ஒரு வட்டத்தைக் கொண்டனர்.

தோற்றுவிக்கபட்ட பிரபஞ்சம், தோற்றமில்லாப் பரம்பொருளாகிய விட்டத்திலிருந்து வெளிவருகிறது. ஆகையால்

தான், நீண்ட வட்ட வடிவமான வடிவத்தை வட்ட வடிவ மான வடிவத்தில் பதித்தார்கள். ஒன்று தோற்றம் காட்டாப் பரம்பொருள். மற்றது தோற்றுவிக்கப்படுவது. (பிரபஞ்சம்) வட்டவடிவில் குறிக்கப்படும். முன்னையதில் நீள்வட்ட வடி வில் குறிக்கப்படும் பின்னையது நிலைநிறுத்தப்படுகிறது.

தோற்றமற்றது முழுவட்டம். தோற்றுவிக்கப்படுவது நீள்வட்டம். பின்னையது முன்னையதால் புரக்கப்படுகிறது அதுவே முன்னையதுடன் ஒன்றியும் விடுகிறது.

ஆக தோற்றமில்லாப் பரம்பொருளும் தோற்றுவிக்கப் பட்ட உலகும் ஒரே நாணயத்தின் இருபக்கங்களாகும். இந்த அருமையான சித்தாந்தத்தை ஒரு மாமுனிவரின் அற்புத வாய்மொழியில் காணமுடிகிறது.

பூர்ணமத: பூர்ணமிதம்
பூர்ணாத் பூர்ணமுதச்சயதே
பூர்ணஸ்ய பூர்ணமாதாய
பூர்ணமேவா வசிஷ்யதே உபநிடதங்களுக்கு ஏது அமைந்துள்ள நான்கு வகையான சாந்திக் கூறுகளில் ஒன்று

ஓம் சாந்தி சாந்தி சாந்தி

கடந்து நிற்கும் பரம்பொருள் சிவம். எல்லையற்ற அறிவு நித்தியப் பொருள் குறைவற்ற முழுமைப் பொருள் பூர்ணம்) தோற்றுவிக்கப்பட்ட உலகமும் நிறைமையானது. ஏன் எனில் அது பரம்பொருளின் வெளியீடாகும். எங்கெல்லாம் தோற்றம் இருக்கின்றதோ அங்கெல்லாம் பரம்பொருள் இருக்கிறது. மின்சக் இல்லாமல் மின்சாதனங்கள் எதுவும் இயங்காது. வானொலிப் பதிவு நாடா, மின்குமிழ், டிரான்சிஸ்டர் இவற்றிற்கெல்லாம் ஆதாரமான இயங்கும் மூலசக்தி மின்சாரம். இதுபோல் பல்வேறு பெயர், வடிவங்கள் கொண்ட இந்த பௌதீக உலகத்தின் ஒவ்வொரு அணுவிலும், வடிவத்திலும், பெயரிலும் இறைவன் உள்ளான். இந்த உண்மையை மூன்று மொழிகளில் அழகாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

புருட ஏவஇதம் சர்வம்
யத்பூதம் யச்ச பவ்யம்

இருந்தவை யாவும் இருப்பவை யாவும் இனிவரும் யாவும், எல்லாம் அவன். எல்லாவற்றிலும் அவன் ஒருவனே உளன். "அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய் நிறைந்தவன் அவன்.[9]

ஆகவே, சிவலிங்கம் என்பது பரம்பொருளின் கடந்த பர நிலையையும் அந்தர்யாமியாக உள்ள நிலையையும் குறிக்கும் சின்னம். ஆனால், இந்தப் பேருண்மை சாதாரண அறிவுக்கு அப்பாற்பட்டது. ஆகையால்.எளிதாகப் புரிந்து கொள்வதற்காக பரம்பொருளை உருவமுள்ள வடிவுடைய தூலப் பொருளாகக் காட்டுகிறார்கள்.

## 2 : 1 : 3 சிவலிங்கத்தின் அமைப்பு

நாம் ஆலங்களில் கண்டு தரிசிக்கும் சிவலிங்கத் திருமேனி தோற்றத்தில் ஒரே வடிவமாய்க் கரணப்படிலும் தனித்தனி மூன்று பகுதிகள் ஒன்றாகச் சேர்த்து அட்டபந்தனம் (மருந்து) செய்யப்பட்டுள்ளது.

1. உச்சிப்பகுதி (ஆவுடையாருக்குமேல் சிவபாகம்)
2. அடி நான்முகன் பிரமபாகம்
3. நடு திருமால் (விட்டுணு) பாகம்

படம் 3 (அ) உருத்திரபாகம் மூன்று பகுதியாக அடியில் நான்கு பட்டை. நடுவில் எட்டு பட்டை, நுனியில் வட்ட வடிவம் கொண்டது. முதல் சிவபாகத்தை அதன் நான்கு பட்டை வடிவத்தை பூமிக்குள் அழுந்தவைத்து பின் முதலில் பிரமபாகத்தையும் அடுத்து விஷ்ணு பாகத்தையும் மேலிருந்து கீழே எட்டு பட்டை வடிவப் பகுதிவரை வைக்கவேண்டும். (படம் 3 ஆ & 3 இ) பின் மேலே தெரிவது சிவபாகத்தின் திருமுகமும் திருமுடியுமாகும். இது முறையாக அமைக்கப்பட்ட சிவலிங்கமாகும். (படம் 3(எ)

பழமையான ஆலயமூல இலிங்கத்தை அதன் இருப்பிடத்தி லிருந்து மற்ற மூர்த்திகளைப் பெயர்த்து எடுப்பதுபோல்எடுத்தல் இயலாது. காரணம்? உருத்திரபாகத்தில் மூன்றில் ஒரு பங்கான அடிப்பாகப்பகுதி பூமிக்குள் இருப்பதால் ஆகும்.

சில சிவலிங்கங்கள் மேற்கூறிய அமைப்பின்படி இன்று பிரம பாகம் விட்டுணுபாகம் இரண்டும் ஒன்றாக இருக்க நடுவில் உள்ள குழியில் பாணம் மட்டும் பொருத்தப்பட்டிருக்கும்.

மற்றொருவகை மூன்று பாகங்களுமே பிரிவின்றி ஒரே பொருளால் செய்யப்பட்டிருக்கும். இவை பெரும்பாலும் மரத் தாலும் உலோகங்களினாலும் சுதையாலும் தயாரிக்கப்பட்டவை. இவற்றுள் மரத்தால் (அத்தி, சந்தன, மரக்கட்டையால்) தயாரிக்கப்பட்டவை. கோயில் திருப்பணிக் காலத்தில் மூலலிங் கத்தை 'பாலப் பிரதிட்டை' புதிய கோயில் கட்டும்பொழுதும் பாலாலயம் செய்தே கட்டத் தொடங்க வேண்டும். செய்து வழிபட்டுவந்து கோயில் கும்பாபிடேகம் ஆனபின் கைவிடப் படுவது ஆகும்.

## 2:1:3:1: சுயம்பு (புற்று) லிங்க அமைப்பு

பூமியின் தானாகத் தோன்றிய புற்று வடிவமே சிவபாகமாக இருக்கும். இதற்குப் பிர்மபீடம்வி ட்டுணுபீடம்மேலும் கீழும் இரு பிரிவாக இராமல் செங்குத்தாக இரு பிளவாகக் கருங்கல்லால் செய்து புற்று வடிவின் முன்னும் பின்னும் வைத்து இணைக்க வேண்டும். இப்படியில்லாது பிர்மவிட்டுணு பீடத்தைத் தனித்தனி செய்து மேலிருந்து கீழே வைத்தால் சிவபாகமாகிய புற்று சிதைந்துவிடும். (படம் 4)

இவ்வகைப் புற்றுமண் (பிரிதிவி) வடிவங்களுக்குப் பூசனைக் காலத்தில் மேல் பகுதியாகிய சிவபாகத்திற்கு உலோகத்தால் ஆன குவளை (கவசம்) இட்டு பீடமாகிய ஆவுடையாருக்கு மட்டுமே அபிடேகம் நடக்கும்.சிவபாகத்திற்கு முக்கிய நாட்களில் சாம்பிராணித் தைலம் புனுகுச் சட்டம். சவ்வாது, முதலான

பல மூலிகைகளின் சேர்க்கையாலான தைலச் சத்துடைய பொருள்களைத் தடவவேண்டும்.

இவ்வாறு புற்றுவடிவினில் விளங்கும் சிவலிங்கங்கள் பலவிடங் களில் உள்ளன. அவற்றுள் குறிப்பாகக் கூறப்படும் இரு இடங்கள் வருமாறு.

1. திருவாரூர் —புற்றிடங்கொண்டார் (வன்மீகநாதர்)
2. திருவையாறு செம்பொற்சோதியார் ஐயாறப்பர் (பஞ் சநதீசுவரர்)

## 2:1:3:2: சிவலிங்க அளவு

பஞ்சசூத்திரநிருணயம் (சித்தாந்த சேகரத்திலும் சைவா கமங்களிலும் கூறியுள்ளபடி) இலிங்கத்தின் சிரோவிஸ்தார மானது. அதன் உயரத்திற்குச் சமமாக இருக்க வேண்டும். அதன் சுற்றளவானது சிரோவிஸ்தாரத்தைப் போல் மூன்று பங்கு இருக்க வேண்டும். அதைப் போலவே இலிங்கபீடமும் (பீடத்தின் விஸ்தாரம்) இருக்கவேண்டும்.

அதன் ப்ராணாளிகையும் (ப்ராணாளிகை என்பது நீர் விழுவதற்காக பீடத்தில் இருந்து நீட்டி வைக்கப்பட்டிருக்கும் கோமுகி என்னும் பாகம்) அப்படியே இது பஞ்சசூத்திர நிருணய மாகும்.

இதன்பொருள்: லிங்கத்தின் மஸ்தகத்தின் விஸ்தாரத்தை இலிங்கத்தின் உயரத்திற்குச் சரிசமமாக இருக்கும்படி செய்து அதைப் போல் மூன்று பங்கு சூத்திரத்தை சுற்றக் கூடிய பருமன் உள்ளதாகச் செய்து அதற்குச் சமமாக வட்டமாகவோ சதுரமாகவோ பீடவிஸ்தாரத்தை மேலும் கீழும் கற்பிக்க வேண்டும்.

பீடத்தின் உயரமானது இலிங்கோச்சத்தைப் போல் இரண்டு பங்கு இருக்கவேண்டும். பீடத்தின் மத்தியில் இலிங்கத்தைக் காட்டிலும் இரண்டு பங்கு பருமன் இருக்கும்படி பீடத்தின் உயரத்தில் மூன்றில் ஒருபாகம் இருக்கும்படி கண்டத்தில் கற்

பித்து. அதற்கு மேலேயும் கீழேயும் இரண்டு அல்லது மூன்று வப்ரங்களைக் கற்பித்து இலிங்க விஸ்தாரத்தின் ஆறில் ஓர் அமிசத்தினாலே பீடத்தின் மேலே பாஹ்யமேகலையைக் (வெளி வரம்பை) கல்பித்து அதன் மத்தியில் சம்பந்தமுடையதான பள்ளத்தை அதற்குச் சமமாகக் கல்பித்து, பீடத்திற்கு வெளியில் இலிங்கத்திற்குச் சமமான நீளமுடையதும் அதன் அடிப்பக்கத்தில் நீளத்திற்குச் சமமான விஸ்தாரமுடையதும் அதன் நுனியில் அதில் அரைப்பங்கு விஸ்தாரமுடையதும், அதில் மூன்றில் ஒருபங்கு மத்தியில் பள்ளமுடையதும் பீடத்தைப் போல் மேகலையுடையதாகவும் பிரமாளிகையைக் (கோமுகத்தை) கல்பிக்க வேண்டும் என்று சுட்டப்படுகிறது.

## 2.1.3.3 நின்ற, இருந்த, கிடந்த, கோலத்துச் சிவலிங்கங்கள்

தெய்வச் சிற்ப வடிவங்கள் தோற்றத்தில் மூவகை வடிவங்களில் (உரு. அரு, அருஉரு) உருவ வடிவங்களில் நின்ற' அமர்ந்த, கிடந்த, போக, யோக, போர்க்கோலம் முதலிய நிலைகளைக் காணலாம். ஆனால் அருஉருவில் இவ்விதப் பல்வகைத் தோற்றங்களை வெளிப்படையாகக் காணமுடியாது சிவலிங்கம் அருஉருவத்திருமேனி. எனினும் இதன்கண் நின்ற, இருந்த, கிடந்த கோலங்களைச் சிற்பக்கலை வாயிலாகக் குறித்துள்ள நிலைகள் உண்டு.

திருக்கோயில்களில் காணப்படும் சிவலிங்கங்கள் அனைத்தும் தோற்றத்தில் ஒரே விதமாய் இருப்பதில்லை. குறிப்பிடப்பட்ட விதியின்படி பல்வகை நிலைகளில் விளங்குகின்றன. இவற்றின் ஆவுடைக்கு மேல் விளங்கும் பூசாபாகம் (பாணம்) உயர் அளவில் மாறுபடக் காணலாம். சில மிக அதிக உயரமாகவும் சில நடுத்தர உயரமாகவும் காணப்படும். சில குட்டையாகவும் இருக்கும். இந்த மூவகை உயரங்கள் காட்டும் கோலங்கள்*

---

* கணேசமூர்த்திஸ்தபதி அவர்கள் எழுதிய, ஆலய விக்கிரக நிர்மாண ஆயாதி சிற்பரகசியம்.




படம் 5 சிவலிங்க (1) நின்ற; (2) இருந்த; (3) கிடந்த கோல அமைப்பு-




படம் 6 சிவலிங்க பாண திருமுடி அமைவு (சிரோவர்த்தனம்) 1) தாழங்குடைத்தோற்றம் 2) கோழிமுட்டை (குக்குடாண்டம்) 3. மும்முனைத்தோற்றம் (திரிபுரம்) 4) பாதிமதி (அர்த்தசந்திரன்)

1. மிக உயரமானது நின்றகோலம் (படம் 5/1)
2. நடுத்தரமானது அமர்ந்தகோலம் (படம் 5/2)
3. மிகச்சிறிய அளவு உயரம் கிடந்த (சயனக்) கோலம் (படம் 53)

2.1.4. இனி சிவலிங்க அமைப்பினைக் குறித்த ஆகம, சிற்ப இலக்கணச் செய்திகளைக் காணலாம்.

## 2.1.4.1, சிவலிங்க உச்சி அமைவு (சிரோவர்த்தனம்)

சிவலிங்க பாணத்தின் உச்சிப்பகுதியில் வளைவான பாகத்திற்குச் "சிரோவர்த்தனம்" "சிரோரூபம்" என்று பெயர் இது கருங்கல்லில் மானுடலிங்கத்தைச் சிற்பி உருவாக்கும் போதுஅமைக்கப்படுவதாகும்.

இவ்வித அமைப்பு (படம் 6).

1 தாழங்குடை வடிவு (சத்ராகாரம்)
2. கோழிமுட்டை வடிவம் (குக்குடாண்டாகாரம்)
3. வெள்ளரிப்பழ வடிவு (திரிபுருடாகாரம்)
4. பாதி மதிவடிவம் (அர்த்தசந்ராகாரம்)

இவ்வாறு நால்வகையாகச் சித்தாந்த சாராவளி என்னும் வடமொழி நூலில் சிர்அமைப்புக் கூறப்பட்டுள்ளது. ஆனால் 'மயமதம்' என்னும் சிற்ப நூலில் இந்த நான்குடன் ஐந்தாவதாக 'நீர்க்குமிழித்தோற்றம்' என்ற ஒன்றும் கூறப்படுகிறது.

1. தாழங்குடை வடிவம் (சத்ராகாரம்) பாணத்தின் உச்சி தாழங்குடை வடிவில் நான்கு வித அளவால் அமைக்கப் பெற்றது. இது சர்வ சமலிங்கத்தில் இருக்க வேண்டியதாகும் இவ்வித அமைப்பின் சிவலிங்க பூசை பிராமணர், சத்திரியர் குலத்தினருக்குச் சிறப்பைத் தரும்.

2. கோழிமுட்டை வடிவம் (குக்குண்டாண்டாகாரம்) பாணத்தின் உச்சி கோழி முட்டை போன்று அமைக்கப் பெற்றது. இது அளவால் நான்கு விதமாகி "விமலம், விபுலம்,




படம் 7 சிமலிங்க முக அமைவு (லட்சணோத்தாரம்)

வர்த்தமானம், சீவத்சம்'' எனப்பெயர் பெறும். சுரேட்யலிங் கத்தில் இந்த அமைவு இருக்கவேண்டும். இது சத்திரியருக்குப் பூசிக்கநலம் தருவது.

3. த்ரிபுருடாகாரம் பாணத்தின் உச்சிவளைவு மும்முனை யாக வெள்ளரிப்பழ உச்சிவ்டிவில் இருப்பது. இது அளவால் நான்கு வகைப்பட்டு ''விசயம், சயம், விமானம், இ ம ம்'' அல்லது "விசயம், விமானம், சமம், மித்ரம்'' எனப் பெயர் பெறும். இது 'அநாட்யலிங்கத்தில் இருக்க வேண்டியதாகும் இது வையசிருக்குப் பூசிக்க நலம் தருவது.

4. பாதிமதிவ்டிவம் (அர்த்தசந்த்ராகாரம்) பாணத்தின் உச்சி வளைவு பாதி சந்திரன் அல்லது அரைவட்ட வடிவில் அமைந்தது. இது அளவால் நான்கு வகைப்பட்டு ''அம்ருதம், பூர்ணகும்பம், பலம், குமுதம்'' எனப் பெயர் பெறும். இது ஆட்ய இலிங்கத்தில் காணப்படுவது. இது வேளாளர் சாதியி னர்க்குப் பூசிக்க நலம் தருவது.

இவ்வாறு அமைக்கப்பெறும் உச்சிவளைவு (சிரோவர்த் தனம்): உச்சியில் சிதைவு இருந்தால் அரசருக்கும், செய்தவனுக் கும் ஆகாது. நெற்றியின் மேற்பக்கம் சிதைவு இருந்தால் சிற்பிக்கு ஆகாது. நெற்றி இடையில் சிதைவு இருப்பின் நாட்டிற்குத் துன்பம். அதிகநீளம், குறுகல், மென்மை, பருமன் அரசனுக்கு ஆகாது.

## 2.1.4.2. முக அமைவு (லட்சணோத்தாரம்) படம், 7

இலட்சணம் என்றால் அடையாளம்.

தாரம் என்றால் அமைத்தல், அதாவது வட்ட வடிவ பாணத்தில் முகம் முன்பக்கம் எது எனக்காட்டும் அடையாளம்.

பாண உயரத்தில் மூன்றில் ஒருபங்கு உச்சிப்பகுதியை நீக்க வேண்டும். அடி இருபங்கை எட்டுப் பகுதியாக்கி அடி இருபங்கை. நீக்கி நடுவில் உள்ள ஆறுபாகத்தில் முகம் அமைக்கப்படவேண் டும். இம்முக அமைவு கீழ்க்கண்ட வடிவில் அமைந்த சிரோவர்த்தன பாணங்களில்:

| சிரோவர்த்தனம் | முகஅமைவு வடிவம் |
| --- | --- |
| 1. தாழங்குடை (சத்ராகாரம்) | யானைக்கண் |
| 2. கோழிமுட்டை (குக்குடாண்டம்) | குடை |
| 3. அரைவட்டம் (அர்த்தசந்திரன்) | நீர்க்குமிழி |
| 4. வெள்ளரிப்பழம் | கோழிமுட்டை |

மேலும் சிவலிங்க முக அமைவில்

5. வாழைப்பூ
6. தாமரை
7. இலிங்கம்
8. கூப்பிய கை
9. நெல்
10. யவை
11. அரசிலை
12. முக்கோணம்
13. நீண்ட வட்டம்
14. இரண்டு கத்திகள்
15. சூலம்
16. குறியற்றது

ஆகிய அடையாளங்களும் அமைக்கலாம்:

வழிபடுவோருக்கு எண்வகைச் சித்திகளை அளிக்கும் ஒன்பது வகை இலிங்கங்களில் முறையே தாமரை, வச்சிராயுதம், சத்தி, தண்டம், கத்தி, பாசம், கொடி, கதாயுதம், சூலம் இவை முகத்தில் அடையாளமாக இருக்கும்.

இவ்வித அடையாளங்களில்

யவம் — பிராமணருக்கு

யானைக்கண் — சத்திரியருக்கு

நெல் — வைசியருக்கு

இருகைகூப்பு — வேளாளருக்கு நலம் தருவன.

### 2.1.4.3 பல்வகை சிவலிங்கத் தோற்றங்கள்

சிவலிங்கத் திருமேனிக்கு அமைப்பில் ஒரு விதியுண்டு. இவ் விதிகள் பலவகையாக வெவ்வேறு கருத்துகளை விளக்குபவை யாக நம்நாட்டில் அமந்துள்ளன. அனைத்தும் ஓரே வகையாக இருப்பதில்லை.

*இவ்வாறு அமைந்துள்ள தோற்ற பேதங்கள்*

பொதுவாகப் பாணமும் ஆவுடையாரும் வட்டமாகப் பல இடத்துள் இருப்பினும் சதுரமாகவும் பட்டையாகவும் சிலவிடங் களில் காணப்படுகின்றன.

நம் சைவ மரபில் சிவபிரானைச் சென்றடையச் சரியை கிரியை, யோகம், ஞானம் என நான்கு நெறிகள் உண்டு. இந்த ஒவ்வொரு நிலையிலிருந்து இறைவனை வழிபட்டவர்கள், முறையே அடையும் நிலை சாலோப, சாமீப, சாரூப, சாயுச்யம் ஆகியன ஆகும். அவற்றின் தன்மையாவன:

1. சாலோபலிங்கம்: ஆவுடையார் சதுரவடிவமாகவும் பாணம் வட்டவடிவமாகவும் அமைந்து இருக்கும். இவ்வகை வடிவங்கள் காணப்படும் இடங்கள் மிகக் குறைவு. கீழ்வேளூர், குடந்தைக் கீழ்க்கோட்டம் (நல்லூர், நீண்ட சதுரம்) இது சாலோபத்ரலிங்கம்.

2. சாமீபலிங்கம்: ஆவுடையாரும், பாணமும் வட்ட வடிவா கவே இருக்கும். பெரும் பாலும் இது எங்கும் காணப்படுவ தாகும்.

3. சாருபலிங்கம்: ஆவுடையார் வட்ட வடிவமாக இருக்க பாணம் (வட்ட) வடிவில் சிவபிரானின் திருமுக அமைப்புடன் முகலிங்கமாக இருக்கும். இவ்வகை முகலிங்கத்தைச் சிவாலயங்களில் காண்பது அரிது. குறிப்பாக இரண்டொரு இடங்களில் காணலாம். தொண்டைநாட்டுத் தேவாரத் தலமான திருவக்கரையில் உள்ளது. இம் முகலிங்கங்களில் பலவகை உண்டு. அவை இதனை அடுத்து வரும் பகுதிகள் ஒன்றில் விரிவாகப் படங்களுடன் விளக்கி வரையப்பட்டுள்ளன.

4. சாயுஜ்யலிங்கம்: ஆவுடையார் வட்ட வடிவாயிருக்க பாணம் 4, 8, 16, 32, 64 பட்டை வடிவங்களில் சில இடங்களில் காணலாம். இவ்வகைப் பட்டைலிங்கத் தோற்றம் தாராலிங்கம் எனப்படும்.

## 2.1 4.1 பாணத்தின் அளவுத் தோற்றத்தில் எட்டு வகை இலிங்கங்கள்:

அவையாவன:

1. சமலிங்கம்
2. வர்த்தமானலிங்கம் — இது நான்கு வகைப்படும்
3. சைவாதிகலிங்கம் — ,,
4. ஸ்வஸ்திகலிங்கம்
5. ஸர்வோபத்ரலிங்கம்
6. ஸார்வதேசகலிங்கம்
7. தாராலிங்கம் — இது ஐந்து வகைப்படும்
8. முகலிங்கம்

சிவலிங்கத்தின் பிரதான பாகமாகிய பாணத்தை 24 பங்காகப் பிரித்துப் பின் இப்பங்குகள் பூமிக்குள், ஆவுடைக்குள், உச்சிபாகம் ஒவ்வொன்றும் எந்த அளவு இருக்க வேண்டும் என்ற கணக்கில் கூறப்பெறுபவை. இந்த 24 பங்கில் குறைந்தது 9 பங்கு. இந்த விவரங்களைப் படத்துடன் 15 வகை இலிங்கமாகக் காட்டப்பட்டுள்ளது.

1. **சமலிங்கம்:** முற்கூறியாவறு பாணத்தை 24 பங்கு செய்து இதில் அடி 8 பங்கு சதுர வடி

வாகப் பூமிக் குள்ளும் நடு எட்டுப் பங்கு 8 பட்டையாக ஆவுடைக் குள்ளும் உச்சி 8 பங்கு விருத்தமாகச் சிவவடிவில் இருக்கும் இதனைப் பிராமணர்கள் வழிபட உயர்வு தரும்.

2 **வர்த்தமானலிங்கம்** "இது நால்வகைப்படும். இதனை சத்திரியர்கள் வழிபட நன்மை தரும்.

வர்த்தமானலிங்கம்: (1) 24 பங்கில் சதுரவடிவில் 7 பங்கு பூமிக்குள்ளும் 8 பட்டைவடிவில் ஆவுடைக்குள்ளும், விருத் மாக 9 பங்கு உச்சியில் சிவபாகமாக இருக்கும்.

வர்த்தமானலிங்கம்: (2) இதன் மொத்தம் 21 பங்கு. இதில் சதுர வடிவாக 6 பங்கு பூமிக்குள்ளும் 8 பட்டை வடிவாக 7 பங்கு ஆவுடைக்குள்ளும் விருத்த வடிவில் 8 பங்கு உச்சியிலும் விளங்கும்.

வர்த்தமாலிங்கம்: (3) இதன் பாணம் மொத்தம் 18 பங்கு. சதுரமாக 5 பங்கு பூமிக்குள்ளும், பட்டையாக, 6 பங்கு ஆவுடைக்குள்ளும், 7 பங்கு உச்சியிலும் இருக்கும்.

வர்த்தமானலிங்கம்: (4) இதன் மொத்த பங்கு 15 சதுரமாக 4 பங்கு பூமிக்குள்ளும் 8 பட்டையாக 5 பங்கு ஆவுடைக்குள்ளும் ı பங்கு உச்சியிலும் இருக்கும்.

3 **சைவாதிகலிங்கம்:** (1) இதன் பாணம் 10 பங்கு சதுர வடிவில் 3 பங்கு பூமிக்குள்ளும், 8 பட்டையாக 5 பங்கு ஆவுடைக்குள்ளும் 4 பங்கு உச்சியிலும் சிவபாகமாக இருக்கும்.

சைவாதிலிங்கம்: (2) இதன் மொத்தம் பங்கு 13 ஆகும். இதன் அடி 4 பங்கு 4 பட்டை பூமிக்குள்ளும் நடு 4 பங்கு 8 பட்டை ஆவுடைக்குள்ளும் 5 பங்கு உச்சியிலும் இருக்கும்.

சைவாதிகலிங்கம்: (3) இதன் 16 பங்கில் 5பங்கு சதுர வடிவம் பூமிக்குள்ளும், நடு 5 பங்கு 8 பட்டை ஆவுடைக் குள்ளும், உச்சியில் 6 பங்கு விருத்தமாகவும் விளங்கும்.

ஸைவாதிகலிங்கம்; (4) இதன் 19 பங்கில் அடியில் 4 பட்டை வடிவில் 6 பங்கு பூமிக்குள்ளும், நடுவில் 8 பட்டை வடிவில் 6 பங்கு ஆவுடைக்குள்ளும் உச்சியில் 7 பங்கு சிவபாகம்.

4 ஸ்வஸ்திகலிங்கம்: இதனைப் பூசிக்க வேளாளர் களுக்கு நன்மை தரும். இது ஒன்பது பங்குடையது. அடி 2 பங்கு சதுரவடிவில் பூமிக்குள்ளும் நடு 3 பங்கு 8 பட்டையாக ஆவுடைக்குள்ளும், 4 பங்கு உச்சியில் சிவபாகமாகும்.

5 ஸர்வோபத்ரலிங்கம்: இதனைப் பூசிக்க நான்கு வருணத்தவருக்கும் நன்மை தரும் 4 இதன் 24 பங்கில் முழுதும் விருத்த வடிவில் 8 பங்கு பூமிக்குள்ளும் 8 ஆவுடைக் குள்ளும் உச்சியில் 8 ஆக விளங்கும்.

6 ஸர்வதேசிகலிங்கம்: இதனைப் பூசிக்க நான்கு வருணத்தவரும் நலம் அடைவர் இதன். அளவு 12 பங்கு முழுதும் விருத்தம். பூமிக்குள் 5 பங்கு ஆடைவுக்குள் 4 பங்கு, உச்சியில் சிவபாகம் 3 பங்கு.

7 தாராலிங்கம்: (1) இது இருவகைப்படும். இதனைப் பூசிக்க நான்கு வருணத்தவருக்கும் நன்மை பெருகும்.

தாரர்லிங்கம்: (1) இதன் 24 பங்கில் பூமிக்குள். 4 பட்டை வடிவில் 8 பங்கும், ஆவுடைக்குள் 8 பங்கும், உச்சியில் 8 பங்கும் சிவபாகமாகத் திகழும்.

தாரர்லிங்கம்: (2) இதன் 24 பங்கில் சதுரமாக 8 பங்கு பூமிக்குள்ளும், நடுவில் 8 பட்டையாக 8 பங்கு ஆவுடைக்குள்ளும், உச்சிச் சிவபாகம் 16 பட்டையாக 8 பங்கில் விளங்கும்.

8 **முகலிங்கம்** இது நான்கு வருணத்தவரும் பூசிக்க நன்மை தரும். இதன் 24 பங்கில் அடி 8 பங்குச் சதுரமாகப் பூமிக்குள்ளும், 8 பட்டையாக 8 பங்கு ஆவுடைக்குள்ளும் உச்சி 8 பங்கு முகவடிவில் சிவபாமாக விளங்கும்.

இப்பட்டை வடிவப் பாணத் தோற்றங்களாவன:

1. நான்குபட்டை
2. எட்டுப்பட்டை
3. பதினாறுபட்டை
4. முப்பத்திரண்டுபட்டை
5. அறுபத்துநான்குபட்டை

இவ்வகைத் தோற்றங்களைத் தமிழகத்துக் கோயில்களில் சிற்சில இடத்துள் காணலாம்.

1. திருச்சக்கரப் பள்ளி.
2. காஞ்சி கயிலாயநாதர் கோயிலின் கிழ்ப்பக்க சிறு கோயில்களில்.
3. காஞ்சி கயிலாயநாதர் கருவறையில், மற்றும் பழையாறை, மேற்றளி முதலிய இடங்களில்.
4. காஞ்சி கயிலாயநாதர் கோயிலுக்குத் தென்மேற்கில் சிறிது தூர அளவில் ஒரு வயல் ஓரத்தில் உள்ள பெரிய பாணலிங்கத்தில்
5. அறுபத்துநான்குபட்டை: திருவையாறு அருள்மிகு ஐயாறப்பர் திருக்கோயிலில் அரிகுரு தெட்சிணாமூர்த்தி திருமுன் உள்ள மண்டபத்தில் இந்த 64 பட்டை இலிங்கம் மற்றும் சகத்திரலிங்கம் பஞ்சபூத லிங்கம் ஆகியவற்றின் இருப்பிடத்தில் காணலாம்.

| வரிசை எண் | இலிங்கத்தின் பெயர் | | பாணத்தின் பங்கு | பூமிக்குள் அடி | | ஆவுடைக்குள் நடு | | சிவபாகம் உச்சி | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | பங்கு | வடிவம் | பங்கு | வடிவம் | பங்கு | வடிவம் |
| 1. | சமலிங்கம் | | 24 | 8 | சதுரம் | 8 | 8 பட்டை | 8 | விருத்தம் |
| 2. | வர்த்தமானலிங்கம் | 1 | 24 | 7 | ” | 8 | ” | 9 | ” |
| 3. | ” | 2 | 21 | 6 | ” | 7 | ” | 8 | ” |
| | ” | 3 | 18 | 5 | ” | 6 | ” | 7 | ” |
| | ” | 4 | 15 | 4 | ” | 5 | ” | 6 | ” |
| | சைவாதிகலிங்கம் | 1 | 10 | 3 | ” | 3 | ” | 4 | ” |
| | ” | 2 | 13 | 4 | ” | 4 | ” | 5 | ” |
| | ” | 3 | 16 | 5 | ” | 5 | ” | 6 | ” |
| | ” | 4 | 19 | 6 | ” | 6 | ” | 7 | ” |
| 4. | ஸ்வஸ்திகலிங்ம் | 9 | 9 | 2 | ” | 3 | ” | 4 | ” |
| 5. | ஸர்வோபத்ரலிங்ம் | | 24 | 8 | விருத்தம் | 8 | விருத்தம் | 8 | ” |
| 6. | ஸார்வதேசகலிங்கம் | | 12 | 5 | ” | 4 | ” | 3 | ” |
| 7. | தர்ராலிங்கம் | 1 | 24 | 8 | சதுரம் | 8 | 8 பட்டை | 8 | 8 பட்டை |
| | ” | 2 | 24 | 8 | ” | 8 | ” | 8 | 16 ” |
| 8. | முகலிங்கம் | | 24 | 8 | ” | 8 | ” | 8 | முகம் |




படம் 8

| வரிசை எண் | இலிங்கத்தின் பெயர் | | பாணத்தின் பங்கு | பூமிக்குள் அடி | | ஆவுடைக்குள் நடு | | சிவபாகம் உச்சி | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | பங்கு | வடிவம் | பங்கு | வடிவம் | பங்கு | வடிவம் |
| 1. | சமலிங்கம் | | 24 | 8 | சதுரம் | 8 | 8 பட்டை | 8 | விருத்தம் |
| 2. | வர்த்தமானலிங்கம் | 1 | 24 | 7 | ” | 8 | ” | 9 | ” |
| 3. | ” | 2 | 21 | 6 | ” | 7 | ” | 8 | ” |
| | ” | 3 | 18 | 5 | ” | 6 | ” | 7 | ” |
| | ” | 4 | 15 | 4 | ” | 5 | ” | 6 | ” |
| | சைவாதிகலிங்கம் | 1 | 10 | 3 | ” | 3 | ” | 4 | ” |
| | ” | 2 | 13 | 4 | ” | 4 | ” | 5 | ” |
| | ” | 3 | 16 | 5 | ” | 5 | ” | 6 | ” |
| | ” | 4 | 19 | 6 | ” | 6 | ” | 7 | ” |
| 4. | ஸ்வஸ்திகலிங்ம் | 9 | 9 | 2 | ” | 3 | ” | 4 | ” |
| 5. | ஸர்வோபத்ரலிங்ம் | | 24 | 8 | விருத்தம் | 8 | விருத்தம் | 8 | ” |
| 6. | ஸார்வதேசகலிங்கம் | | 12 | 5 | ” | 4 | ” | 3 | ” |
| 7. | தர்ராலிங்கம் | 1 | 24 | 8 | சதுரம் | 8 | 8 பட்டை | 8 | 8 பட்டை |
| | ” | 2 | 24 | 8 | ” | 8 | ” | 8 | 16 ” |
| 8. | முகலிங்கம் | | 24 | 8 | ” | 8 | ” | 8 | முகம் |

## தூல (ஸ்தூல) மூலலிங்கம்:

பாணத்தின் உயரத்தை 21 பங்கு செய்து பூமிக்குள் 8 பங்கும், ஆவுடைக்குள் 7 பங்கும், உச்சி சிவபாகம் 6 பங்குமாக இருப்பது. இது அடிபருத்து நுனி சிறுத்துக்காணப்படுவது. (காசியசிற்ப சாத்திரம்)

பூமிக்குள்ளும் ஆவுடைக்குள்ளும் மேலும் ஒரே அளவாய் இருப்பது. இதில் அடிபருத்தது. நடுபாகம் (ஆவுடைக்குள்) மட்டும் பருத்தது. உச்சிபாகம் மட்டும் பருத்தது என மூவகையாகும். (சிற்பரத்தினம்)

1. அடிபருத்தது(ஸ்தூலபாத)
2. நடுபருத்தது (ஸ்தூலமத்யமம்)
3. தலைபருத்தது(ஸ்தூலசிரஸ்)

என்பவையாகும்.

## 2.1.5 அருவும் உருவுமான சிவலிங்கம் ஐந்து வகையானதாகக் கூறப்படும். அவையாவன:

1. தூலலிங்கம் — விமானம் — விமானம்
2. சூக்குமலிங்கம் — கருவறை — மகாலிங்கம்
3. அதிசூக்குமலிங்கம் — பலிபீடம் — பஞ்சாக்ஷரயந்திரம்
4. காரணலிங்கம் —கொடிமரம் — ப்ராசாதபஞ்சாக்ஷரம்
5. மகாகாரணலிங்கம் — மூலலிங்கம் — திருஐந்தெழுத்தில் 'சி

அவற்றுள் மூலலிங்கம், அவ்யக்தலிங்கம், வியக்தலிங்கம் வியக்தாவியக்தலிங்கம் என மூவகைப்படும் என்பர்.

**2.1.5.2 அவ்யக்தலிங்கம்:** தத்துவங்களுக்கு அப்பாற்பட்ட அருவ வடிவமானது.

**2.1.5 வியக்தலிங்கம்:** சதா சிவமூர்த்தியின் ஐந்து திருமுகங்களில் தோன்றிய 25 மகேசுவர வடிவங்கள்.

1. ஈசானத்தில்:
   சோமாஸ்கந்தர், நடராசர், இடபாரூடர் சந்திர சேகரர், கலியாணசுந்தரர்.

2. தத்புருஷத்தில்:
   பிட்சாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி.

3. அகோரத்தில்:
   கஜாரி, வீரபத்திரர், தெட்சணாமூர்த்தி, கிராத மூர்த்தி, நீலகண்டர்.

4. வாமதேவத்தில்:
   கங்காளர், சக்ரதானம், கஜமுகர், அனுக்கிரகர், சண்டேசர், அனுக்கிரகர், ஏகபாதர்.

5. சத்யோசாதத்தில்: இலிங்கோத்பவர், சுகாசன உமாமகேசுவரர், அரிஅர்த்தர், அர்த்தநாரீசுவரர்.

## 2.1.5.3 வியக்தாவியக்தலிங்கம்:

அருஉருவான (சகளநிட்கள) திருமேனி 1) பரார்த்தலிங்கம், 2) சுயம்புலிங்கம், 3) காணலிங்கம், 4) தைவிகலிங்கம், 5) திவ்வியலிங்கம், 6) ஆரிடலிங்கம், 7) மானுடலிங்கம், 8) இராட்சதலிங்கம், 9) பாணலிங்கம், 10) சணிகலிங்கம், (சணிகலிங்கம்).

## சிவலிங்கம்

சலம், அசலம் என இருவகையில். சலம் — அசைவது. அதாவது இருப்பிடத்திலிருந்து வேறு இடத்தில் வைப்பது. உலோகம், நவரத்தினங்கள் இவைகளால் உருவாக்கப்பெற்றது. அசலம்; இருப்பிடத்திலிருந்து அசைத்தால் சிதைவது சுதை, மண் இவற்றால் ஆனது.

## 2.1.5. .1 சுயம்புலிங்கங்கள் (திவ்ய)

சிவ வடிவங்கள் சிற்பியினால் உருவாக்கப்படாது தானே தோன்றியதும் சிற்பியினால் உருவாக்கப்பட்டதும் என

இருவகைத்து ஆகும். முன்னதை, தான்தோன்றி, சுயம்பு, சுவாயம்புவம் என்று அழைக்கப்படும். இதுபற்றி ஆகமங்களும் புராணங்களும் பலவகையாகப் பேசுகின்றன.

1. நடராசப் பெருமான் தமது சடையை விரித்து ஆடிய போது அச்சடையில் தங்கியிந்த கங்கையினது நீர்த்துளிகள் இந்நிலவுலகில் சிதறி வீழ்ந்தன. இவ்வாறு விழுந்த கங்கை நீர்த்துளிகளே சுயம்புலிங்கங்களாயின எனப் 'பாரமேசுர' ஆகமம் கூறுகிறது.

2. இம்மண்ணுலகைத் தாங்கிக் கொண்டிருக்கும் ஆதிசேடனது அளவற்ற தலைகள் ஒருமுறை அசைந்ததால் காலாக்கினி உருத்திரருடைய கோபக் கனலில் இருந்து மூன்று தீப்பொறிகள் உண்டாகிச் சிவலிங்கங்களாக மாறின. இவ்வாறு உண்டான மூன்றும்

1 நிர்மூலலிங்கம் — நீரினுள் இருப்பது.

2. சமூலலிங்கம் — மண் மலையை ஆதாரமாக உடையது.

3. பிரிதிவிலிங்கம் — மண் முதலியவற்றை ஆதாரமாக உடையது. என்று காமிகாமம் கூறுகிறது.

மற்றும் காரணாகமம், வாதுளாகமம், சூக்குமாகமம், சுப்ரபேதாகமம் ஆகியவையும் சுயம்புலிங்கம் பற்றிய 10 ஆகமங்களாகும்.

மென்மை, குட்டை, நீளம், பலகை போன்றது, பலமுனை, பசுவின்காது, மாதுளம்பழம், 3, 5, 6, 10 முனைகளுடன் இருக்கும்.

இதற்கு அளவு கிடையாது. பற்பல வடிவம், நிறம், கோணல் உடையனவாய் இருக்கும்.

காணும் இடங்கள்: ஆறு, மலை, கடல், கோயில்கள் முதலான பல இடங்களில் காணப்படும்.

இதன் மூலத்தைச் சோதித்தல் கூடாது. இவற்றைக் காண, தீண்ட, பூசிக்க நன்மை தரும்.

சிவபிரான் என்ஞான்றும் சாந்நித்யமுடன் இவற்றுள் இருப்பார்.

இவற்றிற்கு சிரோவர்த்தனம் (உச்சி அமைவு), முக அமைவு (லட்சணோத்தாரம்) காணப்படாது.

இவ்வாறு சுயம்புலிங்கங்கள் அமைந்ததோடன்றி மண்ணி லிருந்து புற்றாக வளர்ந்துள்ளவையும் சுயம்புலிங்கங்களாகும். இவைபோல் அமைந்த சுயம்பு (புற்று) லிங்கங்கள் தமிழ்நாட்டில் திருவொற்றியூர் (படம் பக்கநாதர்), திருவாரூர் புற்றிடங் கொண்டார். (வன்மீகநாதர்), திருவையாறு (செம்பொற் சோதியார்) மற்றும் பல சிவத் தலங்களிலும் காணப்படுகின்றன. இவற்றிற்குத் திருமுழுக்காட்டுத் தண்ணீரால் ஆட்டப்படுவ தில்லை. மாறாகப் புனித நாட்களில் சாம்பிராணித் தைலம், புனுகுச் சட்டம் முதலிய நெய்ப்பசை உடைய பொருள்களை மேற்பூச்சு இடுவது இன்றும் நடைபெற்று வருகிறது.

இங்குத் தொடக்கத்தில் கூறப்பெற்ற சுயம்புலிங்கங்களின் இருப்பிடத்தைச் சுட்டிக் காட்டும் தலங்களின் பெயர் இதனடியில் குறிக்கப் பெற்றுள்ளன.

திருநிகமக்ஞான சிவாச்சாரியார் இயற்றியுள்ள "சீர்ணோத் தாரதசகம்" 11 என்னும்வடமொழி நூலில் உள்ளபடி; கந்தகாலோத்தாரகமம்

அறுபத்தெட்டுச் சுயம்புத் தலங்கள்.

இந்த அறுபத்தெட்டுத் தலங்களும் சுயம்புலிங்க இடமாகும். இந்தச் சுயம்புத் தலங்கள் உருத்திராவதாரத் தலங்கள் எனவும் பெயர் பெறும்.

இவ்வறுபத்தெட்டும் விவரமாக வீரரகமத்தில் கூறப்பட் டுள்ளவாறு இங்குக் குறிப்பிடப்படுகிறது.

| தலங்களின் பெயர் | சுயம்புலிங்கத்தின் பெயர் |
| --- | --- |
| 1. வாரணாசியில் | மகாதேவர் |
| 2. பிரயாகையில் | மகேச்சுவரர் |
| 3. நைமிசத்தில் | தேவதேவேசர் |
| 4. கயையில் | பிரபிதாமகர் |
| 5. குருக்ஷேத்திரத்தில் | தாணுநாயகர் |
| 6. பிரகாசத்தில் | சசிபூடணர் |
| 7. புட்கரத்தில் | அசோகந்தர் |
| 8. விமலேச்சுவரத்தில் | விசுவேசர் |
| 9. அட்டகாசத்தில் | மகாநாதர் |
| 10. மயேந்திரத்தில் | மகாவிரதர் |
| 11. உச்சைனியில் | மகாகாளர் |
| 12. மகோர்கோடத்தில் | மகோத்கடர் |
| 13. சங்குகர்ணத்தில் | மகாதேவ, |
| 14. கோகர்ணத்தில் | மகாபலர் |
| 15. உருத்திரகோடியில் | மகாயோகீச்சுரவர் |
| 16. தலேச்சுவரத்தில் | மகாலிங்கமூர்த்தி |
| 17. கேதாரத்தில் | ஈசானர் |
| 18. இமயத்தில் | உருத்திரருத்ரர் |
| 19. சுவர்ணாட்சத்தில் | சகத்திராட்சர் |
| 20. விச்வேசத்தில் | வருடபத்வசர் |
| 21. பைரவத்தில் | பைரவேசர் |
| 22. பத்ராவடத்தில் | பத்ரர் |
| 23. கநகரத்தில் | உருத்திரர் |
| 24. பத்ரகர்ணத்தில் | சதாசிவர் |
| 52. தேவதாருவனத்தில் | தண்டரர் |

| | |
|---|---|
| 26. குருசாங்கலத்தில் | சண்டீசர் |
| 27. திருசேந்தியில் | ஊர்தவதேரர் |
| 28. சாங்கலத்தில் | கபர்த்தீசுவரர் |
| 29. ஏகாக்ரத்தில் | கிருத்திவாசர் |
| 30. அமிர்தகேச்சுவரத்தில் | சூட்சமர் |
| 31. காளஞ்சரத்தில் | நீலகண்டர் |
| 32. விமலேச்சுவரத்தில் | சீகண்டர் |
| 33. தியனேச்சுரத்தில் | சித்தேச்வரர் |
| 34. காயத்ரியில் | முக்தேச்வரர் |
| 35. காசுமீரத்தில் | விசயர் |
| 36. மகுடேசுவரத்தில் | சயந்தர் |
| 37. கிருதேசுவரத்தில் | பச்மகாயர் |
| 38. கயிலாயமலையில் | கிராதர் |
| 39. விருடதானத்தில் | இயமலிங்கேச்வரர் |
| 40. கரவீரத்தில் | கபாலீசர் |
| 41. த்ருசந்தியில் | த்ருயம்பகர் |
| 42. விரசையில் | திருலோசனர் |
| 43. தீப்தத்தில் | மகேச்சுவரர் |
| 44. நேபாளத்தில் | பசுபதீச்சுவரர் |
| 45. காரோகணத்தில் | வருணீசர் |
| 46. அம்பிகாநகரத்தில் | உமாபதீசர் |
| 47. கங்காசரசில் | அமரநாதர் |
| 48. மகேசுவரத்தில் | ஓங்காரேசுவரர் |

| | | |
|---|---|---|
| 49 | அரிச்சந்திரத்தில் | அப்திநாதர் |
| 50 | குருக்ஷேத்திரத்தில் | சங்கரர் |
| 51 | வாமேச்சுவரத்தில் | சடிலர் |
| :2 | யகுடேசுவரத்தில் | சௌமியர் |
| 53 | சப்தகோதாவிரியில் | பீமர் |
| 54 | நாகேசுவரத்தில் | சுயம்புவர் |
| 55 | சல்பேசுவரத்தில் | த்ருசூலியர் |
| 56 | ஸ்ரீசைலத்தில் | திரிபுராந்தகர் |
| 57 | கர்ணிகாரோகணத்தில் | அத்யட்சர் |
| 58 | கயிலாயத்தில் | கணநாயகர் |
| 59 | ஏமகூடத்தில் | விருபாட்சர் |
| 60 | கந்தமாதனத்தில் | பூர்பவர் |
| 61 | இமத்தானத்தில் | கங்காதரர் |
| 62 | படபாமுகத்தில் | அநலேசுவரர் |
| 63 | விந்தியமலையில் | வராகேச்சுவரர் |
| 64 | கோடிவடத்தில் | உக்கிரர் |
| 65 | இட்டிகாபுரத்தில் | வரிட்டர் |
| 66 | இலங்கையில் | ஊர்த்தவ கேசர் |
| 67 | பாதாளேசுவரத்தில் | ஆடகேச்வரர் |
| 68 | இலிங்கேச்சுவரத்தில் | வரதர் |
| 69 | கசப்ரியத்தில் | சலலிங்கேசர் |

2.1.5.3.2 காணலிங்கம்: பிள்ளையார் (கணபதி) முதலிய கணங்களால் உருவாக்கப்பட்டு அவர்களால் பூசிக்கப் பெற்று

இன்று இருந்து வருவது பல தலபுராணங்கள் இவற்றை விளக்கும்.

## 2.1.5.3.3 தைலிகலிங்கம்

பிரமன். திருமால், மற்றும் தேவர்களால் நிறுவிப் பூசிக்கப் பெற்ற இது தெய்வீகம் எனவும் கூறப்படும். காமிகம், விசயம், சுவாயம்புவம், அனலம், ஆகிய ஆகமங்கள் இவற்றிற்குரியவை.

இவை வடிவில் தோற்றத்தில் விளக்கு (தீப) வடிவாயும், மேடுபள்ளங்களோடும் வரைகள், பொந்துகள் உள்ளதாயும் இருக்கும்.

## 2.1.5.3.4 திவ்வியலிங்கம்

இவை தேவ இருடிகளால் நிறுவிப் பூசிக்கப் பெற்றவை.

சிந்தியம், சகத்திரம், தீப்தம், அசிதம். ஆகிய ஆகமங்கள் இதற்கு உரியவை.

## 2.1.5.3.5 ஆரிடலிங்கம் (ஆர்ஷலிங்கம்)

யோகசம், மகுடம், நிசுவாசம், ரௌரசம் ஆகிய ஆகமங்கள் இதற்கு உரியவை.

## 2.1.5.3.6 மானுடலிங்கம்

மண்ணுலக அரசர்கள், மானிடரால் நிறுவிப் பூசிக்கப்பெற்றவை. சிற்பிகளது கைத்திறத்தால் சிற்பநூல் இலக்கணப்படி உருவாக்கப்பெற்றது. இதன் விரிந்த விளக்கம் இந்நூலில் இடையில் விளக்கப்படுகிறது. வீரம், விமலம், சந்திரஞானம், பிம்பம் இந்நான்கு ஆகமங்களும் இதற்கு உரியவை.

## 2.1.5.3.7 இராக்கதலிங்கம்

அரக்கர்களால் (இராட்சதர்களால்) நிறுவிப் பூசிக்கப் பெற்றது. புராணங்கள் பலவற்றுள் இராவணன் முதலிய அரக்

கர்கள் இந்நில உலகில் பலதலங்களில் பூசித்து வரம்பெற்றதைக் கூறும். புரோத்கீதம், லலிதம், சித்தம்[ சந்தானம் எனும் நான்கு ஆகமங்கள் இதற்கு உரியவை.

## 2 1.5.3.8 பாணலிங்கம்

பாணாசுரனால் நித்தம் பூசிக்கப்பெற்று விடப்பட்ட லிங்கங்கள்பாரமேசுவரம், சர்வோக்தம் அம்சுமான், கிரணம் என்னும் ஆகமங்கள் இதற்கு உரியவை இப்பாண லிங்கம் ளிளக்கம் இந்நூலில் அடுத்து வருகிறது.

**2.1.5.3.9 க்ஷணிகலிகங்ம்,** சைவாகம முறைப்படி சமய விசேட தீக்கை பெற்ற சிவ பூசகர்கள் நித்தம் சிவலிங்கத்தைக் கீழ்க்கண்ட பொருள்கள் ஏதேனும் ஒன்றால் நிறுவிப் பூசித்த பின் தம் உள்ளத்தில் ஒடுக்கி விடுவர்.

| உரு ஆக்கப்படும் பொருள் | பசிக்கும் பயன் |
|---|---|
| 1. புற்றுமண் லிங்கம் | முத்தி |
| 2. ஆற்றுமணல் ” | பூமிலாபம் |
| 3. பச்சரிசி ” | பொருள்பெருக்கம் |
| 4. சோறு (அன்னம்) ” | உணவுப்பெருக்கம் |
| 5. பசுவின்சாணம் ” (கோமயம்) | பிணியற்ற வாழ்வு |
| 6. பசுவெண்ணெய் ” | மனமகிழ்ச்சி |
| 7. சிவகண்மணி (உருத்திராக்க)லிங்கம் | நல்ல அறிவு |
| 8. திருநீற்று (விபூதி) லிங்கம் | எல்லாவகைச் செல்வம் |
| 9. சந்தனம் லிங்கம் | எல்லா இன்பங்கள் |
| 10. மலர்மாலை ” | நீண்ட வாழ்நாள் |

| | |
|---|---|
| 11. முடிச்சிட்டநாணல்(கூர்ச்சம்) " | முத்தி |
| 12. சர்க்கரை, வெல்லம் " | விரும்பிய இன்பம் |
| 13. அரிசிமாவு லிங்கம் | உடல்வலிமை |
| 14. பழம் " | நல்லின்ப வாழ்வு |
| 15. தளிர் " | நல்ல குணம் |
| 16. தண்ணீர் | எல்லா மேன்மை |

மேற்குறிப்பிட்ட பொருள்களுள் பெரும்பாலும் திருநீறு, சந்தனம், உருத்திராக்கம் இவற்றில் ஒன்றை லிங்க வடிவாக்கித் தம் இல்லங்களில் சிவபூசகர்கள் சிவபூசை செய்கின்றனர்.

இவ்வாறு பதினாறு வகைப் பொருள்களால் ஆன க்ஷணிக லிங்கப். பூசையினை காரணாகமும் இவற்றால் பூசிக்கக் கிடைக்கும் மேன்மையினை 'அஞ்சுமான' ஆகமமும்கூறுகின்றன

மேற்கூறிய பதினாறு வகைப் பொருள்களேயன்றி வேறு பல பொருள்களால் சிவலிங்கம் நிறுவிப் பூசித்துப் பயன்பெறும் தன்மையினை[12]

சிவரகசியத்தில் கூறியிருப்பதாக ஸ்ரீ தத்துவ நிதியில் காணப்படும் செய்திகளாவன:

| சிவலிங்கம் ஆக்கப்படும் பொருள்கள் | பூசிப்போர் அடையும் பயன் |
|---|---|
| 1. கேசம் எலும்புகளால் ஆனது | சத்துருநாசம் |
| 2. உப்பு | சகல உலகவசியம் |
| 3. மஞ்சள் தூள் | ஸ்தம்பனம் செய்யும் திறமை |
| 4. தயிர் | புகழ் |

| | | |
|---|---|---|
| 5. | பால் | பெரிய அரசாட்சி |
| 6. | அருகம்புல் | துன்பநீக்கம் |
| 7. | சீந்தில்கொடி | துன்பநீக்கம் |
| 8. | கரும்பு | உச்சாடனத்தில் வெற்றி |
| 9. | கருப்பஞ்சாறு | செல்வம், காமத்தில் வெற்றி |
| 10. | ஸ்படிகம் | மனச்சாந்தி |
| 11. | வெள்ளி | பிதிர்முத்தி |
| 12. | பொன் | சுவர்க்கப் பதவி |
| 13. | தாமிரம் | உடல்வலிமை |
| 14. | வெண்கலம் | புகழ் |
| 15. | பித்தளை | உடல்வலிமை |
| 16. | இரும்பு | பகைவர் வீழ்ச்சி |
| 17. | செஞ்சந்தனம் | ஆயுள்வளர்ச்சி |
| 18. | நல்லசந்தனம் | சுரநோய் நீக்கம் |
| 19. | கஸ்தூரி | நூல் இயற்றும் அறிவு |
| 20. | கோரோசனை | நல்ல அழகு |
| 21. | குங்குமப்பூ | உடல்ஒளி |
| 22. | வெள்ளை அகில்கட்டை | மிகுந்த சக்தி |
| 23. | கருங்காலிக்கட்டை | விரும்பியதனைத்தும் கிடைத்தல் |
| 24. | குங்குமப்பூ, கருங்காலி, கஸ்தூரி, பச்சைக்கற்பூரம், சந்தனம் இவை சேர்ந்த கலவையாகிய யக்ஷகர்தம் | விரும்பியனைததரும் |
| 25. | கோதுமை | பசுக்கள் பெருக்கம் |

26. பயிற்றமாவு — அன்னவிருத்தி

27. உளுந்துமாவு — உடல்வளர்ச்சி

28. கடலை (கொண்டைக்கடலை) மாவு — சகலசித்தி

29. நெல் — புகழ்

30. வசந்தகாலத்தில் (சித்திரைவைகாசியில்) மகை நெல்லால் செய்யப்பட்ட இலிங்கபூசை — பெண்களைக் கவர்ச்சிக்கும்.

31. கிரீஷ்மகாலத்தில் (ஆனி, ஆடியில்) மல்லிகை மலரால் ஆன லிங்கபூசை பயிர் விருத்தியைத் தரும்.

32 வர்ஷகாலத்தில் (ஆவணி, புரட்டாசியில்) ஊமத்தம் பூவால் ஆன சிவலிங்கப்பூசை இகத்திற்கும் பரத்திற்கும் நலம்தரும்.

33. சரத்காலத்தில் (ஐப்பசி, கார்த்திகையில்) நீலோத்பல மலர் லிங்கபூசை சிறந்த சித்தியைத் தரும்.

34 ஹேமந்தருதுகாலத்தில் (மார்கழி, தையில்) சாதிமலர் லிங்கபூசை சிவபிரானுடன் இருக்கும் நல்வாழ்வைத் தரும்.

35. சிசருதுகாலத்தில் (மாசி, பங்குனியில்) சகலமலர்களால் ஆன சிவலிங்கப்பூசை பிரம தேவனுடன் இருக்கும் வாழ்வைத் தரும்.

36. பாஷாணலிங்கபூசை எல்லா சித்திகளையும் நல்ல பதவியையும் தரும்.

37. எவ்வகையிலும் எந்தப் பொருளால் ஆன சிவலிங்க பூசை தேவகணங்களுடன் இருக்கும் வாழ்வைத் தரும்.

38. பத்மராகம், காச்மீரம் (குங்குமப்பூ, கோஷ்டம்) தாமரைக்கிழங்கு, (டங்கம் உளி) புஷ்பராகம், இந்திர நீலம், கோமேதகம், காருத்மதம், பவளம், முத்து,

வைரம், ரசம், பாணம் இவற்றாலான சிவலிங்க பூஜை சகல சித்திகளைத் தரும்.

## 2.1.6 லிங்கம் செய்பொருள்கள்

### 2.1.1.6 மண் லிங்கங்கள்

தமிழ்நாட்டுச் சிவாலயங்கள் சிலவற்றுள் கருவறையிலுள்ள இலிங்கங்கள் மண்ணால் உருவாக்கப்பட்டுப் பூசிக்கப்படுகின்றன. இவை இரண்டு வகைப்படும்.

ஒன்று இயற்கையாகத் தோன்றிய புற்று. மற்றொன்று மண்ணைப் பக்குவப்படுத்தி உருவாக்கப்பட்டது. முன்னதாகிய புற்று வடிவ லிங்கங்கள் திருவாரூர், திருவையாறு, திருஒற்றியூர் முதலிய ஊர்களில் உள்ளன.

இரண்டாவதாகக் கூறப்பட்டவை திருப்பந்தணைநல்லூர், திருப்புன்கூர், திருச்சிறுகுடி முதலிய தலங்களில் உள்ளன. திருக்கச்சிஏகம்பத்து இறைவனும் முன்னர் உமாதேவியாரால் கம்பைநதி மணலால் உருவாக்கப்பட்டது என்பது பழைய வரலாறு.

இவ்வித லிங்கங்களுக்கு நீராட்டுச் செய்வதில்லை. நறுமண பொருள்களான புனுகுச்சட்டம், சவ்வாது, சாம்பிராணித் தைலம், மற்றும் பல்வித மருந்துப் பொருள்களின் சாந்தினை மேல்பூச்சாகப் பூசுவது வழக்கம்.

மண்லிங்கங்கள் உருவாக்கப்படும் வகையில் இரண்டு விதமாகும்.

1. ஆமலிங்கம் 2. பக்குவலிங்கம்.

இவ்வாறு உருவாக்கப்படும் லிங்கங்களுக்கு எடுக்கவேண்டிய மண்வகைகள்:

1. புண்ணியதீர்த்தங்களான ஆறு, குளம், கடல்மண்
2. மலைமண்

3. நந்தவனமண்

4. பற்றுமண் முதலியன.

இவ்வகை மண்ணினைப் பொடி செய்து யவம், கோதுமை, உளுந்து, குங்கிலியம்,குக்கில் அரக்கு, திருவட்டப்பிசின், ஞாழல் இவற்றையும் ஆன் ஐந்தையும் கலந்த(பசுவின்பால், தயிர், நெய் மூத்திரம், சாணம்) இவற்றையும் கலந்து பிசைந்து சில மாதங்கள் உலர்த்தி வைத்துப் பின் அவற்றைப் பொடி செய்து நவரத்தினப் பொடிகளையும் கலந்து சிவலிங்கத்தை உருவாக்க வேண்டும். இதற்கு 'ஆமலிங்கம்' என்று பெயர்.

மேற்கூறப்பட்ட மண்லிங்கத்தைத் தேர்ந்தவர்களைக் கொண்டு நெருப்பில் இட்டுச் சுட்டு எடுக்கப்படுவது, 'பக்குவ லிங்கம்' எனப்படும்.

இவை இரண்டும் அல்லாத மற்றொரு மண்லிங்கம் 'மிக்கிர லிங்கம்' எனப்படும். இது செய்யப்படும் விதம்: மரத்தினால் சூலம் (உட்கூடு) செய்து இரும்புப் பட்டங்களால் அலங்கரித்து முறைப்படி மண்ணை அதன்மேல் பூசி உருவாக்கப்பட்டதாகும். இவ்வகை மண்லிங்கங்கள், பூசிப்பவருக்கு எல்லாச் சித்தி களையும் தரும்.

மற்றும் சுவர்களில் தகுந்தவர்ணங்களால் முறைப்படி வடிவத்தை வரைந்து வழிபடுவது எழுதப்பட்ட (இலேக்கியம்) எனப்படும். இவ்வாறான ஓவிய வடிவம் சிறப்பாய் விளங்குவது திருக்குற்றாலத்தில் உள்ள சித்திரசபை நடராசர் வடிவமாகும்

## 2.1.6.2 மரலிங்கம் [தாருலிங்கம்]

சிவாலயக் கருவறையினைத் திருப்பணி செய்யுங்கால் அங்குள்ள மூல லிங்கத்தைப் பெயர்த்தெடுத்து வைத்தல் முறையன்று. இதற்காக வேறொரு லிங்கத்தை உருவாக்கி மூலலிங்கத்தின் சக்தியை மந்திரத்தால் இதில் புகச் செய்து பூசித்து வரவேண்டும். திருப்பணி முடிந்து குடமுழுக்கு (கும்பாபிடேகம்) செய்யும் சமயம் புதிய லிங்கத்தின் சக்தியை

மீண்டும் பழைய மூலலிங்கத்தில் வேள்விப் பூசையின்மூலம் புகச் செய்யவேண்டும். இவ்வாறு இடைக்காலத்தில் பூசிக்கப்படும் இலிங்கம் இளமை அமைப்பு (பாலப்பிரதிட்டை) எனப்படும். இப்பாலப் பிரதிட்டை லிங்கம் அமைக்கப் பயன்படும் பொருள் மரமாகும்.

இம்மரலிங்கம் பிரமபாகம், விட்டுணுபாகம், சிவபாகம் எனத்தனித்தனியாகச் செய்யப்படாது ஒரே வடிவாக ஆக்கப்படும். இதற்குரிய மரங்களாவன:

1. சந்தனம், தேவதாரு, வன்னி, இவை அந்தணருக்கு உரியன.
2. அரசு, அகில், கருங்காலி இவை அரசருக்கு உரியன
3. வேங்கை, வில்வம் இலுப்பை, இவை வைசியருக்கு உரியன.
4. மகிழ், பத்மகம், கோங்கு, இவை சூத்திரருக்கு உரியன.

மற்றும் அத்தி, மராமரம், அசோகம் ஆகியன பொதுவாக யாவருக்கும் உகந்தவையாகும்.

பெரும்பாலும் அத்தியும், சந்தனமும்தான் சிறப்பாகக் கொள்ளப்படுகிறது.

இச்சிவலிங்க வடிவம் மட்டுமின்றி மற்றும் பல தெய்வ வடிவங்கள், ஊர்திகள் (வாகனங்கள்) தேர்ச்சிற்பங்கள் ஆகியனவும் மரங்களால் உருவாக்கப்படுகின்றன.

## 2.1.6.3 கண்டசருக்கரை (சுதை) வடிவங்கள்

கோயில் கோபுரங்கள், விமானங்கள் இவையும் இவற்றில் பல்வகை வடிவங்களும் சுண்ணாம்புடன் மணலைக் கலந்து நன்றாக மை போல அரைத்து உருவாக்கப்படுகின்றன.

இவையேயல்லாமல் கோயிலுக்குள் தெய்வவடிவங்கள் இச் சுண்ணாம்பு அறவையால் (சுதையால்) உருவாக்கப்பட்டு

வர்ணங்கள் பூசி வழிபடப்பட்டு வருகின்றன. இவ்வகை வழிபாட்டிற்குரிய வடிவங்கள் வெறும் சுண்ணம்பினால் மட்டும் செய்வது சிறப்புடையதன்று. இதற்குரிய சுண்ணாம்புக் கலவையில் சுண்ணாம்புடன் பல்வகைப் பயனான மருந்துப் பொடிகள், ஆல், அரசு, அத்திமரப்பட்டைச்சாறுகள், நவரத்தினப் பொடிகள் ஆகியவற்றையும் முறைப்படி கலந்து பக்குவப்படுத்த வேண்டும். பின் மரத்தால் சூலம் (உட்கூடு) உருவத்திற் கேற்றவாறு தயாரித்துப் பின் இக்கலவை கொண்டு உரு அமைக்கவேண்டும். இவ்வாறு வடிவமைக்கப்பட்ட சிறப்பு வடிவங்கள் :

மதுரை வெள்ளியம்பலத்து கால்மாறி
ஆடும் நடராசர், சிவகாமி;
சீர்காழியில் உள்ள சட்டைநாதர்
தோணிபுரநாதர்(தோணியப்பர்);
திருநாகேச்சரத்து அம்பிகை குன்ற
முலை நாயகி;
திருக்கீழ்வேளூர் அஞ்சுவட்டத்து அம்மை;
திருவரங்கத்து அரங்கநாதர்;
ஆந்திரநாட்டு சுருட்டப்பள்ளி ஆலமுண்ட பெருமான் (விஷாபகாணர்);
சமயபுரமாரியம்மன்;
மற்றும் ஒரு சில வைணவப் பதிகளில் விளங்கும் திருமால் வடிவங்கள்.

இவ்வடிவங்களுக்கு நித்தியத்திருமுழுக்காட்டிற்குப்பதிலாகப் புனிதநாட்களில் சாம்பிராணித் தைலம் அல்லது நறுமணமும் எண்ணெய்ச் சத்துமிக்க வாசனைப் பொருட்களும் பூசப்படும்

## 2.1.6.4 இரத்தின லிங்கங்கள்

ஒன்பது வகை இரத்தினங்களால் தனித்தனி உருவாக்கப்பட்ட இலிங்கங்கள் ஆன்மார்த்த (தன்பொருட்டு), பரார்த்த (பிறர் பொருட்டு) பூசைக்கு மிகவும் பயன் அளிப்பன.

| இரத்தின இலிங்கங்கள் | | பூசிப்பதால் வரும்பயன் |
|---|---|---|
| 1. | முத்து | எல்லாவகை வெற்றி |
| 2. | பவளம் | அரச உறவு |
| 3. | வைடூரியம் | நீண்ட வாழ்நாள் |
| 4. | படிகம் | நன்மக்கட்பேறு |
| 5. | மரகதம் | நல்லுடல் |
| 6. | நீலம் | முத்தி |
| 7. | மாணிக்கம் | செல்வ வளர்ச்சி |
| 8. | வைரம் | பகைவர் வீழ்ச்சி |
| 9. | கோமேதகம் | வசியம் |

இந்த இரத்தினங்கள் குற்றமற்றவையாய் இருக்கவேண்டும். பயறு அளவு முதல் அங்குலம் வரையிலும், 2 அங்குல அளவு கூடுதலாக 6 அங்குலம் வரை இருக்கலாம்.

இவற்றிற்குப் பீடங்கள் அந்தந்த இரத்தினங்களாலும் அல்லது தங்கம், வெள்ளி, தாமிரம் இவற்றாலும் இருக்கலாம்.

இவ்விரத்தினங்களுள் சிறிய அளவு ஆன்மார்த்த பூசைக்கும் பெரிய அளவ பரார்த்த (கோயில்) பூசைக்கும் உரியன,

தமிழ்நாட்டில் சில சிவாலயங்களில் மூவ்வகை இலிங்க வடிவங்கள் சிறப்புடன் விளங்குகின்றன.

## படிகலிங்கம்:

தில்லைச் சிற்றம்பலத்தில் சிவபிரான் அருவ, உருவ, அரு உருவ வடிவங்களாகத் திகழ்கின்றார்.

அருவம் உருவமற்ற வடிவே பரவெளியான சிதம்பர இரகசியம்.

உருவ வடிவே உலகுய்ய நடமாடும் அருள்மிகு நடராசப் பெருமானது வடிவம்.

அருவும் உருவமான வடிவமே படிகலிங்கமான அழகிய சிற்றம்பல உடையவர்.

இவருக்கு நித்தம் ஆறுகாலத் திருமுழுக்காட்டு நடைபெறுகின்றது. இதுபோல் படிலிங்கங்கள் ஐயாறு முதலிய தலங்களில் இருப்பினும் பரார்த்த பூசையில் தில்லை அழகிய சிற்றம்பல உடையவரது சிறப்பினைப் போல் காணமுடியாது.

ஆனால் ஆன்மார்த்த (உயிர் கடவுள்) பூசையில் சைவாகம முறைப்படி சமய, விசேட, நிர்வாண தீக்கை பெற்ற சிவபூசகர்கள் குறிப்பிட்ட அளவில் படிகலிங்கத்தைப் பூசிப்பதைக் காணலாம். மற்றும் சைவ சமய மடாதிபதிகள், ஆச்சாரியர்கள் நித்தம்படிக லிங்கத்தைத் தம்மரபு வழி வந்ததை இன்றும் பூசிக்கின்றனர்.

இப்படிகம் மூவகைத்து. ஒன்று சூரியனுக்கு நேரில் இப்படிகத்தைக் காட்டி அடியில் பஞ்சு, நார் இவற்றை வைத்தால் இவை தீப்பற்றும். (இது சூரியகாந்தம்)

மற்றொன்று முழுநிலா (பவுர்ணமி) நாளில் சந்திரனுக்கு நேரில் பிடித்தால் நீர் சொட்டும். இது சந்திரகாந்தம்.

இந்தச் சூரிய, சந்திரகாந்த மற்ற படிகமே சிவலிங்கத்திற்கு ஏற்றது. இதனில் வெள்ளை, சிவப்பு, மஞ்சள், கருப்பு முறையே நால்வகை இனத்தவர் பூசிக்க நலம் தருவது. சலலிங்கமான (அசைவுடைய) இது நிலையாக ஒரே இடத்தில் வைக்கப் பெறாது வைத்துப் பூசித்தபின் எடுத்துப் பூசனைப் பெட்டியில் வைக்கவேண்டியது.

அமைப்பு: இது பட்டை, வட்டம் இருவகை வடிவில் இருக்கலாம். இதனைஅமைக்கும்போது வச்சிரத்தை (வைரத்தை) ஆயுதமாகக் கொள்ளவேண்டும். வச்சிரத்தைசாணைப்பிடித்து இரும்பினாலான சலாகையினால் சிதைத்தல், வெட்டுதல்,

ஆகியவற்றைச் செய்தல் வேண்டும். சாணைப் பொடியுடன் (மெருகுமணலுடன்) தண்ணீரைக் கலந்து தக்கவாறு தேய்க்கவேண்டும்.

சப்தலிங்கத் தலங்களான திருவாரூர், நாகை, நள்ளாறு வாய்மூர், கோளிலி, காறாயில், மறைக்காடு ஆகிய தலங்களில் மரகதம் முதலிய ரத்தினங்களால் ஆன இலிங்கங்கள் பெட்டகத்துள் வைக்கப் பெற்று அந்தந்தத் தல தியாராசப் பெருமானின் அருகில் வைக்கப் பெற்று நித்தம் வழிபடப் பெறுகின்றன.

நிறைசெல்வத் திருவாரூர் தியாகராசப் பெருமான் அருகில் உள்ளது மரகதத் தாலான மரகதலிங்கமாகும்.இன்றும் ஒருசில தனிப்பட்டவர்கள் தம் நித்தியபூசையில் மரகதலிங்கம் வைத்தும் பூசிக்கின்றனர். சோழநாட்டுத் தேவாரத் தலமான திருஈங்கோய்மலை மூலலிங்கம் மரகதாசலர், மரகதமூர்த்தி என்று அழைக்கப் பெறுகிறது.

மற்றொரு தேவாரத் தலமான திருமழப்பாடி மூலலிங்கம் 'வச்சிரத் தம் பேசுரர்' எனப் பெயர் தாங்கியுள்ளது. இதனை நாவுக்கரசர் இத்தலத் திருத்தாண்டகத்தில் (6-40-1) "மலையடுத்த மழபாடி வயிரத்தூணே" என்று குறிப்பிடுகின்றார்.

தொண்டைநாட்டுத் தேவாரத் தலமான இடைச்சுரத்திர் (திருவடிசூலம் இறைவன் மரகதலிங்கமாக விளங்குகிறார் திருமுழுக்காட்டியபின் கற்பூரசோதியைக் காட்டினால் இலிங்கத்தினுள் ஒளி தெரியும்.

இரத்தின லிங்கங்கள் முதலானவை பற்றித் திருமந்திரம் கூறுவன.

முத்துடன் மாணிக்கம் மொய்த்த பவளமும்
கொத்துமக் கொம்பு சிலைநீறு கோமளம்
அத்தன்றன் னாகம மன்ன மரிசியாம்
உய்த்ததின் சாதனம் பூயண லிங்கமே [13]

துன்றுந் தயிர்நெய்பால் துய்ய மெழுகுடன்
கன்றிய செம்புகனலிர தஞ்சலம்
வன்திறல் செங்கல் வடிவுடை வில்லம் பொன்
றென்றியங் கொன்றை தெளிசிவ லிங்கமே 14

மறையவர் அர்ச்சனை வண்படிகந்தான்
இறையவர் அர்ச்சனை யேய பொன்னாகும்
குறைவிலா வைசியர்க்குக் கோமளமாகும்
துறையுடைச் சூத்திரர் தொல்வாண லிங்கமே 15

அந்தணர்க்கு—படிகலிங்கம், அரசருக்கு — பொன்லிங்கம், வைசியருக்குப் பொன். சூத்திரருக்குப் பாணலிங்கம், பூசிக்க நற்பயனைத் தரும் எனத் திருமந்திரம் உரைக்கிறது.

## இரசலிங்கம்

தாதுவகை, ரசம், உப்புக்கல், படிகம். தாதுப்பொருளாகிய பாதரசத்தைப் பல்வகை மருந்து பச்சிலைச்சாறுகளுடன் கலந்து நெருப்பில் பலதடவை வைத்தெடுத்துக் கெட்டியாக்கிச் சிவலிங்கம் செய்தல். சிவபாகம் ஆவுடையார் இரண்டையும் ஒன்றாக இணைத்துச் செய்யவேண்டும். இது பெரும்பாலும் ஆன்மார்த்த பூசைக்கான இலிங்க அளவே செய்ய முடியும். ஆலயங்களில் (பரார்த்த பூசையில்) வைப்பதற்குச் செய்தல். அதிகமில்லை.

இந்த இலிங்கபூசையானது கல், படிகம். உலோகம், இரத்தினம் மற்றும் பல் பொருளால் ஆக்கப்படும் லிங்கமனைத்திலும் மிகமிகச் சிறந்து பூசிப்பவருக்கு இம்மை மறுமை இன்பம் அனைத்தும் தருவதாகும்.

தொண்டை நாட்டுத் தேவாரத் தலங்களுள் ஒன்றான திருமுல்லைவாயில் என்ற தலத்து மூலலிங்கம் மண்வடிவம். இங்கு 1985-ம் ஆண்டில் வழிபாட்டிற்குப் பெரிய அளவில் இரச லிங்கம் ஒன்று உருவாக்கப் பெற்றுப் பூசிக்கப்படுகிறது.

1. கல்லைக் கெல்லும்போது சத்தமும், குட்டை வடிவ மானதும், பால (பாலை) சிலை.

2. கல்லைக் கெல்லும்போது மணிஓசை, நீண்ட வடிவு, பெண்சிலை.

3. கல்லைக் கெல்லும்போது எரசலான சிலைகள் விருத்த சிலை.

ஆண், பெண், அலி, சிலைகள்.

1. அதிகமணிஓசை, நீண்ட வடிவு ஆண் சிலை

2. பனை ஓசை, நீண்ட வடிவு, பெண் சிலை,

3 பளபளப்பின்றி, உறுதியின்றி, ஒலியின்றி, கரடுமுரடாய் உள்ளது அலி சிலை.

உருவம் அமைக்க,

ஆண்சிலையால் — லிங்கம்

பெண்சிலையால் — பீடம்

அலிசிலையால் — பாதாரம், லிங்கஅடித்தலம் ஆகிய வற்றை அமைக்கவேண்டும்.

லிங்கம் செய்தற்காகும் கற்கள்,

1. கிழக்கே நுனியும் மேற்கில் அடியும்

2. வடக்கே நுனியும் தெற்கில் அடியும் உள்ளவற்றை எடுக்கவேண்டும். கிழக்கு, வடக்குப் பக்கங்கள் லிங்கத்தின் நுனி(தலைப்பக்கம்).

சிலையின் அடிப்பக்கம் முகம் முன்பக்கம் மேல்பக்கம் பின்பக்கமாகும்.

நம்நாட்டில் சிலைக்குரிய கற்களைத் தரும் மலைகள்.

நீராட்டு:

சிலைக்குரிய கல்லைத் தேர்ந்து எடுத்தபின் கங்கை, காவிரி மற்றும் உள்ள புண்ணிய நதி நீர்களால் நீராட்டுதல் வேண்டும். தேர்ந்தெடுத்த கல்லை மந்திரத்தால் தூய்மை செய்வது.

கல்லை எடுத்ததும் இருதயமந்திரம் சொல்லிப் பாலினால் அபிஷேனம் செய்து சத்யோசாத மந்திரத்தால் சந்தனம், புஷ்பம் அணிவிக்கவேண்டும். பின் ஈசான்யத்தில் சாந்தி ஓமம் செய்யவேண்டும்.

| மந்திரம் | சொல்லும் எண்ணிக்கை | இடவேண்டிய பொருள் |
|---|---|---|
| இருதயமந்திரம் | 100-50-20 | சமித்து |
| மூலமந்திரம் | ” | நெய் |
| அகோரமந்திரம் | ” | அன்னம் |
| தந்தபுருஷமந்திரம் | ” | பச்சரிசி |
| ஈசானமந்திரம் | ” | எள் |
| கவசமந்திரம் | ” | கடுகு |

“அந்நே” என்ற மந்திரத்தால் “ஸ்விஷ்டகிருத்” ஓமம் செய்து பூர்ணாகுதி செய்தபின் அக்கினியை உத்வாசனம் செய்தல் வேண்டும்.

கல் உளியை அஸ்திமந்திரத்தால் பூசிக்கவேண்டும் அபர்ஸர்ன என்று மந்திரத்தைச் செபித்து, கல்லைத் துண்டிக்க வேண்டும்.

சிலை செப்யும்போது உளி அடி ஓசை பிறர் காதில் விழுதல் கூடாது. இதற்காகச் சிலை செல்யும் இடத்தை ஊர்ப்புறத்தே மக்கள் நடமாட்டம் அற்ற இடத்தில் வைப்பதும், சிலை செய்யும்போது அவ்வோசை செவியல் விழாவண்ணம் இசைக் கருவிகள் மேளம் போன்ற மங்கள இசையை இசைத்தலும் பண்டைய வழக்கம்.

எந்த வருணத்தவருக்கு எந்தெந்த வர்ணக்கல் சிறப்புடையது என்பது:

1. வெள்ளை — பிராமணருக்கு
2. சிவப்பு — க்ஷத்திரியருக்கு
3. மஞ்சள் — வைசியருக்கு
4. கருப்பு — சூத்திரருக்கு

இந்த வர்ணம் நான்கும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கையும் கொடுக்கும்.

கற்களில் ரேகை 3:

1. கயிறு போன்ற தோற்றம்
2. சூரிய கிரணம் பாய்ந்தது
3. மழைக்கால் உருவம் உடையது

பிந்துவகை 3:

1. நாவற்பழ உருவம்
2. திராட்சைப்பழ உருவம்
3. வேறுவட்ட வடிவம்

நன்மை பயக்கும் ரேகை:

1. பேரீச்சம் இலை போன்ற கோடு
2. அருங்கட்டை "
3. மூங்கில்முளை "
4. எட்டுக்கால்பூச்சி "
5. வெள்ளை நிறமல்லாத மற்ற நிறமுள்ள கல்லில் வெள்ளை ரேகை "

இவை சகல சம்பத்தையும் தரும்.

சிலைக்குக் கொள்ள வேண்டியது.

கருப்பு நிறக்கல், பச்சை நிறக்கல், கருப்பும் பச்சையும் கலந்த நிறக்கல், வெள்ளை நிறக்கல், பேரீச்ச இலை நிறக்கல், அருகங்கட்டை நிறம் இவை நற்பலனைத் தரும்.

சிலைக்கு ஆகாத கற்கள் :

1. எப்போதும் மழையில் நனைந்தவை.
2. எப்போதும் வெய்யிலில் கிடந்தவை.
3. தீயின் நாற்றம் அல்லது தீயில் பொசுங்கியவை.
4. உப்புநீர் படிந்தவை.
5. கெட்ட இடத்தில் கிடந்தவை.
6. நீர்க்கரையில் கிடந்தவை.
7. மணல் கலந்தவை.
8. அசுத்தக் காரியங்களுக்குப் பயன்பட்டவை.
9. சேறுபடிந்தவை.
10. சிதைவுற்றவை.
11. பார்க்கப் பயங்கரமானவை.
12 கோடு, புள்ளி, களங்கத்துடன் கூடியவை.

மற்றும்

இரும்புநிறம், கருங்குளவிநிறம், மயில்தோகைநிறம் உடைய கற்களும் சிலைசெய்ய ஆகாத கற்களாகும்.

கருப்புக்கல்லில் கருப்புக்கோடு, வெள்ளைக்கல்லில் கருப்புக் கோடு உள்ளவை அழிவையும், பிந்து தோஷமுள்ளவை புத்திர நாசம், தரித்திரம், மற்றும் செல்வ அழிவையும் தரும்.
ஒலி உருவம் இவற்றால் கற்களின் பேதம்.

உலோகம்:

சிற்பங்களில் பார்ப்பவருக்கு மிகக் கவர்ச்சியையும் அழகையும் நுட்பத்தையும் காட்டுவது உலோகச் சிற்பங்கள். இதற்கு உரிய உலோகங்கள் பொன், வெள்ளி, செம்பு, பித்தளை, வெண்கலம், இரும்பு, ஈயம், துராக்கட்டை என்னும் எட்டு ஆகும். இவற்றுள் அதிகமாய்ப் பயன்படுவது, பஞ்சலோகம் என்னும்ஐவகை கலப்பு உலோகங்களே, இவற்றால் சிவலிங்கத் திருமேனிகள் உருவாக்கப்படுவது மிகமிகக் குறைவு. உருவத் திருமேனிகளான மகேசுவர வடிவங்கள் மற்றும் அனைத்து வடிவங்களாகும். இவ் உலோக இலட்சணங்கள் பூசிப்போருக்குத் தரும் பயன்:

பொன் — இம்மை மறுமை இன்பம்
வெள்ளி -- உடல் வளர்ச்சி நலம்
செம்பு — நன்மக்கட்பேறு
பித்தளை — சகல நன்மை
வெண்கலம் — நீண்டவாழ்நாள்
இரும்பு — நலம் பயப்பது அன்று (ஆறுப்பு)
ஈயம் — பகைவரை மாய்க்கு
துராக்கட்டை — ஏவல் அகற்று

## 2.1.6.5 சிலை வடிவங்கள் (மானுடலிங்கம்)

கல்லில் தெய்வ வடிவங்களை உருவாக்கி வழிபட்டுவரும் வழக்கம் மிகமிகத் தொன்மையானது. சிவலிங்க வடிவங்கள் கல்லில் உருவாக்கி வழிபட்ட தொன்மைக்குப் புதையுண்ட மொகஞ்சதாரோ நகர அகழ்வு ஆராய்ச்சியில் கிடைக்கப் பெற்ற லிங்கத் திருவுருவே முதன்மையான சான்று. மற்றும் நடுகல் வணக்கம் தொல்காப்பியம் சுட்டிக் காட்டுகிறது. இப்பண்டை மரபைத் தொடர்ந்து இன்றும் சிற்றூர்களின் மரத்தடியில் அம்மிக்குழவி வடிவ கருங்கல், செங்கற்களை கிராமதேவதைகளைக் குறிக்கும் வண்ணம் வைத்து வழிபடாய்

பட்டு வருகிறது. நாகரிக முதிர்ச்சியில் ஆகம, சிற்ப நூல் முறைக்கு வழுவாது கைதேர்ந்த சிற்பிகளால் உருவாக்கப் பட்டுக் கோயில்களில் வழிபடப்பட்டு வருகிறது. இவ்விதக் கருங்கல் வடிவு பற்றிக் கீழ் காண்போம்.

## 1. கருங்கல் இருக்குமிடங்கள்:

மலை, கடல், புண்ணியத்தீர்த்தம், புண்ணியதலங்கள், காடு, காட்டில் உள்ள மரத்தடி, ஆலயத்தின் அருகில், நதி, குளம். கருங்கற்களின் நிறம் நால்வகை அவை: வெள்ளை, சிவப்பு, கருப்பு, ஆகியவை.

## 1. வெள்ளையில் 7 வகை

பால், சங்கு, முல்லைமலர், சந்திரன், முத்து, படிகம், மல்லிகை மலர் இவற்றின் நிறம்.

## 2. சிவப்பு நிறத்தில் 7 வகை

புரசம்பூ, பட்டுப்பூச்சி, சாதிலிங்கம், முயல்ரத்தம், மாதுளம்பூ, பந்துகப்பூ, சிவப்புடன்கூடிய பெருமருந்துப்பூ இவற்றின் நிறம்.

## 3. மஞ்சள் நிறத்தில் 7 வகை

சரக்கொன்றை; செண்பகம், மஞ்சள், மஞ்சள்குறிஞ்சி, எலுமிச்சம்பழம், அரிதாரம் இவற்றின் நிறம்.

## 4. கருப்புநிறத்தில் 9 வகை

மசிஷாக்ஷம், பூனைக்கண்குங்கிலியம், அஞ்சனக்கல், நீலோத் பலம். கருங்குளவி, மயில்கழுத்து, மஷீபத்திரம், ராஜாவர்த்தம், (கருப்புத் தேன்கலந்தநிறம்), கருப்புப் பயறு, குறும் பயறு இவற்றின் நிறம்.

சிலை செய்ததும் பொற்காசை ஒன்றை வைத்து நீரிலும் பின் தானியத்திலும் வைக்கவேண்டும்.

கற்சிலையில் கூர்ச்சம் (நாணல் முடிச்சு) துணியைச் சுற்றி வைக்கவேண்டும். தினம் தண்ணீரை மாற்ற வேண்டும்

## 2. 1. 6. 6. பாணலிங்கங்கள்

பாணம் என்றால் நீர் என்று பொருள். நருமதை ஆற்றின் நீரிலிருந்து பெறப்படுவதாலும், பாணாசூரனால் பூசிக்கப் பெற்று விடப்பட்டதாலும் இந்த இலிங்கங்கள் பாணலிங்கங்கள் எனப்பெயர் பெற்றன.

இவை சதாசிவனால் பூசிக்கப் பெற்றுப் பாணாசூரனுக்குக் கொடுக்கப் பெற்றவை. இவை தானே தோன்றிய சுயம்பு வடிவங்களே. இவ்வாறு பாணாசூரனால் பெறப்பட்ட இலிங்கங்கள் 14 கோடிகளாகும். இந்த இலிங்கங்களில்

3 கோடி - சிவலிங்கமலையிலும்

3 கோடி - திருப்பருப்பதத்திலும் (சீசைலம்)

3 கோடி - காளிகர்த்தம் என்ற ஊடையிலும்

ஒருகோடி - மகேந்திரமலையிலும்

ஒருகோடி - மகேசுவர மலையிலும்

ஒருகோடி - நேபாளத்திலும்

ஒருகோடி - கன்னியார்த்தத்திலும்

ஒருகோடி - கனையாச்வயம் என்ற இடத்திலும்

ஆக பதினான்குகோடி பாணலிங்கங்கள் உள்ளதாகக் கூறப் படுகிறது.

இவை பல்வகை வடிவமும் பல்வித நிறமும் உடையவை. பீடமற்றதாயும் மத்திய சூத்திர நிறமற்றதாயும் இருக்கும். எல்லாவிதப் பூசைக்கும் பொருந்துவதாயும் நருமதை ஆற்றில் உள்ளதாம் ருஇக்கும்.

அமைப்பு: சிறிது நீண்டுருண்ட வடிவுடன் நடுப்பகுதி பருத்தும் அடியும் தலையும் சிறுத்தும் இருக்கும். மற்றும் வழவழப்பாயும் தேன்நிறமும் குளிர்ச்சியுடையதாயுமிருக்கும் இதன் பருத்த பகுதியைத் தலையாகவும் தலைப்பகுதியில் உயர்ந்த பாகத்தை முகம் எனவும் கொள்ளல் வேண்டும்.

பாணத்தின் மொத்த உயரத்தில் அடிப்பகுதி ஆவுடைக்குள் வைக்கலாம். ஆவுடையின் மேல் மட்டத்திலிருந்து தெரியும் பகுதியே பூசாம்சமாகும்.

## 2. 1. 6. 7. தோற்றம் அமைப்பினால் பாண லிங்கத்தின் பெயர்

1. வச்சிராயுதஅடையாளத்துடன்மஞ்சள் நிறமுடையதாய் கொழுமையுடன் சடாட்சரமாகவும்,மற்றும் பசும்பொன் நிறம் ஆறுகோணமாயும் இருப்பது இந்திரலிங்கம் ஆகும்.

2. ஐந்திரலிங்கம் தாமிர நிறத்துடன் சக்தி ஆயுதம் போன்று அல்லது சக்தி ஆயுத அடையாளத்துடன் வெம்மையுடையதாய் உள்ளது அக்கினிலிங்கம் ஆகும்.

3. தண்டாயுதம் போன்று அல்லது தண்டாயுத அடையாளத்துடன் கருப்பு நிறமாயிருப்பது யாம்யலிங்கம் இயமலிங்கம் ஆகும் இதனை வைத்துப் பூசிப்பதால் பகைமாறும்.

4. கத்தி வடிவம் அல்லது கத்தி அடையாளத்துடன் புகை நிறமாயிருப்பது நிருதிலிங்கம் ஆகும்.

5. பாசம் (கயிறு) ஆயுத அடையாளத்துடன் விருத்தமாய் வெள்ளை நிறத்துடன் இருப்பது வருணலிங்கம். இதனைத் தண்ணீரில் வைத்தால் அந்நீர் சுவையுடனும் தூய்மையுடனும் இருக்கும்.

6. கொடி வடிவ அடையாளத்துடன் புகை நிறமுடையது காற்று (வாயு) லிங்கம். இதன் உச்சியில் ஒரு வில்வ இலையை வைத்தால் காற்று இல்லாதநேரத்திலும் இது அசையும். இதனை வைத்துப் பூசிக்கப் பகைவர் வெருண்டோடுவர்.

7. கதாயுதவடிவம் அல்லது கதாயுத அடையாளத்துடன், பொன்னிறமாயிருப்பது குபேரலிங்கம். இதனை விளைவயலில் வைத்தால் பயிர் நிறைய வளரும்.

8. சூலாயுதம் போன்று அல்லது சூலாயுத அடையாளத்துடன் பனி, சந்திர நிறத்துடன் இருப்பது ஈசான லிங்கம். இதனை வைத்துப் பூசிக்க அனைத்து நலனும் வந்து சேரும்.

9. சங்கு, சக்கரம் கதை, பத்மம், ஸ்ரீவத்சம், மீன், ஆமை பன்றி முதலிய அடையாளமுள்ளவை வைணவலிங்கம் எனப்படும். இதனை வைத்துப் பூசிப்போர் தாம் கொண்ட எச்செயலிலும் வெற்றி பெறுவர்.

10. தாமரைமலர் அடையாளத்துடன் செந்தாமரை நிறத்துடன் உள்ளவை பிர்மலிங்கம் எனப்படும். இதனை வைத்துப் பூசிப்போர் நன்மக்கட்பேற்றைப் பெறுவர்.

இவ்வாறு இந்திராதிலிங்கங்கள் பல ஆயுத அடையாளங்களால் இவ்வாயுதங்களைத் தாங்கிநிற்கும்.

வச்சிரம் - இந்திரன்

சத்தி - அக்கினி

தண்டம் - இயமன்

கத்தி - நிருதி

பாசம் - வருணன்

கொடி - வாயு

கதாயுதம் - குபேரன்

திரிசூலம் - ஈசானன்

சங்கு, சக்கரம் - திருமால் (வைணவம்)

தாமரை - பிரமன்

கடவுளர்களின் பெயரில் அவர்களது இலிங்கமாக விளங்கும். பொதுவாக இவ்விலிங்கங்களைப் பல தடவை தராசில் வைத்து எடையிட்டால் ஒரே அளவாயிராது. ஆற்று நீர்ப் பெருக்கத்தில் இட்டால் உண்மையான பாணலிங்கமெனில் கிடைத்துவிடும். சாதாரணகல் எனின் கிடைக்காது.

இவற்றுள் குற்றமுடையவையும் பூசிப்பதால் வரும் கேடும்

1. கரடுமுரடானவை — பெற்ற மக்கள் அழிவைத் தரும்
2. அரிப்புண்டது — இல்வாழ்வில் கேட்டையும்
3. ஒருபக்கம் சிதைந்தது — பசு உறவினர் அழிவையும்
4. தலையில் வெடிப்புண்டது - பிணி, இறப்பையும் கொடுக்கும்.

இத்தகைய கேடுகள் இவற்றைப் பூசிக்கும் இல்வாழ்வானுக்கு மட்டுமே வந்துசேரும். ஆனால் பிர்மசரிய நிலையில் உள்ளவன் பூசிக்கயாவும் நலமேயாகும்.

இல்வாழ்வான் பூசிக்க நலன் தருபவை: நாவற்பழம் போன்றவை, அண்டவடிவம் உள்ளவை,

இவற்றுள் ரௌகம் என்பது ஆற்றுநீர் வேகத்தால் தேய்ந்து சுத்தமானதாயிருக்கும்.

இப்பாணலிங்கங்கள் உளுந்து அளவு முதல் ஒரு தச்சு முழு அளவு வரை இருக்கும். இவற்றுள் மாஷ அளவிலிருந்து விதஸ்தி அளவு வரை ஆன்மார்த்த (உயிர்ககடவுள்) பூசைக்கும், இதற்கு மேற்பட்டவை கோயில்களில் வைத்துச் செய்யும் பரார்த்த பூசைக்கும் உகந்ததாகும்.

பாணலிங்க அளவு

சுரலிங்கம் ஒன்பது விதம்:

1. உத்தமம் 9, 8, 7, அங்குல உயரமுள்ள — 3 இலிங்கங்கள்

2. மத்திமம் 6, 5, 4, அங்குல உயரமுள்ள — 3 இலிங்கங்கள்
3. அதமம் 3, 2, 1, அங்குல உயரமுள்ள — 3 இலிங்கங்கள்

## பூசை செய்யத் தகாத இலிங்கங்கள்

எடை, அளவு, விவரம்:

அஷ்ம் என்பது - 80 குன்றிமணி எடை

5 குன்றிமணி எடை ஒரு மாஷம்

12 மாஷம் (80 குன்றிமணி) எடை ஒரு அட்சம்.

ஒரு அட்ச எடைக்குக் குறைவான பாணலிங்கத்தைப் பூசைசெய்தல் கூடாது.

பெருவிரல் நீளத்திற்குக் குறைவான உயரமுள்ளபாணலிங்க கத்தையும் பூசை செய்தல் கூடாது.

## 2.2 எண்வகை சிவவடிவங்கள் [அட்டமூர்த்தம்]

மண் (பிரிதிவி), நீர் (அப்பு), அனல் (தேயு), காற்று (வாயு) வெளி (ஆகாயம்) என்றும் ஐம்பெரும் (பஞ்ச) பூத வடிவங்களுடன் சூரியன், சந்திரன், உயிர் (ஆன்மா) என்றும் மூன்றும் சேர்ந்த எண்வகை இயற்கைப் பொருள் வடிவங்களிலும் சிவ வடிவங்கள் நிகழ்கின்றன.

### 2.2.1. மண் [பிரிதிவி] இலிங்கம்

சிவலிங்கத்தை உருவாக்கப் பயன்படும் பொருள்களில் மண், மணல் இவையும் சேரும். இவ்வாறு மண், மணலால் ஆக்கப்பட்டு இன்றும் வழிபட்டு வரும் இலிங்கங்கள் தமிழகத்துப் பெருங்கோயில்களில் உள்ளன. மண்வடிவம் (பிரிதிவிவடிவம்) என்னும் பெயரில் திருவாரூரும், கச்சிஏகம்பமும் விளங்குகின்றது.

திருவாரூர் மூலலிங்கம் புற்றிடங்கொண்டார் (வன்மீகநாதர்) என்று விளங்குகின்றார். காஞ்சியில் உமாதேவியும், இராமேச்

சரத்தில் இராமனும் சீதையும் மணலால் இலிங்கம் அமைத்துப் பூசித்த இலிங்கங்கள் இன்றும் விளங்குகின்றன. இதுபோல் பலப் பலத் தலங்களில் மண்வடிவச் சிவவடிவங்கள் உள்ளன.

## 2.2 2. (நீர் அப்பு) இலிங்கம்

சோணாட்டு தேவாரத் தலங்களுள் ஒன்றாய்ச் சிறந்து விளங்குவது திருச்சிராப்பள்ளிக்கு அருகில், காவிரியின் வடகரையில் உள்ள திருவானைக்கா. இங்கு நாவல் (சம்பு) மரத் தடியில் எந்நேரமும் நீர் ஊற்றெடுத்துக் கொண்டிருக்கும் இடத்தில் உள்ள சிவலிங்கம் 'செழுநீர்த்திரள்' என்றும் அப்பு லிங்கம் என்றும் அழைக்கப்படுகிறது. ஒரு சமயம் உமாதேவி யார் சிவபூசை செய்யக் காவிரி நீரையே சிவலிங்கமாய்ப் பிடித்து வைத்துப் பூசித்த இலிங்கம் இதுவாகும்.

இன்று தண்ணீர் வடிவில் சிவபிரானை மட்டுமின்றி மற்றும் பல தெய்வங்களைத் தண்ணீர் வடிவில் வழிபடும் வழக்கம் இருக்கிறது. ஒவ்வொரு கோயில்களிலும் குடமுழுக்குச் செய்ய முற்படும்போது மூல வடிவின் ஆற்றலை (சக்தியை) மந்திரத்தின் மூலம் குடத்து நீரில் புக வைத்துப் பூசித்து ஆற்றலை மிகுதி யாக்கி மூடிவடிவத்தில் மந்திரத்தின் மூலம் திருமுழுக்காட்டிச் செலுத்தப்படுவதை யாவரும் அறிவர்.

இவ்வாறு குடத்து நீருடன் சிவவடிவாய் விளங்கும் பெருமானுக்கு அதன்கண் விளங்கும் பொருள்கள் அங்கங்களாக விளங்குகின்றன.

1. குடம் - தசை (மாமிசம்)
2. குடத்து நீர் - குருதி (இரத்தம்)
3. குடத்தின் மேற்சுற்றப் பட்டிருக்கும் நூல் - 72000 நாடிகள்
4. குடத்துள் இடபட்டிருக்கும் நவரத்தினங்கள் - எலும்பு, சுக்கிலம்

| | | |
|---|---|---|
| 5. கும்பத்தின் மேல் ஆடை | - | தோல் |
| 6. நாணல் முடிச்சு (கூர்ச்சம்) | - | கேசரம் |
| 7. மாவிலை | - | சடை |
| 8. மாதுளம்பழம் | - | பற்கள் |
| 9. தேங்காய் | - | சிரம் (தலை) |
| 10. சிவாச்சாரியர் கூறும் மந்திரங்கள் | - | உயிர் |

## 2. 2. 3. அனல் [தேயு வடிவம்]

நான்முகனும் திருமாலும் முடியும் அடியும் அறியாவண்ணம் சிவபிரான் மண்முதல் அண்டமுற அனல் பிழம்பாய் நின்ற இடமே சிவபிரான் அனல்வடிவாய் இருக்கும் தலம் திருவண்ணாமலை.

சிவபிரானின் அனல் உருவவழிபாடு குடமுழுக்கு நாட்களில் வேள்விச்சாலையில் செய்யப்படும். வேள்வியின் மூலம் அறியப்படுவது.

## 2. 2. 4. காற்று (வாயு) இலிங்கம் [திருக்காளத்தி]

இது தமிழகத்தின் வடக்கு எல்லையினை ஒட்டி உள்ள தேவாரத்தலம். இங்குள்ள சிவலிங்க வடிவம் தோற்றத்தில் எங்கும் இல்லாதவகையில் உள்ளது. பூசிக்கும் சிவாச்சாரியாரும் தம் கையால் தீண்டும் வழக்கம் இல்லை. இம்மூலலிங்கம் அருகில் இருக்கும் திருவிளக்குகளில் ஒன்றுமட்டும் எந்நேரமும் காற்று விசையால் ஆடுவது சிவபிரானின் காற்றுவடிவைக் குறிப்பது என்பர்.

மேலும் இத்தலத்து தேவாரத் திருத்தாண்டாகப் பாடல் அங்குச் சிவபிரான் காற்று வடிவிலும் மற்றும் பிற வடிவிலும் விளங்குகிறான் என்பதை,

"மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான்
வாயாரத் தம்மடியே பாடுந் தொண்டர்

இனத்தகத்தான், இமையவர் தஞ்சிரத்தின் மேலான்
ஏழண்டத்து அப்பாலான் இம்பர்செம்பொன்

புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதினுள்ளான்
பொருப்பிடையான், நெருப்பிடையான், காற்றினுள்ளான்

கனத்தகத்தான் கயிலாயத்து உச்சியுள்ளான்
காளத்தியான் அவன் என், கண் உளானே" 16

என்று நாவரசர் தண்ணீர், மலை, காற்று வடிவில் சிவபிரான் விளங்குவதைப் பாடுகிறார்.

## 2.2.5. வெளி (ஆகாய) இலிங்கம்

சைவர்கள் கோயில் எனச் சிறப்பித்து வழிபடும் முதல் தலம் சிதம்பரம். இது சித்து அம்பரம். அதாவது அறிவு (ஞானம்) வடிவான வெளி என்பதாகும். இங்கு ஆடலரசன் இருக்கும் இடத்தை 'சிற்பரவியோமமாகும் திருச்சிற்றம் பலம்' என்று போற்றுகின்றார் சேக்கிழார் அடிகள்.

இவ்வாறு எண்வகை வடிவில் (அட்டமூர்த்தமாக) சிவபிரான் விளங்கும் வடிவினை சிவாலயக் குடமுழுக்கு நாளில் காணலாம்.

1. மண்வடிவடிவாய்(பிரிதிவி வடிவில்) குடத்திலும்
2. தண்ணீர் (அப்பு) வடிவில் குடத்துள்ளிருக்கும் நீரிலும்
3. அனல் (தேயு) வடிவில் மந்திர உச்சரிப்பிலும்
4. காற்று (வாயு) வடிவில் மந்திர உச்சரிப்பிலும்
5: வெளி (ஆகாய) வடிவில் மந்திர ஒலியின் வடிவிலும்
6. சூரிய வடிவாக ஒளியிலும்




படம் 9 ஆட்ய, அநாட்ய, சுரேட்ய லிங்கங்கள்

படம் 10 சர்வசலிங்க ஐந்தின் தோற்றம் ஆய்வுக்கு வரைந்தது



படம் 11 வெளிநாட்டு அருங்காட்சியகங்களில்

1) குப்த 2) நேபாள 3) பீகார் ஐந்து முகலிங்கங்கள்.




படம் 9 ஆட்ய, அநாட்ய, சுரேட்ய லிங்கங்கள்

படம் 10 சர்வசலிங்க ஐந்தின் தோற்றம் ஆய்வுக்கு வரைந்தது



படம் 11 வெளிநாட்டு அருங்காட்சியகங்களில்

1) குப்த 2) நேபாள 3) பீகார் ஐந்து முகலிங்கங்கள்.

7. சந்திர வடிவாய் மனக்குழைவிலும்

8. உயிர்வடிவாக மக்களின் ஒன்றுபட்ட கூட்டுவழி பாட்டிலும் விளங்குகிறார்.

## 2. 3. முகலிங்கங்கள்

முகலிங்கம் நால்வகைப்படும். அவையாவன:

1. ஆட்யம் 2. அநாட்யம். 3. சுரேட்யம் 4. சர்வசம்

### 2 3. 1. ஆட்யம்

சிவலிங்கத்தில் சிவபாகத்தில் 1000 முகங்களை உடையது. (ப 9/1) ஒவ்வொரு முகமும் சிறு உருண்டை வடிவாக இருக்கும். இந்த ஆயிரத்தின் வரிசை எண்ணிக்கை

| அடிமுதல் உச்சி | சுற்றுவரி | |
|---|---|---|
| 50 | 20 | 1000 |
| 40 | 25 | 1000 |

என்று ஏதேனும் ஒருமுறையில் இருக்கும். திருவையாற்றுத் தென்முகத் தெய்வமுன் மண்டபத்தில் கீழ்ப்பக்கம் ஐந்து (பஞ்ச) பூதலிங்க வரிசையில் (பிரிதிவிலிங்கம்), காற்று (தேயு) லிங்கம் முறையே இவ்வாறு அமைந்துள்ளது. திருஒற்றியூர், திருவிடைமருதூர், திருக்குடமூக்கு (கும்பகோணம்) மற்றும் சில தலங்களில் இவ்வாறு உள்ள 1000 முகங்கள் உள்ளன.

### 2. 3. 2. அநாட்யம்;

முகம் எதுவும் இல்லாதது. இது எங்கும் காணப்படுவது. (ப. 9/2)

### 2. 3. 3. சுரேட்யம்

சிவலிங்கத்தின் சிவபாகத்தில் 108 முகம் சிறு உருண்டை வடிவில் செங்குத்தாக ஒரு சுற்றில் 27 வீதம் 4 சுற்று $27 \times 4 = 108$ என்ற (ப. 9/3) அமைப்பிலும் அல்லது வேறு வகையில் மொத்தம் 108 உடையதாக இருக்கும்.

## 2. 3. 4. சர்வசம்:

இது முழு உறுப்புகளை உடைய முகலிங்கமாகும். இது ஐந்து (ப. 9/4) வகைப்படும், ஐந்துமுகம், நான்குமுகம், மூன்றுமுகம், இரண்டுமுகம், ஒருமுகம்.

## 2. 3. 4. ஐந்துமுகம்

உச்சியில் ஈசானம், கிழக்கு நோக்கி தத்புருடம், தெற்கு நோக்கி அகோரம், வடக்கு நோக்கி வாமதேவம், மேற்கு நோக்கி சத்யோசாதம் என்றும் ஐந்து முகங்களுடன் காணப்படும். இவ்வாறு ஐந்துமுகங்களுடன் உடைய சிவலிங்கம் ஒருசில இடங்களில் காணப்படுகிறது. (ப. 10&11)

தென்னாட்டில் விரிஞ்சிபுரம் (தென்னாற்காடு மாவட்டம்) தஞ்சாவூர் இராச கோபாலசாமி கோயிலில் ஒருபால் உள்ள அருங்காட்சியகத்தில் காணலாம். மற்றும் வடநாட்டில் 'நாசிக்' கோதாவரிஉற்பத்தியாகும் இடத்தில் சலவைக் கல்லால் ஐந்து முகலிங்கம் ஒன்று உள்ளது.

## 2. 3. 4. 2. நான்குமுகம்

தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோசாதம் என்ற முகங்களை முறையே கிழக்கு, தெற்கு, வடக்கு மேற்கு திசைகளில் உடையது. இவ்வகை நான்கு(சதுர்) முகலிங்கங்கள் அங்கொன்று இங்கொன்றுமாகக் காணப்படுகிறது. தென்னாட்டில் திருவானைக்கா, மதுரை, வடநாட்டில் நேபாளம், பசுபதி நாதத்திலும் மற்றும் ஒரு சில இடங்களிலும் இருக்கிறது. மற்றும் பல வெளிநாட்டு அருங்காட்சியகங்களில் நம் பாரத நாட்டு நான்கு முகலிங்கங்கள் காணப்படுகின்றன.

## 2. 3. 4. 3. மூன்றுமுகம்

மேற்குமுகம் தவிர்த்த ஏனைய கிழக்கு, தெற்கு, வடக்கு, தத்புருடம், அகோரம், வாமதேவம் ஆகியமுகங்களை உடையது இவ்வகை இலிங்கம், தொண்டை நாட்டுத்தலமான திருவக்கரை என்ற தேவாரத்தில் இருக்கிறது.




படம் 12 வெளிநாட்டு அருங்காட்சியகங்களில்

1) குப்த 2) பீகார் 3) குப்த ஒரு முகலிங்கம்

## 2. 3. 4. 4. இரண்டுமுகம்

கிழக்கு நோக்கிய தத்புருடம் மேற்கு நோக்கிய சத்யோசாதம் என்ற முகங்களை மட்டும் உடையது.

## 2,3.4.5. ஒருமுகம்

கிழக்கு நோக்கிய தத்புருட முகத்தை மட்டும் உடையது. இது ஒருசில இடங்களில் காணப்படுவதாகும். இவ்வொரு முக லிங்கம் சாருபலிங்கம் எனவும் அழைக்கப்படும். (ப.12)

இவ்வாறு இங்குக் கூறப்பட்ட 5. 4. 3. 2. 1. முகலிங்கங்கள் பல வெளிநாட்டு அருகாட்சியகங்களில் காட்சிப் பொருளாக வைக்கப்பட்டுள்ளன.

2, 3, 5, இவ்வமுவகை இலிங்கங்களைக் கோயில்களில் கருவறையில் வைக்கப்படும் போது 4 கோபுரங்களை உடைய கோயில்களில் 5, 4, முகலிங்கங்களையும், 3 கோபுர வாயில்களை உடைய கோயில்களில் மூன்று முகலிங்கங்களையும் இரண்டு கோபுரவாயில்களை உடைய கோயில்களில் இரண்டு முகலிங்கங்களையும் ஒரு கோபுரமுடைய கோயில்களில் ஒருமுக லிங்கத்தையும் அமைக்கவேண்டுமெனச் சிற்பரத்தினம் என்னும் நூலில் கூறப்படுகிறது. 2. 3. 6. இம்முகலிங்க அமைப்பு இரு வகைப்படும். ஒன்று ஆவுடையாருக்கு மேல் முகமானது கழுத் தளவிலும், மற்றொன்று மார்பிலிருந்து முடிவரை உள்ள அளவிலும் இருக்கும்.

இலிங்கநாளத்தின் உருத்ரபாகத்தில்இலிங்கத்திலிருந்துபுடைப் புச் சிற்பமாக மார்பளவு உருவங்கள் அமைக்கப்படும். இவை சத்யோசாதம், வாமதேவம், தத்புருடம், அகோரம் ஈசானம் என்ற சதாசிவமூர்த்தியின் முகங்கள் ஆகும். இங்ஙனம் நான்கு மேனியாகும். நிட்களத்திருமேனியையும் உணர்த்துவதற்காக ஐந்தாவது முகம்காட்டப் பெறுவதில்லை என்று 'சிற்பச் செப்பு நூல் என்றநூலில் பக்கம் 165 இல் குறிப்பிடப்பட்டுள்ளது.

# தில்லையில் ஒன்பது (நவ) லிங்கம்

## அட்டசித்தி (எண்வகைச் செல்வங்களை) தரும்

### சிவலிங்கத் திரு மேனிகள்




1. பிரமலிங்கம் 2. இந்திரலிங்கம் 3. அக்கினிலிங்கம்
4. இயமலிங்கம் 5. நிருதிலிங்கம் 6. வருணலிங்கம்
7. வாயுலிங்கம் 8. குபேரலிங்கம் 9. ஈசானலிங்கம்

| நால்வகை லிங்கம் | ஆகமங்களில் கூறப்படும் பெயர் | திருமுடி அமைவு (சிரோவர்த்தனம்) |
|---|---|---|
| 1. ஆட்யம் 1000 முகம் | திரைராசிகம் | பாதிமதி (அர்த்தசந்திரம்) |
| 2. அநாட்யம் முகம் இல்லாதது | வர்த்தமானம் | வெள்ளரிப்பழம் அல்லது மும்முனைத் தோற்றம் |
| 3. சுரேட்யம் | சைவாதிகம் | முட்டைவடிவம் குக்குடாண்டம் |
| 4. சர்வசம் | சமகண்டம் | தாழங்குடை |

தென்னாட்டுச் சிவாலயங்களில் மூலலிங்கத்திற்கு ஐந்துமுக (பஞ்சமுக) அருச்சனை என்ற ஒரே நேரத்தில் ஐந்து சிவாச்சாரியர் சுற்றி நின்றுகொண்டு ஐவகைப்பச்சிலை, அல்லது மலர்கள் கொண்டு அருச்சிப்பார்கள். அப்போது அருஉருவத்திருமேனியான முகம் இல்லாத லிங்கத்திற்கு ஐந்து முகங்களையும் பாவனையாகக் கொண்டு இவ்வருச்சனை செய்யப்படும்.

## 2. 3. 7. கோடிலிங்கம்

குடந்தையாகிய கும்பகோணத்திற்கும் சாமிமலைக்கும் இடையில் உள்ள தேவாரத்தலம் திருக்கொட்டையூர். இங்குக் கருவறையில் உள்ள மூல லிங்கம் கோடிலிங்கம், கோடிச்சுரர் என்ற பெயருடன் விளங்குகிறது. இவ்விலிங்க சிவபாகத்தில் சிறு சிறு வடிவில் (பலாப்பழம்போல்) பல காணப்படுகிறது

இத்தல பழைய வரலாறு சிவத்தொண்டர் ஒருவருக்காக முக்கட்பரமன் ஒரு உருவில் கோடிலிங்கமாகக் காட்சி தந்தார் என்று கூறுகிறது.

## 2. 4. ஒன்பது லிங்கங்கள் (நவலிங்கம்) படம் 13

திருமால் நீங்கிய பிரமன், இந்திரன், அக்கினி, இயமன், நிருதி வருணன், வாயு, குபேரன், ஈசானன் இவர்களுடைய பெயரைத்




படம் 14 பன்னிரு சோதிலிங்கங்கள். ஆய்வக்கு வரைந்தது.

தாங்கிய ஒன்பது லிங்கங்கள். இவ்வொன்பது லிங்கங்களின் பாணத்தில் இவர்களது கையில் உள்ள சின்னங்கள், படைக் கலன்கள் இருக்கும். இவ்வொன்பது லிங்கங்களையும் நடு முதல் மற்ற எட்டுத் திசைகளிலும் அமைத்துப் பூசிக்க எண் வகைச் சித்திகளும் வந்தடையும். [17]

| | இடம் திசை | இலிங்கப் பெயர் | சின்னம் படைக்கலம் | கிடைக்கும் சித்தி |
|---|---|---|---|---|
| 2. 4. 1. | நடு | பிர்மலிங்கம் | தாமரை | - |
| 2. 4. 2. | கிழக்கு | இந்திரலிங்கம் | வச்சிரம் | அணிமா |
| 2.4.3. | தென்கிழக்கு | அக்கினிலிங்கம் | சத்தி | மகிமா |
| 2. 4.4. | தெற்கு | இயமலிங்கம் | தண்டம் | இலகிமா |
| 2. 4. 5. | தென்மேற்கு | நிருதிலிங்கம் | வாள் (கட்கம்) | கரிமா |
| 2.4.6 | மேற்கு | வருணலிங்கம் | கயிறு (பாசம்) | பிராப்தி |
| 2.4.7. | வடமேற்கு | வாயுலிங்கம் | கொடி (துவசம்) | பிரகாமியம் |
| 2.4.8. | வடக்கு | குபேரலிங்கம் | கதை | வசித்துவம் |
| 2.4.9 | வடகிழக்கு | ஈசானலிங்கம் | திரிசூலம் | ஈசத்துவம் |

எண்வகைச் (அட்ட) சித்திகளின் விளக்கம்:

1. அணிமா : நுண்மை. மக்களின் மத்தியில் இருந்து கொண்டு அவர்களது பார்வைக்குப் புலப்படாதிருத்தல்.

2. மகிமா: ஒரே நேரத்தில் பல இடங்களில் இருத்தல்.

3. இலகிமா: பெருமை. உடலை மிகவும் இலேசாக்கிக் கொள்ளுதல்.

4. கரிமா: விண்ணிமை. உடலை மிகவும் கனமாக்கிக் கொள்ளுதல்

5. பிராப்தி: விரும்பியது எய்தல். எண்ணிய அளவில் எவர் துணையுமின்றி எங்கும் செல்லுதல்.

6. பிரகாமியம்: நிறை உண்மை. விரும்பிய இன்பத்தைப் பெறுதல்.

7. வசித்துவம்: கவர்ச்சி. எல்லா உலகங்களையும் தன் வயப்படுத்துதல்.

8. ஈசத்துவம்: ஆட்சியனாதல். யாவற்றையும் தன் கட்டளைக்குப்பணியச் செய்தல் (திருவாவடுதுறை சிவத்திரு சுவாமிநாதசிவாச்சாரியார் அவர்கள் கூறியது. காஞ்சி: வியாச வித்வத்சதஸ் மலரில்)

2.4.10. இவ்வாறு இங்குக் கூறப்பட்ட ஒன்பது லிங்கங்கள் ஒரே கோயிலுக்குள் இருக்கும் இடம் காணமுத்தி தரும் தில்லைச் சிற்றம்பலத்துள் சிவகங்கைத் திருக்குளத்தின் வடபால் ஆகும். இக்கோயிலினுள் நடுவில் சற்றுப்பெரிய வடிவில் பாணம் பதினாறு பட்டை வடிவில் ஒரு லிங்கம் இருக்கிறது. இதனைச் சுற்றி எதிரில் கிழக்கில் சற்றுத் தள்ளி அதாவது கிழக்கிற்கும் தென் கிழக்கிற்கும் நடுவில் தென்கிழக்கில், தெற்கில், தென்மேற்கில் மேற்கில், வடமேற்கில், வடக்கில், வடகிழக்கில் ஆகிய எட்டு திசைகளிலும் எட்டுப்பட்டைப் பாணங்களையுடைய இலிங்கங்கள் உள்ளன. இந்த எட்டும் நடுவில் உள்ளதை விட அளவில் சிறியன.

சுற்றியுள்ள எட்டும் நடுவில் ஒன்றும் ஆன ஒன்பது லிங்கங்களும் நவலிங்கம் என இங்கு தில்லையில் அழைக்கப்பெறுகின்றது

இவ்வாறு ஆகமத்தில் இதுவரை கூறப்பட்ட நவலிங்க விளக்கம் பற்றி இப்போது தில்லைக் கோயிலில் இரண்டுவிதக் கருத்துகள் கூறப்படுகின்றன.

1. இவ்வொன்பதும் ஒன்பது கோள்களை (நவக்கிரகங்களை) அடிப்படையாகக் கொண்டு நடுவில் பத்மபீடத்தில் சூரியலிங்கம், பின்சுற்றிலும் சுக்கிரலிங்கம், சந்திரலிங்கம் செவ்வாய்லிங்கம், இராகுலிங்கம், சனிலிங்கம், கேதுலிங்கம், குரு

லிங்கம், புதன்லிங்கம் எனப் பெயர்கள் குறிக்கப் பெற்றுள்ளது.

மற்றொரு கருத்து

திருத்தொண்டர்கள் திருத்தொண்டத் தொகையில் தனி அடியார் 63 தொகை அடியார் 9 ஆக 72 பேரைக் குறித்துப் பாடப்பெற்றது. இவருள் தொகையடியார்கள்.

1. தில்லைவாழ் அந்தணர்
2. பொய்யடிமையில்லாத புலவர்
3. பத்தராய்ப்பணிவார்
4. பரமனையே பாடுவார்
5. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்
6. திருவாரூர்ப் பிறந்தார்
7. முப்போதும் திருமேனி தீண்டுவார்
8. முழுநீறுபூசிய முனிவர்
9. அப்பாலும் அடிசார்ந்தார்.

இவ்வொன்பது பெயர்களது நினைவாகக் கொண்டு திருத்தொண்டீச்சரம் என்னும் பெயருடன் இது விளங்குகிறது. எனவும் கூறப்படுகிறது.

## 2.5 பன்னிரு சோதிலிங்கங்கள்

இதுவரை சிவலிங்கத் திருமேனிகளின் வடிவப் பொது இலக்கணங்களைப் பற்றி ஓரளவு ஆராய்ந்து வரையப் பெற்றது. அடுத்து இந்துமதம் விரவிச் செழிக்கும் நம் பரத கண்டத்துள் உள்ள பல தலங்களின் மூர்த்திகளைப் பற்றிக் காணும் முகத்தால் பன்னிரு சோதிலிங்கங்களின் அமைப்பை முதலில் காண்போம்.

இப்பன்னிரண்டில் இராமேச்சரம் ஒன்று மட்டுமே நம்தமிழ் நாட்டிலும், திருப்பருப்பதமாகிய ஸ்ரீசைலம் ஆந்திரத்திலும்

ஏனைய பத்தும் வடநாட்டிலும் உள்ளன.

மக்களது நடை, உடை, உணவு, பழக்க வழக்கங்கள் நம் பரத கண்டத்துள் இடத்திற்கு இடம் சற்று மாறுபட்டு விளங்குவது போல் சமய வழிபாட்டு முறையிலும் சற்று மாறு படத்தான் செய்கிறது. ஓவியத்திலும், சிற்பத்திலும் தென்னாடும் வடநாடும் இப்படித்தான்.

மேற்படி 12 சோதிலிங்கத் தலத்துள் விளங்கும் சிவலிங்கத் திருமேனி வடிவங்கள் தென்னாட்டு இராமேச்சரத்தில் மட்டுமே ஆகம சிற்ப முறையின்படி பிரமபீடம், விட்டுணு பீடம், சிவபாகம் ஆகிய முறையில் அமைந்திருக்கிறது. ஏனைய 11ம் பாணம் மட்டுமே சிறியதும் பெரியதுமாகத் தரைமட்டத்தில் இருக்க, சுற்றிலும் தொட்டி அமைப்பும் மேடை அமைப்பும் இருக்க விளங்குகிறது. இத்தகைய அமைப்பு முறை இங்குப் படங்களுடன் விளக்கிக் காண்பிக்கப்பட்டுள்ளது.

பன்னிருசோதிலிங்கத்தலங்களும்சிவத்திருமேனிகளும் (படம்-10)

| சோதிலிங்கத் தலங்கள்: | இலிங்கத்தின் பெயர்கள்; |
|---|---|
| 2.5.1. சௌராஷ்டிர சோமநாதம் | சோமநாதர் |
| 2.5.2 ஸ்ரீசைலம் (திருப்பருப்பதம்) | மல்லிகார்ச்சுனர் |
| 2.5.3 உஜ்ஜயினி (உஞ்சேனை மாகாளம்) | மாகாளேசுவரர் |
| 2.5.4 ஓங்காரம் | ஓங்காரேசுவரர் |
| 2.5.5 பரவிவைத்தியநாதம் | வைத்தியநாதர் |
| 2.5.6 பீமசங்கரம் | பீமசங்கார் |
| 2.5.7 இராமேச்சரம் | இராமநாதர் |
| 2.5.8 நாகேசம் | நாகேசுவரர் |
| 2,5.9 வாரணாசி (ஸ்ரீகாசி) | விசுவநாதர் |




'படம் 15 தலங்கள் சிலவற்றுள் சிவவடிவத் தோற்றம்
(ஆய்வுக்கு வரைந்தது)

2.5.10 திரியம்பகம் — திரியம்பகேசுவரர்

2.5.11 கேதாரம் — கேதாரேசுவரர்

2.5.12 குஸ்மேஸவரம் — குஸ்ருணேசுவரர்
இப்பன்னிரு தலங்களில்

1. சீசைலமாகிய திருப்பருப்பதம்
2. இராமேச்சரம்
3. கேதாரம் — இம்மூன்றும் தேவாரத்தலங்கள்

## 2. உஜ்ஜையினி (உஞ்சேனைமாகாளம்).

வாரணசி இரண்டும் தேவார வைப்புத் தலங்களாகும்.

## 2.6. தமிழ்நாட்டுத் தலங்கள் சிலவற்றில் சிவலிங்கத் தோற்றம் (படம்-15)

ஆகமச் சிற்பமுறையில் சிலலிங்கத் தோற்றம், அமைப்பு, இவைபற்றிக் கூறப் பெற்றிருப்பினும் இவ் இலக்கணத்திற்கு அப்பாலான முறையில் சில தலங்களில் அமைந்துள்ள. மூர்த்திகள் பற்றிப் படவிளக்கத்துடன் சில குறிப்புகள் அடியில் குறிக்கப்பெறுகின்றன.

### 26.1 திருநல்லூர்

அறுபான் மூன்று நாயன்மார்களில் ஒருவனாகவும் சோழ மன்னனாகவும் இருந்த கோச்செங்கட்சோழன் ''எண்டோள் ஈசற்கு எழில் மாடம் எழுபது'' அமைத்தவன். இவவாறு இவன் அமைத்த பெருங்கோயில்களில் 'மலைமல்கு' கோயில்எனச் சம்பந்தரால் போற்றப்பெறும் திருநல்லூரும் ஒன்றாகும் இங்குப் பெருமான் நீண்ட சதுர ஆவுடையாரில் தானே தோன்றிய கற்பகமாய் (சுயம்புவாய்) உள்ளார். இந்த அருட்குறி பாணம் கருங்கல் என்றோ உலோகம் என்றோ சொல்ல இயலாத கெட்டிப் பொருளால் ஆனது. துளைகள் கைவிரல்

நுழையும் அளவிற்குப் பல உள்ளன. தோற்றத்தில் செம்பு பித்தளை போல் தெரியும். இத்துடன் பகல் ஒன்றில் (தினமும்)

| | | |
|---|---|---|
| முதல் 1-6 | நாழிகையில் | தாமிர நிறம் |
| அடுத்த 6-12 | ” | இளஞ்சிவப்பு |
| ” 12-18 | ” | உருக்கிய தங்கம் |
| ” 18-24 | ” | நவரத்தினப் பச்சை |
| ” 24-30 | ” | இன்னநிறம் எனக் கூற இயலாத தோற்றம். |

என்ற ஐந்து வண்ணங்களில் மாறி மாறித் தோன்றும்.

இதனால் இம்மூர்த்திக்கு வழங்கும் திருப்பெயர்களில் பஞ்ச வர்ணேசர் என்ற பெயரும் உண்டு. அத்துடன் பிரிதோர் சிறப்பு யாதெனில் பொதுவாக எல்லாச் சிவலிங்கத் திருமேனிகளும் ஆவுடையாரில் ஒரே பாணந்தான் இருக்கும். ஆனால் இவ்வடி வில் வலப்பக்கம் 4 அங்குல உயரத்தில் வட்ட வடிவாய் பிரிதோர் பாணம் இருக்கிறது.

## 2. 6. 2. திருக்கீழ்வேளூர் கேடிலியப்பராகிய அட்ச யலிங்கம்

இங்குள்ள மாடக் கோயிலில் உள்ள மூலலிங்கம் பெரியது. பாணத்தின் தோற்றம் இரண்டு அடுக்காய் அடியில் பருத்தும் அடுத்த மேற்பகுதி சற்று சிறுத்தும் இருக்கும். அத்துடன் பாணத்தின் முன்பக்கம் (தத்புருஷகம்) சற்று, பள்ளமாகத் தோன்றும்.

## 2. 6. 3. திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம்

கும்பகோணம் நாகேச்சுரர் திருக்கோயிலில் உள்ள மூல லிங்க ஆவுடையார் சதுர வடிவில் மிகப் பெரியது. ஆனால் நடு வில் உள்ள பாணம் குக்குடாண்ட (கோழிமுட்டை) வடிவில் சிறியதாய் இருக்கிறது. (இது சயனக் கோலலிங்கம்)

## 2 6 4 திருவையாறு

ஐயாறப்பர், பஞ்சநதீசுவரர், செம்பொற்சோதி என்றெல்லாம் சிறப்புடன் அழைக்கப்பெறும் இத்தலமூர்த்தியின் பாணம் மண் (புற்று) வடிவம்.

## 2. 6. 5. திருக்கருகாவூர்

'கருகாவூரில் கற்பகத்தை காண்டற்கரிய பேரொளியை' எனத் தேவாரப் பாவில் போற்றப் பெறும் இத்தல மூர்த்தியும் மண (பிரிதிவி) வடிவே.

## 2.6.6. திருக்குடமுக்கு(கும்பகோணம் கும்பேசுவரர்)

ஆதி கும்பேசுவரர் எனச் சிறப்புடன் அழைக்கப்பெறும் இக்கும்பலிங்கம் மண் வடிவே.

## 2.6.7. திருநெடுங்களம் நித்தியம் சுந்தரேசுவரர்

இடர்களையும் திருஞானசம்பந்தர் திருப்பதிகத்தைப் பெற்ற இத்தலத்து மூலலிங்கம் மிகச் சிறியதாய், கருவறையில் ஒரு பக்கமாய் சுயம்பு வடிவில் உள்ளது.

## 2.6 8. அமர்நாத்பனிலிங்கம்

நம் பரதகண்டத்தில் வடக்கில் உள்ள இமயமால் வரையில் விளங்கும் அமர்நாதம் ஒரு சிறந்த சிவத்தலம். இது காசுமீரத்திற்கு அப்பால் உள்ளது. மக்கள் குடியிருப்பு இல்லாத இவ்விடத்தில் உள்ள ஒரு குகையில் சொட்டும் பனிநீர் இலிங்கவடிவமாய்த் தோன்றி மறையும். இப்பனி லிங்கக்காட்சி ஒவ்வொரு ஆவணி மாதம் நிறைமதி நாளில் (பவுர்ணமியில்) உருவாகிப் பின்கரைந்துவிடும். கடல்மட்டத்திற்கு 14000 அடி உயரத்தில் உள்ள இச்சிவலிங்கத்தைக் காண கடுமையான பனிக்கட்டி மலையிடை மக்கள் யாத்திரை யாகச் சென்று வரும் வழக்கம் ஒவ்வொரு ஆவணி மாதமும் நடை பெற்றுவருகிறது.

## 2. 6. 9 திருவானைக்கா அப்புலிங்கம்

உமையம்மை காவிரி நீரால் பிடித்து வைத்துப் பூசிக்கப் பெற்ற செழுநீர்த் திரளான இவ் அப்புலிங்கம் கோச்செங்கட் சோழனால் கட்டப் பெற்ற முதல் கோயிலில் தாழ்ந்த தரைமட்டத்திற்குக் கீழ் நீர் ஊற்றம் உள்ள இடத்தில் இருக்கிறது. காவிரி வெள்ளப் பெருக்கு, மழைக்காலம் இவற்றில் பெருமான் இருக்கும் இடம் நீர் ஊற்றெடுத்து அதிகப்பட, அதனை இறைத்துப் பூசனை நிகழும்.

## 2. 6. 10 திருக்காளத்தி காற்று (வாயு) லிங்கம்

இச்சிவலிங்கத்தின் பாணம் எங்கும் உள்ள தோற்றம்போல் இராது தீண்டற்கரிய வடிவில் உள்ளது.

## 2. 6. 11 திருச்சக்கரப்பள்ளி

இத்தல மூலலிங்க பாணம் நான்கு பட்டைவடிவில் வெல்லக் கட்டித் தோற்றத்தில் இருக்கிறது. 2. 6. 12

## 2. 6. 12 மேற்கு முகலிங்கத் தோற்றம்

இதன் நீர்வடிவுபாகம் (கோமுகம்) பார்வைக்கு அதன் வலப்பக்கமாக இருக்கும்.

## 2. 6. 13 ஹரப்பா மோகஞ்சதாரோ

சிந்து வெளி நாகரிகத்தைக் காட்டும் புதையுண்டு தோன்றிய நகரத்தில் காணப்படும் ஒரு சிவலிங்கம்.

## 2. 6 14 திருக்கயிலாயமலை

இதன் சிறப்பு காண்பதற்கரிது.

''கயிலை மால்வரை யாவது காசினி மருங்கு
பயிலும் மானுடப் பான்மையோர் அணுகுதற் கெளிதோ?
அயில்கொள் வேற்படை அணுகுதற்கரியதால்'' 19

## சிறப்பும் தோற்றமும்

"பொன்னின் வெண்திரு நீறு புனைந்தெனப்
பன்னும் நீர்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கும் அறிவரி யான் என்றும்
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை" 3

அண்ணல் வீற்றிருக் கப்பெற்ற தாதலின்
நண்ணும் மூன்றுல கும்நான் மறைகளும்
எண்ணில் மாதவஞ் செய்யவந் தெய்திப
புண்ணி யந்திரண் டுள்ளது போல்வது

நிலவும் எண்ணில் தலங்களும் நீடொளி
இலகு தண்தளிர் ஆக எழுந்ததோர்
உலகம் என்னும் ஒளிமணி வல்லிமேல்
மலரும் வெண்மலர் போல்வதம் மால்வரை 20

திருக்கயிலை மாமலை சைவ சமயத்தின் உயிர் நாடியானது. இதன் தோற்றம் திருக்கோயில்களில் திருநீற்று முழுக்கு(அபிடேகம்) செய்யப் பெற்ற சிவலிங்க வடிவை ஒத்தது

இதனை "பவளமால்வரையில் பனிபடந்ர் தனையதோர் படரொளி தரு திநீறும்' என சிவ வடிவத்தின் திருநீற்றுப் பூச்சை திருவிசைப்பா' உரைக்கிறது.

## 2. 6. 15 குடிமல்லம்

குடிமல்லத்தில் அமைந்துள்ள கி. மு. இரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டதான புகழ் வாய்ந்த இலிங்க மீதான சிவவடிவம் தன்னிகரற்ற முற்பட்ட சாலிவாகன கலைத் திறத்திற்கோர் எடுத்துக்காட்டாகும். தலைசிறந்த வடிவமான அச்சற்பம் இந்தியக் கலைத் தோற்றத்தில் முற்பட்டதான யக்சாஷை) பாணியிலானதாகும். வேதசாரமாகிய அக்கினி

ருத்திரன் ஆகிய கூறுகளின் இணைப்பு வடிவானதாகும். முற்பட்ட சைவ நெறியுடன் பீடத்தின் அடிப்படையிலான சிவலிங்கம் பற்றிய ஆய்வுக்கு இச்செய்தி மிகமுக்கியமாகும்.

## 2. 7. சிவாலயங்கள் பலவற்றுள் இலிங்கத் தொகுதிகள்

சிவாலயங்களில் ஒவ்வொன்றிலும் நடுநாயகமாய் வீற்றிருந்தருளும் சிவலிங்கத் திருமேனி அமர்ந்துள்ள கருவறையைச் சுற்றி, திருமாளிகைப் பத்தியில் சிவலிங்கங்கள் பலவாக உள்ளன. இவை ஒவ்வொன்றும் அத்தலத்திற்கு வந்த தேவர்கள், முனிவர்கள் திருத்தொண்டர்களால் நிறுவிப் பூசித்தவை எனக் குறிப்பும், தலவரலாறும் அங்கு விளங்கும்.

எண்ணிக்கையில் பலவாகச் சில கோயில்களிலும் எண்ணிக்கை குறைவாகச் சிலவற்றிலும் இருக்கும்.

இரண்டாவதாகக் கூறப்பட்ட வகையில் சில குறிப்புகள்

## 2. 7. 1. 108 சிவலிங்கங்கள்

108 என்னும் எண்ணிக்கை ஒரு புனிதத் தன்மைஉடையது தெய்வங்களின் 108 திருப்பெயர்களைச் சொல்லிப் போற்றும் (அருச்சிக்கும்) அட்டோத்திரம் எங்கும் நிகழக் காண்போம் இதுபோல் 108 சிவலிங்கத் திருப்பெயர்களாக வருவனவற்றைக் காண்போம் 108 லிங்கங்கள்

காணப்படும் இடங்கள்

**2. 7. 2** தஞ்சை மாவட்டம் பாபநாசக்கோட்டம் பாபநாசம் என்ற பேரூரின் மேற் பகுதியில் உள்ள வங்காரம் பேட்டை என்னும் இடத்தில் 108 இலிங்கங்கள் சிறப்பாக இடம்பெற்றுள்ளன. கல்வெட்டில் 'திருமால்புரம்' என வழங்கும் இத்திருக்கோயிலில் இராமபிரான் நிறுவிப் பூசித்ததாகக் கூறப்படும் 108 லிங்கங்கள் அமைந்துள்ள முறை.

மேற்குமுக சந்நிதியுடன் ஒரே திருச்சுற்றுள்ள இத்திருக் கோயிலில் மூலலிங்கம் இராமலிங்கம் எனப்படும் இதன் வடப் பக்கம் கிழக்கு மேற்காக 3 வரிசைகளில்

| | |
|---|---|
| வடப்பக்க வரிசையில் | 35 |
| நடுவரிசையில் | 36 |
| தென்வரிசையில் | 35 |
| மூலலிங்கம் ( இராமலிங்கம் ) | 1 |
| கோயிலின் தென்பால் தனிக் கோயிலில் உள்ள அனுமன் லிங்கம் | 1 |
| ஆக . . ... . . 108 இலிங்கங்கள். | |

தனிச் சிறப்புடன் அமைந்துள்ளன.

இங்குள்ள முதல் 35 36 35 106. இலிங்கங்களுக்குத் தனியாகப் பெயர் இங்குக் குறிப்பிட்டிருக்கவில்லை. தென்னாட்டில் 108 இலிங்கச்சிறப்புக் கோயிலாக இங்கு இது விளங்குகிறது. இங்குள்ள 108 சிவலிங்கங்கள் எந்தப் பெயரிட்டும் அழைக்கப் பெறவில்லை. ஆனால் மூலலிங்கம் இராமலிங்கம் தென்பால் அநுமன் கொண்டுவந்த இலிங்கம் என்று பேசப் படுகிறது.

108 சிவலிங்கப் பெயர்கள் [29]

1. அபாரகருணாபரலிங்கம்
2. அமராரீவிமர்த்தனலிங்கம்
3. ஆசிரிதாபிட்டவரதலிங்கம்
4. ஆனந்தமயவிக்ரகலிங்கம்
5. இநகோடிசமான சிதரலிங்கம்
6. இந்திரமார்சிதலிங்கம்
7. ஈடநீயகுணௌகலிங்கம்

8. ஈதிபாதாவிநாசலிங்கம்
9. உருப்பிரபாவலிங்கம்
10. உமாமானசகரலிங்கம்
11. ஊர்த்வரேதசலிங்கம்
12. ஊர்த்வலோகைகநாயலிங்கம்
13. ருசுமார்க்கப்ருதசிதலிங்கம்
14. ருனத்ருயவிமோசனலிங்கம்
15. ஏணாங்கதரசஸ்பிருதலிங்கம்
16. ஏனகூடவிநாசலிங்கம்
17. ஐந்ரபோகபலப்ருதலிங்கம்
18. ஐந்ரகண்யாமநோபூசிதலிங்கம்
19. கருணாரசபாதோதலிங்கம்
20. காமிதார்த்தப்ருதாயகலிங்கம்
21. கேசரேசகணச்சுதலிங்கம்
22. கலநிக்ருசதத்பரலிங்கம்
23. கதசட்விக்ருதிவ்ருதலிங்கம்
24. கிதவாத்யாதிசுப்ரியலிங்கம்
25. கநகம்பீரலிகாசலிங்கம்
26. கடிதைச்வரியசர்ததலிங்கம்
27. கித்ருசேலாம்சிதகடலிங்கம்
28. சித்ராலங்ருதசம்யுதலிங்கம்
29. சேதிதாகிலபாபளகலிங்கம்
30. பந்மாநசதுர்லபலிங்கம்

31. சம்பாரிவந்தனலிங்கம்

32. சனசாட்யாபகாரகலிங்கம்

33. தாபத்ரய விநாசகலிங்கம்

34. தாம்ரசூடசுகதேலிங்கம்

35. சதிராமரேசசயலிங்கம்

36. சதிரப்ருக்ஞானபந்துனலிங்கம்

37. திதிசாததமச்சூரியலிங்கம்

38. தினசம்ரட்சணலிங்கம்

39. திக்தாகில வைசாசலிங்கம்

40. திருதக்காளாம் சபர்வலிங்கம்

41. நவநீதசமாநலிங்கம்

42. நவீதப்ரதலிங்கம்

43. பரமானந்தரூபலிங்கம்

44. பரமந்த்ரருவிபேதகலிங்கம்

45. பணீச்வரக்ருதாலம்பலிங்கம்

46. பணீலோகார்த்திநாசகலிங்கம்

47. பகுபாகுபாலதலிங்கம்

48. பக்வைசர்யசமுத்திதலிங்கம்

49. போசிபோபமலிங்கம்

50. போசிலோகவம்கரலிங்கம்

51, மகாசேனாஇதித்யாதலிங்கம்

52. மகாசாரச்வதப்ரதலிங்கம்

53. யோகநந்தைகநிலயலிங்கம்

54. யோகிசித்தநிகேதலிங்கம்

55 இராசீவலோசனலிங்கம்

56 இராகவபூசிதலிங்கம்

57 வம்சவிருத்திகரலிங்கம்

58 வம்சதந்துபாலநதத்பரலிங்கம்

59 சர்வரீசகலாதீதலிங்கம்

60 சரணாகதபாலகலிங்கம்

61 கடத்வாதீதப்ரகாசலிங்க

62 சண்டத்வபரிகாரகலிங்கம்

63 சர்வாகமப்ரநேத்ரலிங்கம்

64 சர்வாசசயவசுந்தரலிங்கம்

65 கல்யவர்சிதசாதிர்ரலிங்கம்

66 கச்திசர்மாம்புரவெசலிங்கம்

67 சேமலிங்கம்

68 சாந்திலிங்கம்

69 சார்யாகாரணநிர்முக்தலிங்கம்

70 காரணாதீதவிக்ரகலிங்கம்

71 பிராணிச்வினிலிங்கம்

72 பிராணயாமபராயணலிங்கம்

73 பிரணதாரர்த்திகரலிங்கம்

74 பிரணமார்க்கயோகநிரதலிங்கம்

75 மகாபாதகசம்மர்த்தினலிங்கம்

76 மகாரோகவிநாசகலிங்கம்

77 சர்வரீநாதசுமுகலிங்கம்

78 சர்மதானபராயணலிங்கம்

79 குரூரகர்மநிவர்த்தகலிங்கம்

80 கந்தர்பப்பசிதலிங்கம்

81 லீலாகல்பிதப்ரமாண்டலிங்கம்

82 லீலாநிர்மிததாரகலிங்கம்

83 லோலாமுக்தாபலோதரலிங்கம்

84 லோகலோசநரஞ்சகலிங்கம்

85 சதாசிவோபதேட்சரலிங்கம்

86 சதாசிவகலாமயலிங்கம்

87 அட்டாங்கயோகலிங்கம்

88 சம்கோணசக்ரநிலையலிங்கம்

89 சாட்குண்யபரிபூரிதலிங்கம்

90 வந்திதாகிலதைத்யலிங்கம்

91 வந்தாருசவைத்சலலிங்கம்

92 சந்த்யாதாண்டவசந்துட்டலிங்கம்

93 சர்வாபத்விநிவாரகலிங்கம்

94 நட்சத்ரமாலாபரணலிங்கம்

95 நமச்காரபலப்ரதலிங்கம்

96 பசுபாசவிமோசகலிங்கம்

97 கர்பூரசர்ச்தலிங்கம்

98 அவ்யாசகருணாமூர்த்தலிங்கம்

99 சர்வரோகவிநாசநலிங்கம்

100 சர்வதேசுவரூபலிங்கம்

101 நித்யவ்வனசோபிதலிங்கம்

102 மார்க்கண்டேயபலப்ரதலிங்கம்

103 காலாகலவிடாசனலிங்கம்

104 அப்ராக்ருதபுரச்திதலிங்கம்

105 சவ்யமார்க்கநியோசநலிங்கம்

106 சந்திதார்த்தப்ரதாயகலிங்கம்

107 சமயாச்சாரதத்பரலிங்கம்

108 சம்சம்ப்ருதாயநிரேதலிங்கம்

இவையேயன்றி, தமிழகத்துப் பல பெரிய கோயில்களில் குறிப்பாக இராமேச்சரம், ஆரூர், ஆனைக்கா, அண்ணாமலை தஞ்சை மற்றும் பல ஊர்களில் லிங்கங்கள் குறிப்பிட்ட ஓர் அளவில் இல்லாது கூடவும் குறைவாயும் உள்ளன.

2.7.3 திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) என்னும் நடுநாட்டுத் தேவாரத் தலத்தில் விளங்கும் பல இலிங்கங்களுடன் தனியாக 28 ஆகமங்கள் பெயரால்

1. காமிகாமகலிங்கம்
2. யோகசாகமலிங்கம்
3. சிந்த்யாகமலிங்கம்
4. காரணாகமலிங்கம்
5. அசிதாகமலிங்கம்
6. தீப்தாகலிங்கம்
7. சூட்சமஆகமலிங்கம்
8. சகச்ராகமலிங்கம்
9. அம்சுமான்ஆகமலிங்கம்
10. சுப்ரபேதாகமலிங்கம்
15. வீராகமலிங்கம்
16. ரெளராகமலிங்கம்
17. மகுடாகமலிங்கம்
18. விமலாகமலிங்கம்
19. சந்திராகமலிங்கம்
20. பிம்பாகமலிங்கம்
21. புரோத்கீதாகமலிங்கம்
22 லளிதாகமலிங்கம்
23. சித்தாகமலிங்கம்
24 சந்தானாகமலிங்கம்

11. விசயஆகமலிங்கம்
12. நிச்வாசாகமலிங்கம்
13 சுவாயம்புவாகமலிங்கம்
அனலாகமலிங்கம்
25. சர்வோத்தாகமலிங்கம்
26. பாரமசுவராகமலிங்கம்
27. கிரணாகமலிங்கம்
28. வாதுளாகமலிங்கம்

என 28 லிங்கங்களின் அமைப்பு உள்ளது.

14. 2/ சென்னை மாநகரத்தை ஒட்டியுள்ள திருஒற்றியூரில் விளங்கும் சுற்றுலிங்கங்களில் 27 விண்மீன் (நட்சத்திரங்) களின் பெயரால்

1 அசுவதிலிங்கம்
2 பரணிலிங்கம்
3 காத்திகைலிங்கம்
4 உரோகணிலிங்கம்
5 மிருகசீரிடலிங்கம்
6 திருவாதிரைலிங்கம்
7 புனர்பூசலிங்கம்
8 பூசலிங்கம்
9 ஆயில்யலிங்கம்
10 மகலிங்கம்
11 பூரலிங்கம்
12 உத்தரலிங்கம்
13 அஸ்தலிங்கம்
15 சுவாதிலிங்கம்
16 விசாகலிங்கம்
17 அனுடலிங்கம்
18 கேட்டைலிங்கம்
19 மூலலிங்கம்
20 பூராடலிங்கம்
21 உத்திராடலிங்கம்
22 திருவோணலிங்கம்
23 அவிட்டலிங்கம்
24 சதயலிங்கம்
25 பூரட்டாதிலிங்கம்
26 உத்திரட்டாதிலிங்கம்
27 இரேவதிலிங்கம்

14 சித்திரைலிங்கம் என 27 இலிங்கங்களின் அமைப்பு உள்ளது

9. 7. தஞ்சைப் பெருவுடையார் கோயில்

(இராசராசேச்சரத்தில்) சிவ வடிவங்கள்

## சிவலிங்க வரிசை

இக்கோயிலின் பெரிய சருவறை விமானம் பெருவுடையார் அமைப்பே சதாசிவ வடிவமாகும்.

இக்கோயிலின் திருச்சுற்று நான்கு பக்கத் திருமாளிகைப் பத்தியில் சிவலிங்க வரிசை விவரம்

தென்கிழக்கு தெற்குப் பக்கங்களில் வழிபாட்டில் சிவவடிவங்கள் எதுவும் இல்லை.

அடுத்த மேற்குப்பக்கத்தில்

| (1) இடம் | (2) பாணலிங்கங்கள் | (3) வட்ட லிங்கங்கள் | (4) சதுரலிங்கங்கள் |
|---|---|---|---|
| தென்மேற்கு மூலையில் 3×3=9 பாணலிங்கங்கள் | 9 | | |
| இதனை அடுத்த 27×4=108 பாணலிங்கங்கள் 108 | | | 1 |
| இதற்கு அடுத்த முதல் அறையில் | | | |
| ,, அடுத்த வரிசையில் | | 3 | |
| ,, ,, அறையில் | | 1 | |
| ,, ,, வரிசையில் | | 4 | |
| ,, ,, அறையில் வருணன் | | | |
| ,, ,, வரிசையில் | | | |
| ,, அம்பிகை நடுவிருக்க | | 2 | |
| ,, ,, அறையில் | | 1 | |
| ,, ,, வரிசையில் | | 4 | |
| ,, ,, அறையில் | | 1 | |

| (1) | (2) | (3) | (4) |
|---|---|---|---|
| ,, ,, | வரிசையில் | 4 | 1 |
| ,, ,, | அறையில் | 1 | 1 |
| ,, ,, | வரிசையில் | 5 | : |
| வடமேற்கு மூலையில் வாயு | | | |
| | ஆகக்கூடுதல் 117 | 26 | |
| வடப்பக்கம் | | | |
| முதல்வரிசையில் | | 14 | |
| இதற்கு அடுத்த | வரிசையில் | 1 | |
| " ,, | வரிசையில் | 9 | |
| ,, ,, | அறையில் | 1 | |
| ,, ,, | வரிசையில் | 9 | |
| ,, ,, | அறையில் | 1 | |
| ,, ,, | வரிசையில் | 8 | 1 |
| ,, ,, | அறையில் | | |
| ,, ,, | வரிசையில் | 3 | |
| ,, ,, | அறையில் | 1 | |
| , ,, | வரிசையில் | 2 | 1 |
| ,, ,, | அறையில் | | |
| ,, ,, | வரிசையில் | 4 | 1 |
| இதற்கு அடுத்த | அறையில் | 1 | 1 |
| ,, ,, | வரிசையில் | 4 | |
| ,, ,, | அறையில் | 1 | |
| ,, ,, | வரிசையில் | 8 | 1 |
| ,, ,, | அறையில் | 1 | |
| ,, ,, | வரிசையில் | 13 | |

| | (1) | (2) | (3) | (4) |
|---|---|---|---|---|
| வடகிழக்குமூலையில ஈசானன் | | | | |
| ஆகக்கூடுதல் | | | 81 | 5 |
| வடகீழ்ப்பக்கம் | | | | |
| முதல்வரிசையில் | | | 2 | |
| இரண்டாவது வரிசையில் | | 7 | | |
| ஆகக்கூடுதல் | | 7 | 2 | |
| மேற்கில் | பாணம் 117 | வட்டலிங்கம் 26 | சதுரம் 2 | |
| வடக்கில் | ,, | 81 | 5 | |
| வடகிழக்கில் | 7 | 2 | | |
| ஆகக்கூடுதல் | 124 | 109 | 7 | |

பெருவுடையார் கோயில் திருச்சுற்றில்

| | |
|---|---|
| பாணலிங்கங்கள் | 124 |
| வட்டலிங்கங்கள் | 109 |
| சதுர லிங்கங்கள் | 7 |

2. 7. 6. சோணாட்டு காவிரி வடகரைத்தலமான திருவையாறு அதனைச் சார்ந்த வேறு ஆறு தேவாரத் தலங்களுடன் ஏழூர் ஏழூர்விழா (சப்தஸ்தானவிழா)என்ற சிறப்புடன் விளங்குகிறது. இந்த ஏழு ஊர்களில் விளங்கும் சிவலிங்கங்கள் ஒரே ஊராகிய திருவையாற்றுத் திருக்கோயிலில் உள்ளன அவையாவன:

1. திருவையாறு செம்போற்சோதியார்
2. திருப்பழனம் உற்றிடத்துதவுவார் (ஆபத்சகாயர்)
3. திருச்சோற்றுத்துறை ஓதவனேசுவரர்
4. திருவேதிகுடி வேதபுரீசுவரர்
5. திருக்கண்டியூர் வீரட்டேசுவரர்
6. திருப்பூந்துருத்தி புட்பவனநாதர்
7. திருநெய்த்தானம் நெய்யாடியப்பர்

## 2.7.7. ஏழு (சப்த விடங்கலிங்கங்கத்தலங்கள்

1. திருவாரூர்

2. திருநள்ளாறு

3. திருநாகைக்காரோணம்

4. திருக்காறாயிலி

5. திருக்கோளிலி

6. திருவாய்மூர்

7. திருமறைக்காடு இவ்வேழு தலங்களின் இலிங்கத் திருமேனிகள் திருநள்ளாறில் ஒரே இடத்தில் இருக்கக் காணலாம்

## 2. 7. 8. ஐம்பெரும்பூத (பஞ்சபூதத்) தலங்கள்

1. திருவாரூர்

2. திருவானைக்கா

3. திருவண்ணாமலை

4. திருக்காளத்தி

5. தில்லை

இந்த ஐந்து திருத்தலங்களில் விளங்கும் ஐந்து இலிங்கப் பெயர்களுடன் ஐந்து இலிங்கங்கள் தனித்தனித் திசையில் சோணாட்டுக் காவிரித் தென்கரைத்தலமான

## 2. 7. 9. திருமீயச்சூரில்

(தஞ்சை மாவட்டம் பேரளம் என்ற பேரூருக்கு மேற்கில்) உள்ள சிவாலயத்தில் இருக்கிறது.

இவைபோல் தென்னாட்டுச் சிவாலயங்கள் பலவற்றுள் பல்வேறு எண்ணிக்கை வரிசையில் இருக்கக் காணலாம்.

## திருவலஞ்சியில்

வடதிருமாளிகைப் பத்தியில் பல இலிங்கங்கள் உள்ளன.

## 2. 7. 10. திருப்புனவாயில்

இது பாண்டி நாட்டுத் தேவாரம் பெற்ற 14 தலங்களுள் ஒன்று. இங்குள்ள மூலலிங்கம் தஞ்சைப் பெருவுடையாரின் அளவை ஒத்த பெரிய வடிவம்.

இங்கு ஒரு பால் பாண்டி 14 தேவாரத்தல இலிங்கங்கள் இருப்பது குறிப்பிடத்தக்கது.

1. திருஆலவாய்
2. திருஆப்பனூர்
3. திருப்பரங்குன்றம்
4. திருஏடகம்
5. திருக்கொடுங்குன்றம்
6. திருப்புத்தூர்
7. திருபுனவாயில்
8. திருஆடானை
9. திருக்கானப்பேர்
10. திருஇராமேச்சரம்
11. திருப்பூவனம்
12. திருச்சுழியல்
13. திருக்குற்றாலம்
14. திருநெல்வேலி

## 2.7.11. சதாசிவலிங்கம்

திருப்புகலூரில் - சதாசிவ லிங்கங்கள்

இத்தலத்தில் பஞ்சபிரமம்- ஈசானம், தத்புருடம்-அகோரம்-வாமதேவம்-சத்யோ சாதம் ஐந்து முகத்திற்குச் சிவலிங்க வடிவங்கள் தனித்தனி சிறுகோயில்களில் உள்ளன.

திருக்கோயிலில் முதன்மையான மூலலிங்கம் (அக்கினீசுவரர்) நடுவில் ஈசானலிங்கம், கருவறைக்கு வெளியில் முன்மண்டப வடகீழ்ப்பக்கம் தத்புருடலிங்கம். தென் முகக்கடவுளுக்கு முன்னால் உள்ள சிறுகோயிலில் அகோரலிங்கம், தென்மேற்கில் நாவுக்கரையரின் அருகில் தென்பால் சத்யோசாதலிங்கம், வடப்பக்கம் சண்டேசுரருக்கு வடபால் தலமரத்தின் அருகில் வாமதேவலிங்கம்

திருவையாறு-திருமீயச்சூரில் மற்றும் பல தலங்களின் மண், நீர், அனல், வளி வெளி ஆகியவடிவில் உள்ளபஞ்சபூதலிங்கங்கள் வைக்கப்பட்டுள்ளன. மற்றும் இவ்வகையில் தென்னாட்டுக் கோயில்களில் ஆங்காங்கு இருக்கக் காணலாம்.

## அடிக்குறிப்புகள்

1 பெரியபுராணம்-சாக்கியநாயனார்புராணம் பாட்டு எண்-8

2 திருமந்திரம் அடிமுடிதேடல், பாட்டு எண் 1

3 சம்பந்தர் தேவாரம் திருமுறை 1, பதிகம் 86 பாடல் 9

4 ,, ,, ,, ,, ,, 10 ,, 9

5 அபிதான சிந்தாமணி, பக்கம் 214

6 பேரகராதி, பக்கம்

7 நாதம் என்னும் கோயிலிலே, சபாரத்தினம், பக்கம் 53

8 திருப்புறம்பயத் தலவரலாறு, பக்கம் 5

9 Hindu Gods Shiva By Swami Sivananda Page 4-12

10 நாதம் எனும் கோயிலிலே, சபாரத்தினம், பக்கம் 55

11 சிர்ஷேணாத்தார சாதகம், பக்கம் 5

12 ஸ்ரீதத்துவநிதி

13 14, 15, திருமந்திரம் பாட்டு எண் 8, 9, 10.

16 அப்பர் தேவாரம், திருமுறை 6, பதிகம் 8, பாடல் 5

17 திருவாவடுதுறை, சிவஸ்ரீ க. சாமிநாத சிவாச்சாரியர் அவர்கள் நேரில் கூறியது. மற்றும் காஞ்சி காமகோடி வியாச வித்வத்சதஸ் 1964. மலர், பக்கம் 55

18 திருநல்லூர்த் தலவரலாறு மா. சிவகுருநாதப்பிள்ளை பக்கம் 5

19 பெரிய புராணம், திருநாவுக்கரசர் புராணம், பாட்டு எண் 365.

20 ,, , திருமலைச் சிறப்பு, பாட்டு 1, 2, 3

21 ஆலங்குடி (திருஇரும்பூளை) சிவத்திரு வி. நடராச குருக்கள் அவர்கள் தம்மிடமிருந்த பழைய குறிப்புகளில் இருந்து எடுத்துக் கொடுக்க எழுதியது.

## 3. உருவம்

'வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்' எங்கும் நீக்கமற நிறைந்து நிற்கும் காண்பரியப் பேரொளிப்பிழம்பான சிவபிரானுக்கு, நின்ற, இருந்த, கிடந்த கோலமுகளாலான பல்வகை உருவங்களை, சிற்பநூல். ஆகமநூல், சைவசித்தாந்தத் தத்துவநூல் ஆகியவற்றின் அடிப்படையில் படைத்து அமைத்து தாம் வழிபட்டு உய்ந்த தோடன்றி நாமும் நாளும் வழிபட்டு உய்வடைய நல்வழிக் காட்டிச் சென்றனர் நம் முன்னோர். அவ்வகையில் இப்பகுப்பின்கண் உருவவடிவிலான சிவவடிவங்கள் பற்றிய பல்வேறு செய்திகளைக் காண்போமாக:

### 3. 1. உருவச் சிற்பவகை மூன்று

1. சித்ரம்: எல்லா உறுப்புகளும் முன்னும் பின்னும் தெரிய இருப்பது. கோயில்களில் உள்ள மூல, விழாத் திரு

உருவங்கள் (கோபுர விமான சிற்பங்களில் சில)

2. சித்ரார்த்தம்: முன்பாதி மட்டும் தெரிவது. கோயில் கருங்கல் சுவரில் கற்பாறையில் செதுக்கப்பட்டுள்ளவை. மற்றும் சுவர்களில் முற்பகுதிமட்டும் தெரியுமாறு உருவாக்கப்பட்டுள்ள சுதைவடிவங்கள்.

3. சித்ராபாசம்: மேடுபள்ளமின்றி சுவர், பலகை, துணி இவற்றுள் வரையப்படும். ஓவியங்கள். சித்ரம் + ஆபாசம் = சித்ராபாசம், ஆபாசம் எனின் வெளித்தோற்றம்.

இம்மூவகை வடிவங்களைப் பூசிக்கக் கிடைக்கும் பயன்:

1. சித்ரம் - உயர்ந்த பலன்
2. சித்ரார்த்தம் - நடுத்தர பலன்
3. சித்ராபாசம் - குறைந்த பலன்

## 3.1.1 வடிவங்கள் உருவாக்கப்பயன்படும் பொருள்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | கருங்கல் | 2. | உலோகம் | 3. | செங்கல் |
| 4. | மரம் | 5. | களிமண் | 6. | சுதை |
| 7. | தந்தம் | 8. | சுக்கான் | 9. | வண்ணம் 10. மெழுகு |

''கல்லும் உலோகமும் செங்கல்லும் மரமும்
மண்ணும் சுதையும் தந்தமும் வண்ணமும்
கண்டசருக்கரையும் மெழுகும் என்றிவை
பத்தே சிற்பத்தொழிற்கு உறுப்பாகும்

(பிங்கல நிகண்டு 3—129

இவற்றுள் மெழுகு, தந்தம் இவ்விரண்டும் வழிபாட்டிற்குரிய தெய்வப் படிமங்களுக்குப் பயன்படுவதில்லை. உலோகம் என்பது வெண்கலம், பித்தளை, கார்ஈயம், பொன், வெள்ளி இவற்றின் கூட்டாகும். (பஞ்சலோகம் என்பர்)

## 3. 1. 2. முக்குண வடிவங்கள்

1. போக வடிவம் 2. யோக வடிவம் 3. கோப வடிவம்

1. போகவடிவம்: நின்ற, இருந்தநிலை, ஊர்தியில் அமர்ந்த நிலை, பல்வகை அணிகலன்கள், அச்சம் அகற்றும் கை அபயம் அளிக்கும் கை ஆகியன கொண்ட சோமாகஸ்ந்தர், ஏறமர்கடவுள், பிறைசூடியபெம்மான், உமாமகேசுவரர் மாலொருபாகன் ஆகிய சிவவடிவங்கள்.

2. யோகவடிவம்: யோகமுத்திரை, இயல்பான சாந்த நிலை, அச்சம் அகற்றி அருள்புரியும் தன்மை. இத்தகைய இலக்கணக் குறிப்புகளுடன் உடைய சிவ வடிவங்கள் ஆலமர் செல்வன் (தெட்சணாமூர்த்தி).

3. கோபவடிவம்: பகைவரை அழிக்கும் பல்வகைப் படைக் கலன்களை உடைய நான்கு முதல் பலகைகள். அச்சுறுத்தும் தோற்றம். கோரைப் பற்கள் ஆகியவற்றை உடைய போர் கோல (சம்மாரக்கோல வடிவங்கள்) முப்புரமெரித்தோன். யானை அசுரனை உரித்தோன். காலகாலன், வீரபத்திரன் முதலிய போர்கோல வடிவங்கள்.

இம்மூவகை வடிவச் சிறப்பினைச் சிவஞான சித்தியார்.

> "போகியா யிருந்துயிர்க்கு போகத்தை புரிதல் ஓரார்
> யோகியா யோகமூர்த்தி உதவுதல் அதுவும் ஓரார்
> வேகியானாற்போல் செய்தவினையினை விட்டல் ஓரார்
> ஊகிடார்மூடரெல்லாம் உம்பரின் ஒருவன் என்பர்"

இதற்குக் கூறப்படும் அறுவர் உரையாவது: உமாமகேச மூர்த்தியாயிருந்து உலகத்தில் உயிர்களுக்கெல்லாம் பெண்-ஆண் இல்லற இன்ப மோகத்தை உண்டாக்கும் நிமித்தமென்றும்.

கடுக்கைவனத்தில் யோகாசன இருக்கையிலிருந்து யோகி களுக்கெல்லாம் யோகசித்தியை உண்டாக்கி வீடுபேறு அளிக்கும் நிமித்தம் என்றும்.

கோபத்தை உடையவர்களைப் போல் உயிர்கள் செய்யும் தீவினையைத் தண்டித்து மேலும் வினைகள் வளராமல் ஒழிக்கிறது என்றும்,

இதனை ஆராயாத அறிவிலிகள் இந்த வரலாறுகளைக் கொண்டே தேவர்களில் ஒருவன் சிவன் என்றே சொல்லுவார்கள்.

மேற்சொன்ன போக, யோக, கோப வடிவங்கள் இராச, சாத்வீக, தாமச வடிவமென்றும் கூறப்படும்.

### 3.1.3 வடிவங்கள் காணப்படும் தோற்றங்கள் (கோலங்கள்)

#### நின்றதோற்றம்:

சிவவடிவங்களில் சந்திரசேகர், மணவழகர் (கலியாணசுந்தரர்) பிச்சமூர்த்தி, சலந்தராரி, திரிபுராரி, வீரபத்திரர் வேட்டுருவச் சிவன், சங்கர நாராயணர் முதலிய சிவவடிவங்கள்.

#### அமர்ந்த கோலம்:

சோமாஸ்கந்தர், சுகாஸனர், ஆலமர் செல்வர், காமாரி சண்டேச அனுக்கிரகர் சக்கரதானர் முதலிய சிவவடிவங்கள்.

#### கிடந்த சயனக் கோலம்:

சிவவடிவங்களில் இவ்விதநிலையில் அதிகம் இல்லை. திருமாலின் வடிவில் திருவரங்கம், திருவனந்தபுரம் மற்றும் வைணவப் பகுதிகளில் இக்கிடந்தநிலை உள்ளது.

சிவவடிவில் கிடந்த கோலநிலை குறிப்பாக ஒரு இடத்தில் உள்ளது. சென்னை மாநகரத்திலிருந்து திருப்பதி செல்லும் வழியில் 60 கி. மீட்டர் தொலைவில் தமிழகத்து எல்லையில், ஊத்துக்கோட்டை என்ற ஊருக்கு இரண்டு கி. மீட்டர் தூரத்தில் ஆந்திர மாநிலச் சோதனைச் சாவடியை அடுத்துள்ள (சுருட்டப்பள்ளி என்ற சிற்றூரில் விளங்கும் சிவாலயத்தில்,

இருக்கும் நஞ்சுண்ட கடவுள் (விடாபகரணர்) வடிவம் சயனக் கோலத்தில் இருக்கிறது.

இந்த நின்ற, இருந்த, கிடந்த நிலையில் சிவலிங்க வடிவங்களைச் சிற்பிகள் அமைத்துள்ள பாங்கினை முன்னர்கண்டோம்.

## நிற்கும் தோற்ற வகைகள்

மூறைவடிவங்கள் நிற்கும் நிலையில் நிமிர்ந்தும், சற்று சாய்ந்தும் முழுதும் சாய்ந்தது வளைந்தும் காணப்படும்.

## 3 1.4. சிவ வடிவ உறுப்புகள் (அங்கங்கள்)

இவ் அங்கங்கள் நால்வகைப்படும்.

1. இங்கம் 2. பிரத்தியங்கம் 3. சாங்கம் 4. உபாங்கம்

1. அங்கமென்பது: தலை, முகம், இதயம்

2. பிரத்யங்கமென்பது: மார்பு, கழுத்து, தோள், கொப்பூழ் மறைவிடம், வயிறு, கண், மூக்கு, செவி, கை, கால், விரல், தொடை, முழந்தாள், கணைக்கால் ஆகிய பதினாறும் ஆகும்.

3. சாங்கம் என்பது திருமேனியில் ஒட்டியும், பிரிந்தும் இருக்கும் படைக்கலங்கள், மற்றும் உள்ள பொருள்கள்.

4. உபாங்கம் என்பது என்றும் நீங்காது ஒட்டியிருக்கும் புரிநூல், மாலை முதலிய அணிகள்.

இவற்றின் விரிவை ஸ்வாதுள ஆகமத்தில் "அங்க ப்ரத்யங்க சாகஞ்ச, உபாங்கஞ்ச என்று தொடங்கும் அடிகளில் காண்க[2]

மற்றும் சிவஞானசித்தியார் சுபக்கம் அறுவரை உரை 47 வது பாட்டில் கூறப்படும் கருத்தாவது!-

"உருவருள் குணங்க ளோடும்
உணர்வரு உருவில் தோன்றும்
கருமமும் அருள ரன்றன்

கரசர ணாதி சாங்கம்
தருமருள் உபாங்க மெல்லாம்
தானருள் தனக்கொன் றின்றி
அருளுரு வுயிருக் கென்றே
ஆக்கினன் அசித்தன் அன்றே'' 3

(முதல் சூத்திரம் - பாடல் 47)

இப்பாவிற்குக் கூறப்படும் அறுவர் உரையாவது.

மாயோபாதியும் இல்லாமல் தனக்கு ஒரு பிரயோசனமும் இல்லாமல் ஆன்மாக்களின் போகமோட்சார்த்தமாகப் பண்ணும் தியான பூசையின் பொருட்டுக் கிருபையினால் உண்டாகிய பாவனாரூபசை தன்ய விக்கிரகத்தை உடையவனாகையினால் சிந்திக்கப்படாதவன் என்றவாறு.

1. அங்கமாவன — சிரம், முகம், இதயம்

2. பிரத்யங்கம் — வட்சசும். கண்டமும், ஸ்தனங்களும், தோள்களும், நாபியும், உதரமும், குஹ்யமும் நேத்திரமும், நாசியும், சுரோத்திரங்களும், அஸ்தங்களும், பாதங்களும் அங்குலிகளும், ஊருக்களும், முழந்தாள்களும் கணைக்கால்களும் ஆகும்.

3. சாங்கமாவன — குணமூர்த்திகளான பத்தும்

அவையாவன.

1. ஆரிண்யாதிகுணத்திரயம் — திரிசூலம்
2. சத்தியம் — பரசு
3. பிரதாபம் — கட்கம்.
4. துரகபேத்தியம் — வச்சிரம்
5. அனுக்கிரகம் — அபயமுத்திரை

6. ருத்யாதிசுத்தமாயை — நாகம்
7. அதோமாயை — பாசம்
8. விவர்ணம் — அங்குசம்
9. சத்தநாதம் — கண்டை
10. பாசசங்காரம் — தீ

4 உபாங்கமாவன — ஆடை. உபவீதம், மாலை, கந்தம் ஆபரணம், ஆசனம், ஆவரணம்.

இவ்வாறு கிருபையினாற் கொண்ட சதாசிவரிடத்தில் உண்டான மகேசுவரனுடைய திருமேனியின்,

1. இதயத்தினின்று சகத்ராம்சமாக உருத்திரதேவர் தோன்றுவர்.
2 கோடியம் சமாகவாமதெட்சிணையூர் சுவர்களில் திருமாலும் நான்முகனும் தோன்றுவர்
3. நேத்திரங்களில் சூரிய சோம அக்கினி தேவர் தோன்றுவர்.
4. பிராணனில் வாயு பகவான் தோன்றுவர்.
5. சுரோத்தியங்களில் மந்திராதி சர்வாட்சகமான லோகம் தோன்றும்.
6. முகத்தில் வேதாதி சர்வசாத்திர ரூபமான அபரஞானம் தோன்றும்.

கண்டத்தில் கணேசர் தோன்றுவர்.
இதயத்தில் முருகன் தோன்றுவர்.
நாபியில் இந்திர, யம, வருண, குபேரர் தோன்றுவர்.
பிரத்யங்கத்தில் பஞ்சாசக்கோடி தேவர்கள்தோன்றுவர்
ரோமகூபங்களில் கோடி இருடிகள் தோன்றுவர்.

மந்திர வடிவில் உறுப்புகள் (அங்கங்கள்)

மந்திரங்கள்

**பஞ்சப் பிரமம்**

1. ஈசானம்
2. தத்புருடம்
3. அகோரம்
4. வாமதேவம்
5. சத்யோசாதம்

**சடாங்கம்**

1. இருதயம்
2. சிரசு
3. சிகை
4. நேத்திரம்
5. கவசம்
6. அத்திரம்

எனும் ஆறு.

இந்த 5, 6 பதினொன்றில் சிவபூசையில் சிவவடிவில் பாவனையாக உருவாக்கப் படுபவை ஆகும்.

## 3.1.4.1. சிவ வடிவங்களில் திருமுகங்கள்

1. ஒரு முக வடிவங்கள் : மகேசுவர வடிவங்கள் இருபத்தைந்தும். பிற வடிவங்கள்.

2. இரண்டு முகவடிவங்கள் : சர்வசலிங்க ஐந்து வகையில் ஒன்றாவது.

3. மூன்றுமுக வடிவங்கள் : சர்வச முகலிங்கத்தில் ஒன்றான தத்புருடம், அகோரம் வாமேதேவமுகத்தையுடைய ஒன்றும், மற்றும் ஏகபாத திரிமூர்த்தியும் மற்று சுவராபக்ன மூர்த்திக்கு (சுரம் நீக்கும் கடவுள்) சிவபராக்கிரம 64 வடிவங்களில் ஒன்றான இதற்கும் மூன்று தலைகள்.

4. நான்கு முக வடிவங்கள் : சர்வசலிங்கத்தில் ஒன்றான ஈசானம் நீங்கிய மற்ற நான்கு முகமுடைய முகலிங்கம்

5. ஐந்து முகங்களையுடையன : சதாசிவவடிவம், ஐந்து (பஞ்ச) முகலிங்கம்.

6, ஆறுமுகங்களையுடைய வடிவம் : தேவர்களது குறை தீர்க்க முருகனைத் தோற்றுவிக்க தம் ஐந்து முகங்களுடன் மற்றொரு முகம் கீழ்நோக்கியதாய்க் கொண்ட சிவவடிவம்.

''ஐந்து முகத்தோடு அதோ முகமும் தந்து திருமுகங்கள் ஆறாகி'' கந்தர் கலிவெண்பா - குமரகுருபரர்.

7. இருபத்தைந்து முகங்கள்: மகாசதாசிவர் மகாகயிலாய மூர்த்தி எனப்படும் சிவவடிவம்.

8. எண்ணற்ற திருமுகங்கள்: மகாசதாசிவமூர்த்தி.
''எண்ணில் பல்கோடி .... முடிகள் - திருவிசைப்பா

## 3.1.4.2. திருமுடித்தோற்றங்கள்

சிற்ப நூல்களில் தெய்வங்கள் பலவற்றிற்குப் பல்வகை முடித்தோற்றங்கள் கூறப்பட்டுள்ளன. அவற்றுள் சிவவடிவங்களுக்குக் கூறப்பட்டுள்ளவையாவன:

சடாமகுடம், சடாமண்டலம், சடாதாரம், சடாபந்தம், விரிசடை, பாம்புமகுடம் (சர்ப்பமௌலி), கேசபந்தம் ஆகியவையாகும்.

மற்றும் செயற்கைத் தலைமுடிகளான கிரீடமகுடம், கரண்டமகுடம்.

3. 1. 4. 3 சிவவடிவங்களில் ஒருசிலதவிர்த்த பெரும்பாலான வடிவங்களுக்கு மூன்று கண்களேயாகும் இம்மூன்று கண்களில் இடக்கண் சந்திரன்,வலக்கண் சூரியன், மற்றொரு நெற்றிக் கண் அனல்கண்.இம்மூன்றையும்,கண்களாகப் பெற்றசிவபிரான் முக்கண்ணன் என்று அழைக்கப்பெறுகிறார்.

வடமொழி அருச்சனையில் ....

,,ஓம் சோம சூரியாக்கினி
லோசனாய நம'' என்று வரும் ஒரு தொடர்

இதனைக் குறிப்பிடுகின்றது.

இம்மூன்று கண்களும் மூன்று இதழ்களோடு கூடிய வில்வம் போன்றும் மூக்கு அதன்காம்பு போன்றும் உள்ளது. இவற்றுள் அமயம் நேர்ந்துழி திறப்பது நெற்றிக் கண்ணாகிய அழற்கண். ஏனைய இரண்டும் எக்காலத்தும் திறந்திருப்பதாகும்.

## 3. 1. 4. 4. திருச்செவிகள்

சிவவடிவங்களில் முகந்தோறும் இரு செவிகளேயாகும்.

## 3. 1. 4, 5 1. சிவவடிவங்களின் திருக்கைகள்

இயல்பாகவே தெய்வ வடிவங்களுக்கு, முகத்துக்கு இரு கைகள் வீதம் காணப்படும். சில ஒருமுக வடிவங்களுக்கு இரண்டிற்கு மேற்பட்டும் காணப்படும்.

இரண்டுகைச் சிவவடிவங்கள்

### இருகை வடிவங்கள்:

மானிடக் கோலங்களில் காணப்படும்.

### மூன்று கைகள்

மகேசுர வடிவங்களில் ஒன்றான மாதொருபாகனுக்கு, (அத்தநாரீசுவரனுக்கு) வலப்பக்கம் இருகைகளும், இடப்பக்கம் ஒரு கையும் ஆக மூன்றுகைகளுடன் இவ்வடிவம் காணப்படும். சில நான்கு கைகளுடனும் காணப்படும். சுரம்நீக்கும் பரமனுக்கு (சுவராபக்ன மூர்த்திக்கு மூன்று கைகள்)

### நான்கு கைகள்

சிவவடிவங்களில் சோமாஸ்கந்தர் முதலான போக வடிவங்கள், யோகவடிவான ஆலமர்செல்வன் ஆகிய வடிவங்கள் நான்கு கைகளை உடையன.

### ஆறு கைகள்

நடராசர் வடிவங்களில் திருவாலங்காட்டு அண்டமுற நிமிர்ந்தாடும் ஐயனுக்கும், மற்றும் சிவபிரானது போர்க்கோல வடிவம் சிலவற்றிற்கும் ஆறு கைகள்.

## ஏழு கைகள்

சிவ வடிவங்களில் இல்லை. ஆனால் எண்திசைக் காவலரில் அழற்கடவுள் (அக்கினி)

## எட்டு கைகள்

ஆடல்வல்லான் வடிவில் சில: கார்க்கோல வடிவங்களான யானையை உரித்த கடவுள் மற்றும் சிலவற்றிற்கும் எட்டு கைகள்.

## பத்து கைகள்

ஆடல்வல்லான் வடிவில் சதாசிவ வடிவில் மற்றும் ஈசானம், அகோரர் ஆகிய கடவுளர்க்குப் பத்து கைகள். மதுரையம்பதி வெள்ளிமன்றில் கால்மாறி ஆடும் ஆடல் வல்லான், காஞ்சி கயிலாயநாதர் கோயில் ஆடல்வல்லான் இவற்றில் பத்து கைகளைக் காணலாம்.

## பதினாறு கைகள்

முப்புரம் எரிசெய்த ஆடல்வல்லான் (திரிபுராண்டவர்) ஊர்த்தவதாண்டவர், ஆகிய சிவவடிவங்கள் பதினாறு கைகளை உடையன.

## முப்பத்திரெண்டு கைகள்

சரபர், முப்பத்திரெண்டு கை அகோரர் (துவாத்ரிம்சத் புச அகோரர்) ஆகிய சிவவடிவங்கள் 32 கைகளை உடையவை.

## ஐம்பது கைகள்

மகாகயிலாச மூர்த்தி என்னும் மகாசதாசிவருக்கு ஐம்பது கைகள்.

## எண்ணற்ற கைகள்

மகாசதாசிவ மூர்த்திக்கு எண்ணற்ற கைகள் "எண்ணில் பல்கோடித் திண்டோள்கள்"

(ஆகம, சிற்பநூல்களிலும் சீதத்துவ நிதியிலும் சிவவடிவ மல்லாத வேறுபல தெய்வ வடிவங்களுக்கு 2, 4, 6, 7, 8, 9, 10, 12, 16 18, கைகள் கூறப்பட்டுள்ளன. திருவடிகளின் (கால்கள்) அமைப்பு : 3 கால்கள் எல்லாத் தெய்வ வடிவங்களுக்கும் கால் இரண்டேயாயினும் சிவ வடிவங்களில் சுரம் நீக்கும் பரமன் சுவாராபக்னமூர்த்திக்குத் திருவடிகள் மூன்று ஆகும். இரண்டு கால்கள் ஊன்றியும் ஒன்று தூக்கி நடனக்கோலத்தில் இருக்கும்.

## 3. 1. '. 5. 2. திருக்கைகளின் அமைப்பு

தெய்வ வடிவங்களது திருக்கைகள் அவற்றின் நிலைக்கு ஏற்றவாறு பிடித்தல் எடுத்தல் அருளல் ஆகிய செயல்களின் தோற்றத்தில் சிற்பநூல்கள் கூறுவன. இவையாவும் வடமொழிப் பெயர்களால் கூறப்பட்டு சிற்பநூல்களில் பேசப்படுகின்றன.

ஒவ்வொரு பெயர்

| | | |
|---|---|---|
| அபயஹஸ்தம் | நித்திரா ஹஸ்தம் | |
| வரதஹஸ்தம் | கூர்ப்பா | ” |
| தமருகஹஸ்தம் | விசுவமய | ” |
| சூசிஹஸ்தம் | வியாக்கியான | ” |
| கடகஹஸ்தம் | கர்த்தரிமுக | ” |
| திரிபதாஹஸ்தம் | அலபபத்ம | ” |
| அர்த்தசந்திரஹஸ்தம் | பல்லவ | ” |
| கடிஹஸ்தம் | அர்த்தபதா | ” |
| ஊருஹஸ்தம் | திரிசூல | ” |
| தர்சனிஹஸ்தம் | முட்(ஷ்) டி | ” |
| லோலஹஸ்தம் | சிகாமுத்திரை | |
| கசஹஸ்தம் | ஞானமுத்திரை | |
| சிங்ககர்ணஹஸ்தம் | விசுவமுத்திரை | |

மற்றும் பூஸ்பரிச, தனுர், தாடன, பிரசாரித, புட்பபுடதியான, தர்மசக்கர என்ற பெயருடைய கைகள் (அஸ்தங்கள்) உள்ளன. இவற்றுள் அஞ்சலி அதாவது இரு கைகூப்பி வணங்-

கும் கைகள் சிவவடிவப் பெருமைக்குப் பொருந்தாது. அவன் 'சேர்ந்தறியாக்கையான்'. அதாவது தன்னைப் பிறர் வணங்க அவர்கள் கைகூப்புவரேயன்றி இவர் யாரையும் வணங்கும் தனக்கு மேற்பட்ட ஒரு தலைவனைப் பெறாது தானே யார்க்கும் தலைவனாக மேனிலையில் இருப்பவர்.

**திருவடிகள்:** தெய்வ வடிவங்கள் அனைத்திற்கும் திருவடிகள் இரண்டேயாகும். இது பொதுவாகும். இதற்கு மேலும் குறை வாயும் திருவடிகளையுடைய சிவ வடிவங்கள்.

**ஒற்றைக்கால்:** மகேசுவர வடிவங்களில் ஒன்றான ஏகபாத மூர்த்திக்கும், சிவபராக்கிரம 64 சிவ வடிவங்களில் ஒன்றான ஏகபாத மூர்த்திக்கும் ஒரே திருவடி.

**மூன்றுகால்:** 64 சிவ வடிவங்களில் 24 வது சுரம் நீக்கும் பரமனுக்கு (சுவரகபக்ன மூர்த்திக்கு) மூன்று திருவடிகள்.

## 3.1.5.1. சிவவடிவங்களில் அணிகலன்கள்

| சிற்பமுறையில் | வரலாறுதோத்திர நூல்களில் |
| --- | --- |
| காதணிகள் | கங்கை |
| ஆரம் | பிறை |
| வாகுமாலை | பாம்பு |
| கேயூரம் | வன்னி |
| பூணூல் | கொன்றை |
| சன்னவீரம் | அறுகு |
| உதரபந்தனம் | ஊமத்தம்பூ |
| கடிபந்தனம் | வெள்ளெருக்கு |
| அருணோன்மாலை | கொக்கிறகு |
| ஊருமாலை | மீன் |
| | ஆமைஓடு |
| | பன்றிக்கொம்பு |

எலும்பு
மான்தோல்
புலித்தோல்
யானைத்தோல்
திருநீறு
செவ்வரத்தம்பூ

### 3.15.2 காதணிகள்

1. மகரகுண்டலம்: மகரமீன் தலையையும் பாம்பு உடலையும் உடைய காதணி.

2 பாம்பு (சர்ப்ப) குண்டலம்: பாம்பு வடிவில் அமைந்த காதணி.

3. இரத்தின குண்டலம்: பொன், மணி, இவற்றால் ஆன காதணி.

4. இலை (பத்திர) குண்டலம் ஓலைச்சுருள், இளந்துளிர் முதலியவற்றால் ஆன குண்டலம்.

5. சங்கு பத்திரகுண்டலம்: உருண்டை வடிவில் வளையம் பொருத்தப்பட்டதுமான காதணி,

6 விருத்தகுண்டலம்: உருண்டை வடிவில் வளையம் பொருத்தப்பட்டதுமான காதணி.

7. உருத்திராக்ககுண்டலம்: சிவ கண்மணியாகிய உருத்திராக்கத்தால் ஆன காதணி.

8. சிம்மகுண்டலம்: காதுத்துளையில் வளையம் ஒன்றினை வைத்து அடைத்து, அவ்வளையத்தில் நடுவிலிருந்து சிங்கம் வெளிவருவது போல் அமைந்த காதணி.

வேறு உறுப்புப் பகுதியில் காணும் அணி கலன்கள்:

1. ஆரம்: கழுத்திலிருந்து மார்பு வரை மாலையாகத் தொங்குவது. மற்றும் இத்துடன் கழுத்தணியாகக் கண்டிகை, சரப்பளி, அருப்புச் சுவடி.

2. வாகுமாலை: இரு தோள்களிலிருந்து தொங்குவது.

3. கேயூரம்: தோள்பட்டையிலிருந்து மேற்கையில் அணியப் படுவது.

4. பூணூல்: தோளில் இருந்து மார்பில் குறுக்கே அணிவது.

5. சன்னவீரம்: பூணூலில் இருந்து இடப்பக்கம் இடுப்புவரை செல்லுவது.

6. உதரபந்தனம்: வயிற்றின் இடையில் அணியப்படுவது.

7. கடிபந்தனம்: ஒட்டியாணம் போல் இடையில் அணியப் படுவது. யாளி, சிங்கமுக அமைப்பு.

8. அருணோன்மாலை கடிபந்தனத்திலிருந்து தொங்கப்படுவது.

9 உருமாலை: கடிபந்தனத்திலிருந்து தொடைவரை தொங்குவது.

10. உரசு சூத்திரம்: தனசூத்திரம். பூணூலில் இருந்து தொங்குவது.

11, தோள்வளை: தோளில் தொங்குவது,

12. கையினில் கைவளை, குடகம், சங்குவளை முதலியன.

இதுவரை கூறப்பட்ட அணிகள் அனைத்தும் வடிவங்கள் உருவாக்கும் போதே இதனில் ஒட்டி பிரித்து எடுத்து முடியாதவகையில் அமைக்கப்படுவதாகும்.

## 3. 1. 5. 3. பல்வகைப் பொருள்கள்

சிற்பநூல்களில் மட்டுமின்றி மற்றும் வரலாறு தோத்திர நூல்களில் சிறப்பித்துக் கூறப்படும் பல் வகைப் பொருள்கள் [4]

1. கங்கை: பகீரதனால் தவமிருந்து கொண்டு வரப்பட்ட கங்கை ஆறு சடையில் இருப்பது.

' பகீரதற்கா வானோர்வேண்ட பரந்திழியும்
புனற் கங்கைபனி போலாகச் செறித்தானை 6-50-10

2. பிறை (திங்கள்) தக்கனது சாபத்தால் தேய்ந்த பிறை மதியை சடையில் சூடியது.

" மாசறு திங்கள் கங்கை முடிமேலணிந்து (2—85—1)
பித்தாபிறைசூடி (7—1—1)

3, பாம்பு ; தாருகவனத்து முனிவர்கள் வேள்வியிலிருந்து ஏவிய பாம்புகள் உடலில் அணியாகக் கொண்டது.

" புற்றானை புற்றரவம் அரையின் மிசை சுற்றானை (2—1—4)

4. வன்னி : இது சிவ பூசைக்குரிய ஒரு இலை.

" துஞ்சிருள் வன்னி கொன்றை முடிமேல் அணிந்து (2—85—5)

5. கொன்றை : மஞ்சள் நிறமுடைய மலர். (மேல் 4-ல் கூறப் பட்டது) (2—85—5)

6, ஊமத்தம்பூ (மதமத்தம்) திருமுடியில்

" கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தம்
கதிர்மதியம் உள்ளார்ந்த சடை' —, (423—1)

7. வெள்ளை எருக்கு : இம்மலர் திருமுடியில் இருப்பது.

" சலமகளோடு எருக்கு முடி மேலணிந்து"
2—85—9)

"வெள்ளெருக்கம் சடை முடியன்" கம்பராமாயணம் யுத்தகாண்டம் இராவணன் வதைப்படலம் - பாட்டு-236.

8, கொக்கிறகு : கொக்கு குருவுடன் வந்த குக்குடா சூரவை வென்று அதன் இறகை முடியில் சூடிய பெம்மான்.

' கொக்கிற்கும் குளிர் மாமத்தமும் (7—84—2)

9. மீன்கள் : திருமால் மீன்வடிவுடன் கடலைக் கலக்கியபோது பைரவர் அம்மீனைப் பிடித்து அதன் கண்ணைச் சிவபிரான் திருவடியில் சூட்டி வைத்தார்.

10. ஆமைஓடு : திருப்பாற்கடலில் ஆமை உருத்தாங்கியிருந்த திருமால் அமுதம் கிடைத்தபின் கடலைக் கலக்க, பிள்ளையார் அதனைப்பிடித்துவர அதன் ஓட்டைக் எடுத்துத் தலை மாலையுடன்மார்பில் அணிந்தார்.

11. 'என்பொடு கொம்பொடு ஆமை இவைமார்பில் அணிந்து'
(2—85—2)

12. கேழல் (பன்றி) கொம்பு : இரண்யாக்கதனைப் பன்றி உருவாக்கிக் கொன்ற திருமால், ஆணவம் கொண்டு அலைய முருகன் அப்பன்றியின் கொம்பைந் பறித்துக் கொணர அதனை மார்பில் தரித்துக் கொண்டார்.

'அடர்பழுங்கேழல் மருப்போட்டு மணிக்கோவை
(6—18—9)

என்பு : (எலும்பு அணி) உலக அழிவான ஊழிக்காலத்தில் நான்முகன், திருமால் இவர்களை முடிவாக்கி அவர்களது எலும்புகளையும்தலைகளையும் மாலையாகக் கொண்டது.

'என்பொடு கொம்பொடு ஆமை இவை மார்பிலங்க''
(2—85—2)

தாங்கோலவெள்ளெலும்பும் பூண்டு' (4—19—5)

13. யானைத்தோல்: யானை உரு அரக்கனைக் கொன்று அத்தோலை உரித்துப் போர்த்தது.

'போர்த்தாய் அங்கோர் யானையில் ஈருரிதோல்'
(4—1—10)

14. புலித்தோல்: தாருகவனத்து முனிவர்கள் ஏவிய புலியைக் கொன்று அதன் தோலை ஆடையாகக் கொண்டது.

'பொரியுறு புலியுரி அரையதாகவும்' (4—10—8)

'பொன்னார்மேனியனேபுலித்தோலை அரைக்கசைத்து'
(7—24—1)

15. கூவிளம் : (வில்வம்) இது இவருக்கே சிறப்பாய் உள்ள இலை. இதனை முடியில் கொண்டவர்.

கூவிளமும் மதமத்தமபூம் சூழற்கு அணிந்த' (6-18-10)

16, செம்மேனி: 'சிவனெனும் நாமம் தனக்கே உடைய செம் மேனி எம்மான்'

17. பவளமேனி: 'வானவர் போற்றித் திசைத்தொழும் பவளமேனியர்' (5–51–2)

எரிதழல்மேனி: 'சிவன் எம்மிறைச் செம்பவள எரிபோல் மேனிப்பிரான்' (4—9–3)

18. திருநீறு: புகமுடியில் விண்ணவர் மண்ணவர் அனைவரையும் நீறாக்கி (சாம்பராக்கி) திருமேனியில் பூசிக் கொண்டது.

'மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான்'
(4–5—1)

சிவபிரான் பவளமேனியர். இம்மேனியில் திருநீற்றுப் பூச்சு, இத்தோற்றம் பவளமலையில் பனிபடர்ந்து காணும் தோறறம் போல் உள்ளது என்பதைத் திருவிசைப்பாடல்

'பவளமால் வரையில் பனிபடர்ந்தனையதோர்
படரொளி தரு திருநீறும்[3]

| | |
|---|---|
| மான்தோல் புலித்தோல் | — ஆடை |
| யானைத்தோல் | — போர்வை |
| சிங்கத்தோல் | — இருக்கை |

(திருமாலின் நரசிங்க வடிவில் உரித்தது)

## 3.1.6. சிவவ்டிவத் திருக்கைகளில் காணப்படும் பொருள்கள்

சிவவடிவங்களில் இரண்டு கைகள் முதல் எண்ணற்ற கைகள் வரை உள்ளன. இக்கைகளில் படைக்கலங்களேயன்றி வேறு பல்வகைப் பொருள்களும் உண்டு.

தெய்வ வடிவங்களின் திருக்கைகள் அவற்றின் உட்புற ஆற்றலின் விரிவு என்றும், கைகளில் உள்ள கருவிகள் அனைத்து அண்டங்களிலுள்ள பல்வேறு சக்திகளின் சின்னங்கள் என்றும் நமது அருளாளர்களும் சிற்பிகளும் கருதி வந்துள்ளனர்.




வேறு பல்வகைப் பொருள்கள்.

1. அணிவகை
2. பாத்திரங்கள்
3. பூசனைப்பொருள்கள்
4. இசைக்கருவிகள்
5. இலை. பூ. காய்கனிகள்
6. உயிரினங்கள்
7. மங்கலப் பொருள்கள்
8. இழிபொருள்கள்

சிவ வடிவப் படைக்கலங்கள் (ஆயுதங்கள்)

1. மழு
2. வாள்
3. சங்கு
4. சக்கரம்
5. வில்
6. அன்பு
7. வேல்
8. கோடரி
9. மூவிலைச்சூலம்
10. கட்வாங்கம்
11. சக்தி
12. வச்சிரம்
13. டங்கம்
14. தண்டம்
15. அனல்
16. வலயம்

17. கத்தி
18. கேடயம்
19. கட்கம்
20. தோமரம்
21. கதாயுதம்
22. பிராசம்
23. கலப்பை
24 தோட்டி
25. குந்தம்
26. அஸ்திதம்ஷட்ரம் (பனை மட்டை)போன்ற எலும்பு
27. ரம்பம்
28. பிண்டி
29. பாலம்
30. புத்கரம்
31. புசுண்டி
32. பரிகம்
33. பலகை
34. பட்டசம்
35. பிரம்பு
36. சுத்தரிக்கோல்
37. உலக்கை
38. உளி
39. முஷ்டி
40. சாட்டை
41. பாசம்

## 3. 1. 6. 4. புனிதப்பொருள்கள்

அக்கமலை
யோகதண்டம்
பிரமசரியதண்டம்
கமண்டலம்
சுவடி
திருநீற்றுப்பை
கெண்டி
கொடி
மாத்திரைக்கோல்
இரத்தினம்
மணி
திருஓடு
கலசம்
வில்வம்
தாமரை
நீலம் (நீலோத்பலம்)
மலர்
மாதுளம்பழம்
வில்வப்பழம்

| இசைக்கருவிகள் | உயிர் இனம் | தாழ்ந்த பொருள்கள் |
|---|---|---|
| உடுக்கை | மான் | மண்டைஓடு |
| வீணை | பாம்பு | தலை |
| யாழ் | பன்றி | |
| மத்தளம் | வேதாளம் | |

1. சிவஞானசித்தியார் சூத்திரம் — 51

2. திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் அடிகள் நினைவு மலர் (சமாசப்பதிப்பு) பக்கம் 13

3. சிவஞானசித்தியார் — 47

4. இப்பகுதியில் குறிக்கப் பெற்றுள்ள 3 எண்களில் முதல் எண் தேவாரத்துள் திருமுறை எண் பதிக எண் பாடல் எண் இரண்டாவது திருமுறையில் வரும் பதிக எண் மூன்றாவது பதிகத்துள் பாடல் எண்.

## 3. 2 சதாசிவ வடிவம்

தென்னாட்டுச் சிவன் கோயில்களில் கருவறையில் இடங்கொண்டு விளங்குவது சிவலிங்க வடிவம். இது அருவுருவாய் விளங்குவது. இவ்வடிவிற்குச் சிறப்பு நாட்களில் ஐந்துமுக (பஞ்சமுக) அருச்சனைசில இடங்களில் நடைபெறும். அப்போது கருவறைக்குள் ஐந்து சிவாச்சாரியார்கள் சிவலிங்கத்தைச் சுற்றி நின்றுகொண்டு சிவபிரானின் ஆயிரம் பெயர்களைச் சொல்லி அருச்சனை செய்வர்.

## 3. 2 1

இவ்வாறு செய்யப்படும் சிவார்ச்சனை அருஉருவத்திரு மேனியாகிய சிவலிங்கத்தின் உச்சி, கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்குப் பக்கங்களில் ஐந்து முகங்களைப் பாவனையாகக் கற்பித்து நடைபெறுவது. இந்தக் கற்பனை முகங்கள்

உச்சியில் — ஈசானம்

கிழக்கில் — தத்புருடம்

தெற்கில் — அகோரம்

வடக்கில் — வாமதேவம்

மேற்கில் — சத்யோசாதம்

என்னும் ஐந்து ஆகும்.

இந்த ஐந்து முகங்களையும் வெளிப்படையாகக் கொண்டு பத்துத் திருக்கரங்களுடன் விளங்கும் வடிவே சதாசிவ வடிவமாகும். இவ்வடிவம் மற்ற சிவ வடிவங்களைப் போல் சிலை, செப்பு வடிவில் பெரும்பாலும் காணப்படுவதில்லை. சுதை வடிவில் ஒருசில சிவன் கோயில்களின் கோபுரங்களில் காணலாம். இத்தகைய சதாசிவ வடிவின் விளக்கத்தை முதலில் காண்போம்.

## ௫. 2 2 சதாசிவக் கடவுளின் தியான வடிவம்

இச்சதாசிவ வடிவத்தை முதலில் உள்ளத்தில் எண்ணி (தியானத்தில்) காணக் கூறப்படும் பாவினில் காணப்படும் உருவமாவது.

" உச்சிமுக மீசான மொளிதெளிய பளிங்கே
யுத்தரபூ ருவதிசையை நோக்கியுறு முகந்தே
நிச்சயித்த முகத்தின்கீழ்ப் பூர்வதிசை நோக்கி
நிகழுமுகந் தத்புருடங் கோங்கலர்போ னிறமே
யச்சுறுத்து மகோரமுக மறக்கரிது கராள
மவிழ்தாடி வலத்தாவிற் றென்னோக்கி யமருஞ்
செச்சை நிறந் தெரிவைமுக மிடத்தோண்மேல் வாமஞ்
சிறுபுறத்தின் முகஞ்சத்தி யோசாதந் திகழ்பால்"[1]
"திருஉருவந் தெளிபளிங்கு சடாமகுடத் திகழி
சிறுபிறையு மூவைந்து திருநயனம் வலப்பாற்
கரத்தலத்திற் சத்தியப யஞ்சூல நீண்ட
கட்டங்கந் தமருகமு மற்றையிடக் கரத்தின்

வரதமுமா துளங்கபலம் போசி செபமாலை
மணமலிநீ லோற்பலமு முடையர்வய திரெட்
குறுவிரட்டி யுறுப்பிரண்டு பதம்பதுமா தனந்தா
னுறவிருப்பர் சதாசிவந்தத் துவத்ததவிசி னுகந்தே"[2]

## 3.2..1 மேற்கண்ட இருபாக்களின் விளக்கம்

நான்கு திசைகளுக்கும் நான்கு முகங்களும், உச்சியில் ஒரு முகமும் ஆக ஐந்துமுகங்களையும்,

முகங்கள் தோறும் மூன்று கண்களையும் உடையவராயிருப்பார்.

உச்சியிலுள்ள ஈசானமுகம் திசையை நோக்கி சுத்தபளிங்கு நிறமாயிருக்கும்.

கிழக்கிலுள்ள தத்புருஷம் முகம் கிழக்கு நோக்கிய தாய் கோங்கின்பூ நிறமாயிருக்கும்.

தெற்கில் உள்ள அகோரமும் வலத்தோள் மேல் தென் திசை நோக்கி அவிழ்ந்த தாடியும் கருநிறத்துடன் கிழத்தன்மையும் பயங்கரத் தோற்றம் உடையதாயிருக்கும்.

வடக்கிலுள்ள வாமதேவ முகம் இடத்தோள்மேல் வடக்கு நோக்கி பெண்முகத் தோற்றத்துடன் சிவப்பு பவள நிறமாயிருக்கும்.

மேற்கிலுள்ள சத்யோசாத முகம் மேற்கு நோக்கி குழந்தை முகத் தோற்றத்துடன் பால்நிறமாக இருக்கும்.

திருமுடிகளில் பிறைச்சந்திரனையும் கொன்றை மாலையையும் சூடி சடாமகுட முடையவராய், கழுத்தின் கீழ் சுத்தபளிங்கின் நிற திருமேனியையும் பத்துக் கைகளையும் உடையவராயிருப்பார்.

வலப்பக்கத்து ஐந்து கைகளில் அபயம், சூலம், வேல், மாத்திரைக்கோல், தமருகம் இவற்றையும்.

இடப்பக்கத்து ஐந்து கைகளில் வரதம், மாதுளம்பழம் நாகம், செபமாலை, நீலோத்பலம் ஆகிய இவற்றையும் உடைவராய்,



படம் 16. சதாசிவம். ஆய்வுக்கு வரைந்தது.

முப்பத்திரெண்டு உறுப்புகளும் உடையவராய், இரண்டு திருவடிகளும் கொண்டு பதினாறு வயது இளமை உடையவராய் பதுமாசனத்தில் எழுந்தருளியிருப்பார்,

| முகம் | நோக்கும் திசை | நிறம் | தோற்றம் | தன்மை | தொழில் | பஞ்ச பூதம் | கலைகள் |
|---|---|---|---|---|---|---|---|
| ஈசானம் | உச்சி | பளிங்கு | அழகு | குழந்தை | அருளல் | வெளி | 5 |
| தத்புருடம் | கிழக்கு | கோங்கு மலர் | கெம்பீரம் | சாந்தம் | மறைத்தல் | வளி | 4 |
| அகோரம் | தெற்கு | கருப்பு | பயங்கரம் | கோரம் | அழித்தல் | அனல் | 8 |
| வாமதேவம் | வடக்கு | பவளம் | பெண்முகம் | கவர்ச்சி | காத்தல் | நீர் | 13 |
| சத்யோசாதம் | மேற்கு | பால் | குழந்தைமுகம் | அரசு | படைத்தல் | மண் | 8 |

### 3. 2. 2. 2. சதாசிவம்

சிவவடிவங்களில் இச்சதாசிவ வடிவமே எல்லா வடிவத் தோற்றங்களுக்கும் பிறப்பிடமாகும். ஆறு ஆதாரங்களுள் ஆறாவது ஆதாரத்தில் மனோன்மணி என்ற சக்தியுடன் விளங்குவது சதாசிவமாகும்.

இக்கடவுளின் உச்சிமுகமாக ஈசானத்திலிருந்து 28 சைவ ஆகமங்களும், மற்ற தத்புருட, அகோர, வாமதேவ, சத்யோசாத முகங்களிலிருந்து நான் மறைகளும் தோன்றின எனப்படும் மற்றொரு வகையில் இந்த ஐந்துமுகங்களிலிருந்து 28ஆகமங்கள் தோன்றின என்றும், இந்த ஆகமங்கள் 28-ம் சிவபிரானின் உறுப்புகள் எனவும் கூறப்படும்.

மற்றும் முகம் ஒன்றுக்கு ஐந்துவீதம் ஐந்து முகங்களிலிருந்து $5 \times 5 = 25$ சிவவடிவங்கள் எனப்பெயர் பெற்றன.

### 3. 2. 3. சதாசிவ வடிவ மைப்பு

இதுபற்றிய விளக்கம் பலவிதமாகச் சைவ நூல்களில் கூறப் படினும் முகம் ஐந்து. கைகள் பத்தில் இவற்றில் மாற்றம் இல்லை. எனினும் அமர்ந்திருக்கும் நிலையில் வீர இருக்கை (வீராசனம்) தாமரை இருக்கை பத்மாசனம், திருக்கையினுள் எண்வகைப் பொருட்கள் இவற்றில் சிறிது மாற்றம் காணப் படும்.

சதாசிவ வடிவத் திருமேனி மற்ற சிவ வடிவங்களை ஒப்ப எங்கும் கோயில்களில் இருப்பதில்லை. விரல்விட்டு எண்ணிச் சொல்லும் வகையில் சிலஇடங்களில் கருங்கல்,சுதை, உலோகம் இவற்றால் ஆனவை உள. இவ்வாறு உள்ள வடிவங்களும் நித்திய வழிபாட்டில் (பூசனையில்) இல்லாது காட்சிப் பொருளாகத்தான் உள்ளது. ஒரு சில அருங்காட்சியகங்களிலும் இருக்கிறது;

### 3. 2. 4. கோயில்களில் காணப்படும் சதாசிவவடி வங்கள்

மதுரை : இங்குச் சுதைவடிவில் மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் மேலைக் கோபுர மேற்பக்கம் முதல் நிலையில்

வலபக்கம் ஐந்து முகம் பத்துக் கைகளுடன் சதாசிவ வடிவமும் இடப்பக்கம் ஐந்து முகம் பத்துக் கைகளுடன் காயத்திரி (பெண் தெய்வ) வடிவம் உள்ளது.

இதே போல் சொக்கநாதர் கீழைக்கோபுர கிழக்குப் பகுதியில் முதன்நிலையில் இருபக்கமும் அடுத்து இரண்டாங் கோபுர வடப்பக்கம் கீழ்வரிசையில், பின் இதனை அடுத்து சொக்கநாதர் திருக்கோயில் நுழைவாயிலில் இருவாயில் காவலர் (துவாரகபாலகர்) செம்புப் படிவங்களின் பின்புறமும் ஆக நான்கு சுதை வடிவங்கள் உள்ளன.

இதனினும் சிறப்பாக, சொக்கநாதர் நந்திமண்டப்பத்தின் எதிரில் உள்ள திருவாயில் இருபக்கமும் சதாசிவர், காய்த்திரி இருவடிவங்களில் கற்சிலைகள் மிக்க பேரழகுடன் விளங்குகின்றன. இவற்றுள் வலப்பக்கத்திலுள்ள சதாசிவ வடிவில் இடப்பக்கம் அம்பிகை அமர்ந்த தோற்றத்தில் இருவடிவங்களும் சேர்ந்து சோமாஸ்கந்தர் வடிவத்தோற்றத்தில் அழகுடன் மிளிர்கிறது.

## 3. 2. 4. 1.

மற்றும் திருவிடைமருதூர் மேலைக்கோபுரக் கிழக்கு பக்கத்தில் சதாசிவ சுதைவடிவம் ஒன்றும், தெற்குக் கோபுர வடபக்கம் இருபுறத்திலும் இருசதாசிவ சுதை வடிவங்கள் உள்ளன.

## 3. 2. 4. 2

தஞ்சைப் பெருவுடையார் இரண்டாம் கோபுரத்திலும் இச்சதாசிவ வடிவம் இடம் பெற்றுள்ளன.

இவ்வாறு இங்கெல்லாம் காணப்படும் இச்சதாசிவ வடிவங்களில் ஐந்துமுகங்களும் ஒரே வரிசையில் நடுவில் ஒன்று இருபக்கமும் இரண்டு இரண்டாகத்தான் உள்ளன.

உச்சியில் ஈசானம் மேல் நோக்கியிருக்க மற்றைய நான்கு திசைகளை நோக்கி சத்யோசாதம் ஆகிய முகங்கள் இல்லை. இவை பாவனையாக வழிபாட்டில் ஐந்துமுக அருச்சனை (பஞ்சமுக அருச்சனையில்) சிவாச்சாரியார்களால் கொள்ளப் படுகிறது. மற்றும் திருவிடைமருதூர் போன்ற சிவதலங்களில்

மாலைக்கால வழிபாட்டில் மூலலிங்கத்தில் அடுக்குவிளக்த (தேர் அடுக்கு போன்ற தீபவரிசை) அடுக்கு கற்பூர ஒளிகாட்டும்போது சிவ லிங்கத்தின் உச்சி (ஈசானம்) முன்பக்கம் தத்புருடம் தென்பக்கம் அகோரம்,வடப்பக்கம் வாமதேவம், மேற்குப்பக்கம் சத்யோசாதமாக பாவனையில் நினைத்து நடைபெறுகிறது.

**3.2.4.3.** தஞ்சைப் பெரியகோயில் பெருவுடையார். விமானமே இச்சதாசிவ வடிவமென்பர்.

இங்குள்ள கருவறையை ஒட்டி உட்புறத்தில் சிறிய திருச் சுற்று ஒன்று இருக்கிறது. இதன் தெற்கு மேற்கு வடக்கு ஆகிய மூன்று பக்கங்களில் அகோர, சத்யோசாதம், வாமதேவ வடிவங்கள் அமைந்திருக்கின்றன. கருவறையில் உள்ள பெருவு டையார் (பெருவடிவான இலிங்கம்) தத்புருடம், விண்ணளா விய கருவறை விமானம் ஈசானமுகம் எனக் கொள்ளப்படுகிறது.

**3.2.4.4** இவ்வித அமைப்பில் பாவனையாகக் கொள்ளப்படும். நிலையில் தஞ்சைக்குக் கிழக்கில் பாபநாசத்தை ஒட்டியுள்ள திருநல்லூர் மாடக்கோயில் விமானம் அமைந்துள்ளது குறிப் பிடத்தக்கது.

**3.2.4.5** தஞ்சை இராச கோபாலசாமி கோயில் அருங்காட்சிய கத்தில் பல சிற்பங்கள் குவிந்து]இருப்பதில் உச்சியில் ஈசானமுகம் வெளிப்படையாக இருக்க மற்ற நான்கு பக்கங்களிலும் நான்கு முகங்கள், பத்துக் கைகளுடன் வீராசன இருக்கையில் சதாசிவச் சிலை இருக்கிறது.

**3.2.4.6** எலிபெண்டானில் புடைப்புச் சிற்பமாக மூன்றுமுகங் கள் மட்டும் முன்பக்கம் இருக்க உள்ள சதாசிவ வடிவம் காணத் தக்கது. இவ்வடிவச் சின்னத்தை நம்பாரத அரசு ஒரு சமயம் அஞ்சல் தலையாக அச்சிட்டு வெளிப்படுத்தியது குறிப்பிடத் தக்கது.

**3.2.4.7** சென்னை அரசு அருங்காட்சியகத்தில் செப்புத் திரு மேனி சதாசிவ வடிவில் இருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இங்குக் கூறப்பட்டதைப் போல் நம் நாட்டுச் சிவாலயங்கள் இன்னும் சிலவற்றுள்ளும் இச்சதாசிவ வடிவத்தைக் காணலாம்.

3 2.4.8 கடல்கடந்த நாடாகிய கம்போடியாவில் (காம்போசத்தில்) ஆங்கொர்[3] அ (ANCHOR) என்னும் இடத்தில் நெருங்கிய காட்டில் காணப்படும் சிவாலயக் கோபுரம் ஒன்று நான்கு பக்கங்களிலும் நான்கு சிவவடிவத்தலைகள் தத்புருடம்அகோரம் வாமதேவம் சத்யோசாத முகவடிவில் அமைந்து கோபுரமே சதாசிவ வடிவத்தில் திகழ்கிறது.

3 2.4.9 மற்றும் வடஇந்தியாவில் சதாசிவ வடிவ ஓவியங்கள் சில மாறுதல்களுடன் காணப்படுகின்றன. இவ் ஓவியங்கள் தோற்றத்தில் வட இந்தியாவில் நாகரிகத் தோற்றத்தில் உள்ளன. அவற்றுள் சில:

3.2 4 9.1 ஐந்துமுகங்களும் ஒரேவரிசை. முகங்கள்தோறும் முக்கண்கள் முடிந்த சடைமுடி. சடைமுடியில் இருந்து முகந்தோறும் சடை தாழ்ந்திருக்க உள்ளது. வலப்பக்கம் நான்கு கைகளில் நீண்ட கத்தி, திரிசூலம், பூக்களை உடைய சிறுகிளை கோடரி, இடப்பக்கம் தடி, பாம்பு, சாட்டை, மணி இவற்றுடன் தாமரை மலரில் அமர்ந்த நிலையில் ஓவியமாக மேற்குப் பஞ்சாப் பசோலிப் பள்ளியில்[4] இருக்கிறது.

3 2.4.9.2 ஐந்துமுகம் நான்கு கைகளுடன் சதாசிவ வடிவ ஓவியம் ஒன்று மேற்கு பஞ்சாபில் அமர்ந்த நிலையில் மேற்கு பஞ்சாப் மாண்டி பள்ளியில்[5] இருக்கிறது.

3.2.4.9.3 ஐந்துமுகம் இரு கைகளுடன் காளை மீதமர்ந்த நிலையில் சதாசிவ வடிவ ஓவியம் மேற்கு பஞ்சாப் டெகரிகார் வால்'[6] பள்ளியில் காணப்படுகிறது.

## 3 2.5 அரிஅர சதாசிவர்

மகேசுவர வடிவங்களில் ஒன்று சங்கர நாராயண வடிவம். இது வலப்பால் சிவமாயும் இடப்பால் திருமாலாயும் தோன்றுவது. இதனை ஒப்ப சதாசிவ வடிவிலும் வலப்பால் சிவமாயும் இடப்பால் திருமாலாயும் தோன்றும் ஓவிய வடிவம் ஒன்று நம் நாட்டில் மேற்குப் பஞ்சாபில் காணப்படுகிறது.



படம் 17 அரிஅரசதாசிவர் Manifestation of Shiva என்ற நூலில் கண்டுள்ளபடி வரைந்தது.




படம் 18 பஞ்சபிரம் 1) ஈசான 2) தத்புருட 3) அகோர 4) வாமதேவ 5) சத்யோசாத வடிவங்கள் ஆய்வுக்கு வரைந்தது.

இது ஆகமமுறையினை ஒட்டி உச்சிமுகம் ஈசானம் சடைமுடியின் உச்சியில் மேல் நோக்கியும் மற்ற முகங்களும் அவ் அவற்றிற்குரிய திசைகளை நோக்கியிருக்கிறது. (மேற்கு நோக்கிய சத்யோசாதம் ஓவியமானதால் பின்பக்கம் மறைந்துள்ளது)

முகங்கள் யாவும் சடைமுடியுடனும் தொங்கும் சடையுடனும் விளங்குகின்றன.

வலப்பக்கத்து சிவபாகத்தின் ஐந்து திருக்கரங்களில் திரிசூலம், உடுக்கை, திருவோடு, சுத்தி, பாம்பு; இடப்பக்கம் திருமாலின் பாகத்தில் கதாயுதம், சங்கு, வளையம், தாமரை கேடயம் உள்ளது

தோளில் மேலாடையாக யானைத்தோலும், இடையில் புலித்தோலாடையும், கழுத்தில் தலை மாலையுடன், இரு கால்களையும் மடக்கி யானைத் தோல் விரிப்பில் அமர்ந்துள்ளார். மற்றும் வலப்பக்கம் காளை ஊர்தியும் இடப்பக்கம் புலியும் பீடத்தை ஒட்டி உள்ளன.

இத்தகைய ஒரு ஓவியமோ, சிற்பமோ தென்னாட்டில் இருப்பதாகத் தெரியவில்லை,

## 3. 2. 6

சதாசிவ வடிவில் ஐந்து திருமுகதனி(பஞ்சபிரம) வடிவங்கள்

சதாசிவ வடிவின் ஐந்து திருமுகங்களும் தனித்தனியே பிரித்து அவற்றிற்கு முழு வடிவங்கள் தந்து பஞ்ச பிரம மந்திரத்தால் அழைக்கப் பெறுகிறது. இங்கு இவ்வைந்து மூர்த்திக்கு தலை ஒன்று. திருக்கரங்கள் இரண்டு. மற்றும் பொருள்களுடன் விளக்கப்படுகிறது. ஆனால் இவ்வைந்தும் ஒன்றுக்கு மேற்பட்ட திருக்கரங்களுடனும் பேசப்பட்டும் ஓவியத்திலும் காணப்படுகிறது.

1. ஈசானமூர்த்தி: இரண்டு திருக்கரங்கள் சடைமுடி படிகநிறம், வலது கை அபயம். இடது கையில் திரிசூலம்,

2. தத்புருட மூர்த்தி : இரண்டு திருக்கரங்கள். வலது கை அபயம். இடது கையில் வில்வ இலை பொன் நிறம்.

3. அகோர மூர்த்தி : தொங்கும் தாடியுடைய ஒரு திருமுகம். வலது கையில் திரிசூலம். இடது கையில் திருஓடு. கரிநிறம்.

4. வாமதேவமூர்த்தி : வலதுகையில் கத்தி. இடது கையில் கேடயம், தலையில் தலைப்பாகை. வெள்ளை நிறம்.

5. சத்யோசாதமூர்த்தி : வலக்கை அபயம். இடக்கை வரதம். தலைப்பாகை வெள்ளை நிறம்.

இவ்வடிவத் தோற்றங்கள் யாவும் மந்திரம் சொல்லி பூசிக்கும்போது பாவனையாக உள்ளத்தில் நினைக்கப்படுவன. ஓவிய சிற்ப வடிவங்கள் இவை பற்றிக் காணப்படுவது மிகச் சில இடங்களில்.

இந்த ஐந்து வடிவங்களுடன் சடாங்கம் என்னும் ஆறு மந்திரங்கட்குரிய வடிவங்களும் பதினொன்றாகச் சேர்ந்து சிவ பூசனையில் முதல்சுற்று (ஆவரண) பூசையில் சொல்லி, பூக்களை சிவவடிவத்தைச் சுற்றி இடல் வேண்டும்.

ஐந்து (பஞ்சப்) பிரம (மற்றொரு வகையில்) வடிவங்கள்

| | பெயர் | முகம் | திருக்கைகள் |
|---|---|---|---|
| 1. | ஈசானம் | 5 | 10 |
| 2. | தத்புருடம் | 4 | 4 |
| 3. | அகோரம் | 4 | 8 |
| 4. | வாமதேவம் | 4 | 4 |
| 5. | சத்யோசாதம் | 4 | 4 |

திருநல்லம் (கோனேரிராசபுரம்) சிவலாயக் கொடிமர மண்டபத்தின் மேல் நோக்கி இந்த ஐந்து வடிவ அமைப்பின் ஓவியத்தைக் காணலாம்.



படம் 19 மகாசதாசிவர் (ஆய்வுக்கு வரைந்தது)

## 3. 2. 7. மகாசதாசிவர்

சதாசிவ வடிவ ஐந்து திருமுகங்கள் ஒவ்வொன்றிலும் ஐந்து சிவவடிவங்கள் வீதம் 25 வடிவங்கள் தோன்றி மகேசுவர வடிவங்கள் எனப் பெயர் பெற்றன.

சதாசிவ ஐந்து திருமுகங்களில் தனித்தனி பிரிக்கப் பெற்று ஐந்து (பஞ்ச) பிரம மூர்த்திகள் எனப் பேசப்பட்டும் பூசிக்கப் பெற்றும் வருகிறது, என்பது இதற்கு முன்னர் விளக்கப் பட்டுள்ளது.

இங்கு மகாசதாசிவர் என்னும் வடிவம் 25 முகங்கள் 50 கைகள் உடையதாய் பூசிக்கப் பெறுகின்றது. இத்தகைய சிறப்பு வடிவம் வழிபடும் நிலையில் சிவன் கோயில்களில் காண்பது அரிதாயினும் கோயில் கோபுரங்களில் சுதைவடிவில் தமிழகத்துக் கோயில்களில் அமைந்துள்ளதைக் காணலாம்.

இம்மூர்த்திக்கு சடாமகுடம் முக்கண்ணுடன் 25 திருமுகங்கள் பக்கத்திற்கு 25 வீதம் இரு பக்கங்களிலும் 50 கைகள் படைக்கலங்கள் மற்றும் வேறுபல பொருள்களுடன் காணப் படுகிறது என்பதை சுதைவடிவங்களில் காணப்படவில்லை. எனினும் சீதத்துவநிதி என்னும் நூல் இக்கடவுளை மகாகயிலாயமூர்த்தி என்ற பெயரில் விளக்கிக்கூறுகிறது. அதன்படி:-

மலர்ந்த தாமரை மலர்மேல் 25 முகங்கள். 50 கைகள், விசித்திரமாக இரத்தின அணிகள் எண்ணற்ற சூரியர் 10 களிடத்துக் காணப்படும் பேரொளியை உடையவராய் மெய் யெல்லாம் வெண்ணீறு, பாம்புப் பூணூல், பாலமாமை, முகத்தோறும் முக்கண்கள் விளங்க வலது காலை தொங்க விட்டு, இடதுகாலை மடக்கி சிங்க இருக்கையில் அமர்ந்திருப் பார் திருக்கைகளில் விளங்கும்பொருள்கள்:

| வலது பக்க 25 கைகளில் | | இடது பக்க 25 கைகளில் | |
|---|---|---|---|
| 1 | அபயம் | 1 | வரதம் |
| 2 | சக்கரம் | 2 | வில் |
| 3 | சூலம் | 3 | மான் |

| | | | |
|---|---|---|---|
| 4 | உளி (டங்கம்) | 4 | சங்கம் |
| 5 | அம்பு | 5 | கேடயம் |
| 6 | கதை | 6 | பாசம் |
| 7 | தாமரை | 7 | பரசுவதம் (கோடரி) |
| 8 | கத்தி | 8 | முத்கரம் |
| 9 | தோமரம் | 9 | உடுக்கை |
| 10 | சத்தி | 10 | மணி |
| 11 | பிராசம் | 11 | சுவடி |
| 12 | கோடரி (பரசு) | 12 | உருத்திரவீணை |
| 13 | பாம்பு | 13 | கபாலம் |
| 14 | கலப்பை | 14 | முண்டம் |
| 15 | அங்குசம் | 15 | கட்வாங்கம் |
| 16 | அக்கமாலை | 16 | பூசுண்டி |
| 17 | சிறுகத்தி (சுரிகை) | 17 | பரிகம் |
| 18 | கொடி | 18 | பலகை |
| 19 | தண்டம் | 19 | பட்டசம் |
| 20 | வச்சிரம் | 20 | பிரம்பு |
| 21 | குந்தம் | 21 | கமண்டலம் |
| 22 | அஸ்திதம் ஷ்ட்ரம் | 22 | அனல் |
| 23 | ரம்பம் | 23 | கத்தரிக்கோல் |
| 24 | பிண்டி | 24 | உலக்கை |
| 25 | பாலம் | 25 | மயில்தோகை |

சிவபராக்கிரமத்தில் மகா சதாசிவர்

இக்கடவுள் கணக்கிட்டு உரைத்தற்கு முடியாத திருமுகங்களையும், திருக்கைகளையும் உடையவர்.

எண்ணில் பல்கோடி சேவடி முடிகள்
எண்ணில் பல்கோடி திண்டோள்கள்
எண்ணில் பல்கோடி திருவுருநாமம்
ஏர்கொண் முக்கண் முகஇயல்பும்
எண்ணில் பல்கோடி எல்லைக்கு அப்பாலாம்
நின்றைஞ்ஞாற்று அந்தணர் ஏத்தும்
எண்ணில் பல்கோடி குணத்தரேர்வீழி
யிவர் நம்மை யாளுடையாரே

திருவீழிமிழலை — திருவிசைப்பா

மகாசதாசிவரது 25 முக 50 கைகளுடன் சுதை வடிவில் காணப்படும் இடங்கள்.

3. 2. 7 1. மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயிலில் அங்கயற்கண்ணம்மையின் கிழக்கு முதல் கோபுரம் மேற்கு முகத் தென் பக்கம் உள்ளது. 25 திருமுகங்கள் 9, 7, 5, 3, 1 என்ற வரிசையில் உள்ளது. திருக்கைகள் 50-ல் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை,

3. 2. 7. 2. சோணாட்டு வைத்தீசுவரன் கோயில் மேலைக் கோபுரத் தென்பக்கம் 25 தலைகள் 50 கைகளுடன் சுதை வடிவில் உள்ளது.

3. 2 7. 3, தில்லை நடராசர் கோயில் தெண்கோபுரத் தென் பக்கம் இம்மகாசதசிவ வடிவம் சுதையில் உள்ளது.

## அடிக்குறிப்புகள்.

1, 2. கொரடாச்சேரி சிவத்திரு வாலையானந்த சுவாமிகள் எழுதியுள்ள 'சைவானுட்டான விதி' என்ற நூலில் சதாசிவத்தியானம் என்ற தலைப்பில்வருவது.

3. இந்த ஆய்வு நூலில் ஆகமங்களை உறுப்புகளாகக் கொண்ட சிவவடிவம் என்ற தலைப்பில் காண்க.

3. அ. The Culture and Art of India, page 185
4. Manifetation of Shiva Page 195
5. " " " 181
6. " " " 208
7. " " " 175
8. அகோர சிவாச்சாரியார் சிவபூசாபத்ததி கோனேரி ராசபுரம் உமாமகேசுவரர் கோயில் கொடி மண்டபத்தின் மேற்பார்வையில் இவைந்தின் ஓவியங்கள் காணப்படுகின்றன.
9. தஞ்சை சரசுவதிமகால் சீதத்துவநிதி முதல் பாகம் பக்கம்–232
10. இளம்பருதி நூறாணிரங்கோடி போல வளர்ந்தனைய தெய்வீக வடிவம். கந்தர் கலிவெண்பா வரி -

## 3. 3. மகேசுவர வடிவங்கள்

சதாசிவ வடிவத்தின் ஐந்து திருமுகங்கள் தோறும் ஐந்து ஐந்தாக இருபத்தைந்து வடிவங்கள் தோன்றி மகேசுவர வடிவங்கள் சதாசிவ ஐந்து முகங்களில் இருந்து 25 வடிவத்தோற்றம் நேர்முகமாக சிவத்திரு ஈசானசிவாச்சாரிய சுவாமிகள் சிவத்திரு இராமநாத சிவச்சாரியர் அவர்கள் கூறக்கேட்டுக் குறிக்கப் பெற்றது. என விளங்கிவருகின்றன. இவ்வடிவங்களின் பெயர்கள் வரிசைகள் ஆகமங்களில் ஒன்றுக் கொன்று சிறிது வேறுபடும். இவ்வடிவப் பெயர்கள்.

### 3. 3. 1. 1. உச்சிமுகம் ஈசானத்தில்

1. சோமாஸ்கந்தர்
2. ஆடல்வல்லான் (நடராசர்)
3. ஏறமர்கடவுள் (இடபாரூடர்)
4. மணவழகர் (கலியாணசுந்தரர்)
5. பிறைசூடியபெம்மான் (சந்திரசேகரர்)

## 3. 3. 1. 2 கிழக்குமுகம் தத்புருடத்தில்

1. பிச்சத்தேவர் (பிட்சாடனர்)
2. காமனை எரித்தோன் (காமாரி)
3. காலனைக் காய்ந்தவர் (காலாரி)
4. சலந்தரனை அழித்தோன் (சலந்தராரி)
5. முப்புரமெரித்தோன் (திரிபுராரி)

## 3. 3. 1. 3 தெற்குமுகம் அகோரத்தில்

1. யானைமுக அரக்கனை அழித்தோன் (கசாசூரசம்காரர்
2. வீரபத்திரர்
3. ஆலமர்செல்வன் (தெட்சிணாமூர்த்தி)
4. விடமுண்டகண்டன் (நீலகண்டன்)
5. வேட்டுருவர் (கிராதமூர்த்தி)

## 3. 3. 1. 4 வடக்குமுக வாமதேவத்தில்

1. கங்காளர்
2. சக்கரதானர்
3. கஜானனர் கசமுகாஅனுக்கிரகர்
4. சண்டேசா அனுக்கிரகர்
5. ஒற்றைக்கால்பரமன் (ஏகபாதர்)

## 3. 3. 1. 5. மேற்குமுகம் சத்யோசாதத்தில்

1. இலிங்கோத்பவர்
2. சுகாசனர்

3. உமாமகேசர்

4. மாலொருபாகன் (சங்கரநாராயணர்)

5. மாதொருபாகன் (அர்த்தநாரீசுவரர்)

மேற்கண்ட வடிவங்களில் சிலவற்றைவிட்டு திரிமூர்த்தி, சரபமூர்த்தி, பைரவர், கங்காதரர் என்ற நான்கும் சேர்த்துக் கூறப்படும்.

## 3. 3. 2. கச்சியப்பசிவாச்சாரியார் இயற்றியுள்ள கந்த புராணம் தட்சகாண்டத்தில் கூறப்பட்டுள்ள மகேஸ்வர வடிவங்கள்:

1 சிவலிங்கமூர்த்தி
2 சோமாஸ்கந்தர்
3 ஏகபாதர்
4 வேள்விநாயகர்
5 இடபாருடர்
6 சந்திரசேகரர்
7 நடராசர்
8 உக்கிரர்
9 அர்த்தநாரீசுவரர்
10 விடாபகரணர்
11 சலந்தராரி
12 இலகுளீசர்
13 சக்கரதானர்
14 அந்தகாசுரகரணர்
15 திரிபுராந்தகர்
16 கங்காதரர்
17 ஆபத்சகாயர்
18 சோதிலிங்கேசுவரர்
19 மச்சசங்காரர்
20 கூர்மசங்காரர்
21 வராகசங்காரர்
22 நரசிங்கசங்காரர்
23 கங்காளர்
24 காலபைரவர்
25 பிட்சாடனர்

இவற்றுள் 1, 8, 10, 17, 19, 20, 21, 22, 23, 24 இவை முன் கூறப்பட்ட வரிசையில் இல்லாதவை.

## 3. 3. 3. திருதெட்சிணகுடித்வீப சேத்திரமகாத்மயம் நூலில் மகேவர வடிவங்கள்

3.3 3. தென்குடித் திட்டை — வடமொழித் தல புராணத்தில் சோணாட்டுத் தேவாரத் தலமான தென்குடித் திட்டையின் வடமொழித் தல புராணமான திருதெட்சிணகுடீத்வீப சேத்திர மகாத்மயம்' என்னும் நூலில் இந்த மகேசுவர வடிவங்கள் அடியில் கண்டவாறு ஒவ்வொன்றுக்கும் வேண்டுவன நல்கும் அருட்சத்திகளுடன் குறிக்கப் பெற்றுள்ளன.

| | | |
|---|---|---|
| 1 | இலிங்கோத்பவமூர்த்தி | — மோட்சப்ரதாயினி |
| 2 | திரிமூர்த்தி | — வம்சவிருத்திப்ரதாயினி |
| 3 | கலியாணசுந்தரமூர்த்தி | — சர்வதாமங்களப்ரதாயினி |
| 4 | உமாசகாயமூர்த்தி | — பார்யாசௌக்யப்ரதாயினி |
| 5 | சுகாசினமூர்த்தி | — தர்மார்த்தகாமமோட்சப்ரதாயினி |
| 6 | கங்காதரமூர்த்தி | — சர்வபாவப்ரணாசினி |
| 7 | நடேசமூர்த்தி | — சம்பத்யோகப்ரதாயினி |
| 8 | சண்டேசா அனுக்கிரகமூர்த்தி | — மகாபாதகனாசினி |
| 9 | இடபவாகனமூர்த்தி | — தர்மசித்திப்பிரதாயினி |
| 10 | நீலகண்டமூர்த்தி | — விடதோடப்ரணாசினி |
| 11 | அரிஅரமூர்த்தி | — தர்மார்த்ததாயினி |
| 12 | ஏகபாதமூர்த்தி | — மகாரோகவிநாசினி |
| 13 | அர்த்தநாரீசுவரமூர்த்தி | — சர்வசவுக்யப்ரதாயினி |
| 14 | தெட்சணாமூர்த்தி | — மேதாப்ரக்ஞப்ரதாயினி |
| 15 | சோமாஸ்கந்தமூர்த்தி | — புத்திரசௌபாக்யப்ரதாயினி |
| 16 | சந்திரமௌலீசுவரமூர்த்தி | — தனதான்யப்ரதாயினி |
| 17 | சோமாவிநாயகமூர்த்தி | — சர்வசித்திப்ரதாயினி |
| 18 | வீரபத்ரமூர்த்தி | — சத்ருவித்வேட் (ஷ்) டவிநாசினி |

19 காலசம்காரமூர்த்தி — சர்வாரிட் (ஷ்) டவிந
20 காமாந்தகமூர்த்தி — யோகவிக்னவிநாசினி
21 கசாந்தகமூர்த்தி — பராபிசாரசமனி
22 திரிபுராசம்காரமூர்த்தி — சன்சராமிருத்யுவி நாசினி
23 பிட்சாடனமூர்த்தி — யோகி (ஷி) த்தத்ப்ருந் தவிமோசினி
24 சலந்தரசம்காரமூர்த்தி — துட்டவிநாசினி
25 சரபமூர்த்தி — அரிப்ரணாசினி
26 பைரவமூர்த்தி — ரட்சாகரி

இவ்வரிசையில் ஒன்று அதிகமாய் குறிக்கப் பெற்றுள்ளது.

## 3. 3. 4. காச்யப சிற்ப சாத்திரம்-சிற்பரத்தினம்

இவ்விரு நூல்களிலும் குறைவாகக்கூறப்பட்டுள்ள பதினெட்டு வடிவங்கள்

1 சுகாசனர்
2 சோமாஸ்கந்தர்
3 சந்திரசேகரர்
4 இடபவாகனம்
5 நிருத்தமூர்த்தி
6 கங்காதரமூர்த்தி
7 திரிபுராந்தகமூர்த்தி
8 கலியாணசுந்தரமூர்த்தி
9 அர்த்தநாரீசுவரமூர்த்தி
10 கசசம்காரமூர்த்தி



சோமாஸ்கந்தர் ''நம் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்''
குடந்தை ஆதிகும்பேசுவரர் திருக்கோயில்

19 காலசம்காரமூர்த்தி — சர்வாரிட் (ஷ்)டவிந

20 காமாந்தகமூர்த்தி — யோகவிக்னவிநாசினி

21 கசாந்தகமூர்த்தி — பராபிசாரசமனி

22 திரிபுராசம்காரமூர்த்தி — சன்சராமிருத்யுவிநாசினி

23 பிட்சாடனமூர்த்தி — யோகி (ஷி) த்தத்ப்ருந்தவிமோசினி

24 சலந்தரசம்காரமூர்த்தி — துட்டவிநாசினி

25 சரபமூர்த்தி — அரிப்ரணாசினி

26 பைரவமூர்த்தி — ரட்சாகரி

இவ்வரிசையில் ஒன்று அதிகமாய் குறிக்கப் பெற்றுள்ளது.

## 3. 3. 4. காச்யப சிற்ப சாத்திரம்-சிற்பரத்தினம்

இவ்விரு நூல்களிலும் குறைவாகக்கூறப்பட்டுள்ள பதினெட்டு வடிவங்கள்

1 சுகாசனர்
2 சோமாஸ்கந்தர்
3 சந்திரசேகரர்
4 இடபவாகனம்
5 நிருத்தமூர்த்தி
6 கங்காதரமூர்த்தி
7 திரிபுராந்தகமூர்த்தி
8 கலியாணசுந்தரமூர்த்தி
9 அர்த்தநாரீசுவரமூர்த்தி
10 கசசம்காரமூர்த்தி



சோமாஸ்கந்தர் ''நம் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்''
குடந்தை ஆதிகும்பேசுவரர் திருக்கோயில்

11 பாசுபதமூர்த்தி

12 கங்காளமூர்த்தி

13 அரி அரார்த்தமூர்த்தி

14 பிட்சாடணமூர்த்தி

15 சண்டேசானுக்கிரகமூர்த்தி

16 தெட்சிணாமூர்த்தி

17 காலசம்காரமூர்த்தி

18 இலிங்கோத்பவமூர்த்தி

இவ்வரிசையில் வரும் (1) சுகாசனர், (10) கசசம்காரர் இவ்விரண்டையும் தவிர்த்து ஏனைய பதினாறு வடிவங்களை (சோடசம்) சகளைதிகாரம் என்னும் சிற்பநூல் குறிப்பிடுகிறது

சிவபராக்கிரம் என்னும் நூலில் இதுவரை கூறப்பட்ட வரிசைகளில் வருவதுடன் இன்னும் பல சேர்த்து அறுபத்து நான்கு வடிவங்களைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

## 3.3.5 மாகேசுவர இருபத்து ஐந்து வடிவ விளக்கம்

இனி மாகேசுவர வடிவங்கள் இருபத்து ஐந்தனுடைய வடிவச் சிறப்புக்களைக் காண்போம்.

### 3.3.5.1 சோமாஸ்கந்தர்

சிவாலயங்களில் மூலலிங்கமூர்த்தியின் பிரதிவடிவாய் விழாக்காலங்களில் தேரூர்ந்து வலம் வரும் சிறப்புச் சிவவடிவாய்த் திகழ்வது சோமாஸ்கந்தர் வடிவம்.

ஒரே இருக்கையில் சிவம்—சக்தி—கந்தன் ஒருங்கிருந்து அருளும் உண்மை அறிவானந்த (சச்சிதானந்த) வடிவு இதுவாகும்.

சச்சிதானந்தம் எனில்;

சத்து சித்து ஆனந்தம் சச்சிதானந்தம்.

அநாதிநித்த மலபந்த ஆன்மாக்களைப் போல ஆக்கக் கேடுகளின்றி நிலைபேறுடைய அநாதி சுத்த முத்தத் தன்மையுடைமையால் 'சத்து' எனவும்,

ஆன்மாக்களிடத்தில் வியஞ்சகமாய் நின்று உணர்த்துமாறு போல் தனக்கோர் வியஞ்சகம் வேண்டாது விளங்கியும் விளக்கம் செய்தும் இயற்கை உணர்வினனாய் நிற்றலின் 'சித்து' எனவும்,

மலபோதத்தால் ஆன்மாக்கள் மலைவுற்றுச் சிற்றறிவால் அனுபவிக்கும் சிற்றின்பங்கள் போலாது அன்னோர்க்கு முத்தியின்கண் பேரின்பமளிக்கும் வரம்பில் இன்பம் உடையவனாய் நிற்றலின் ஆனந்தம் எனவும் பொருள்படுகிறது.[1]

மற்றும் சைவசாதனங்களுள் முதன்மையான திருவைந்தெழுத்து வகைகளுள் 'சிவயசிவ' என்னும் காரண பஞ்சாக்கர வடிவாயும் திகழ்வது இவ்வடிவம்.

| 1 | 3 | 2 |
|---|---|---|
| ஸ | கந்தர் | உமா |
| உண்மை | மகிழ்ச்சி | அறிவு |
| சத்து | ஆனந்தம் | சித்து (சச்சிதானந்தம்) |
| இறை | உயிர் | சத்தி |
| சிவ | ய | சிவ |
| பகல் | மாலை | இரவு |

இவ்வாறு இறைவன் இறைவி நடுவில் கந்தன் இருக்கும் இம்மூவுருவின் ஒரு வடிவைச் சிற்பச் சிலையில் மட்டுமின்றி கோயில் அமைப்பு, மலைகளில் சில, ஆறுகளில் கூடுதுறை இவற்றிலும் உருவகம் செய்துள்ளனர் நம் பெரியோர்கள்.[2]

முருகன் கோயில் இருப்பதும், (சிக்கல், திருக்காறாயில்?) (திருக்கருகாவூர், வைத்தீசுவரன் கோயில் போன்ற அமைப்பு) இவ்வடிவைக் குறிக்கும். இவ்வடிவக் கடவுளை வழிபட நன் மக்கட்பேறு உண்டாகும்.

இதனால் இதன் அருட்சத்தியைப்'' புத்திரசௌபாக்கியப் ரதாயினி'' என்று குறிப்பிடப்படுகிறது.

இவ்வாறு சிவாலயங்களில் சிறப்பிடம் பெற்று விளங்கும் இச்சோமாஸ்கந்தர் வடிவம் மேலும் சிறப்பாக ஏழு இடங்களில் (சப்தவிடங்கத் தலங்களில்) இருந்தாடும் அழகராக விளங்குகிறது.

1 திருவாரூர்

2 திருநள்ளாறு

3 திருநாகை

4 திருக்காறாயில்

5 திருக்கோளிலி

6 திருவாய்மூர்

7 திருமறைக்காடு

இவவேழு தலங்களில் மிகவும் சிறப்புற்று விளங்குவது திருவாரூரில் இருக்கும் இருந்தாடும் அழகரும் வள்ளல் வேந்தருமான தியாகராசர். இதன் பழமையைத்திருநாவுக்கரசர்

''மல்கு தில்லை, மணி திகழும் அம்பலத்தே
மன்னிக்கூத்தை
ஆடுவான்புகுவதற்கு முன்னோ பின்னோ
அணியாரூர் கோயிலாக் கொண்ட நாளே'' [3]

என்றும், மற்றும் இவர் திருமாலின் இதயத் தாமரையில் இருந்து அவரால் முதலில் பூசிக்கப் பெற்றவர் என்பதை,

''பையஞ்சுடர்விடு நாகப்பள்ளி கொள்வான் [4]
உள்ளத்தாலும்

என்று குறிப்பிடுகிறார். இவ்வாறு திருமாலின் இதயக்கோவிலில் இருந்த தியாக ராசராகிய இச் சோமாஸ்கந்தரை இந்திரன் பெற்று பூசித்தான். பின் இந்தப் பெருமானுடன் இன்னும் ஆறு வடிவங்களைச்சேர்த்து முசுகுந்தச் சோழனிடம் அளிக்க இவன் இவற்றைச் சோணாட்டில் திருவாரூர் முதலான ஏழு ஊர்களில் வைத்து சிறப்பு செய்தான் எனப்பழைய வரலாறுகள் இயம்பும்.

இவ்வாறு சிவம் சக்தி இடையில் கந்தன் மூன்றும் ஒருங்கு சேர்த்த வடிவில் சிறுத்தொண்ட நாயனாருக்குச் சிவபிரான் காட்சி தந்த சிறப்பை,

" செய்ய மேனிக் கருங்குஞ்சிச் செழுங்கஞ்
சுகத்துப் பயிரவர்யாம்

உய்ய அமுது செய்யாதே ஒளித்த
தெங்கே ? எனத் தேடி

மையல்கொண்டு புறத்தணைய மறைந்த
அவர்தாம் மலைபயந்த

தையலோடுஞ் சரவணத்துத் தனய
ரோடுஞ் தாம் அணைவார் " 5

அவர்தாம் — சிவபிரான்

மலைபயந்ததையல் — உமாதேவி

சரவணத்துத்தனயர் — கந்தன்
எனச் சேக்கிழாரடிகள் கூறுகிறார்.

## 3. 3. 5. 2. ஆடல்வல்லான் [நடராசர்]

பரதகண்டத்தில் அதிலும் சிறப்பாகத் தமிழ்நாட்டில் விளங்கும் சிவ வடிவங்களில் உலக அறிஞர்கள் அனைவரையும் தத்துவ ஆய்வில் காணச் செய்வன ஒன்று சிவலிங்கம். மற்றது ஆடல்வல்லான் வடிவம்.

" குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில்
குமிண் சிரிப்பும்



திருவாலங்காட்டு - நடராசர்

பனித்த சடையும் பவளம் போல் மேனியில்
பால் வெண்ணீறும்

இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும்
காணப்பெற்றால்

மனித்தப் பிறவியும் வேண்டுவதே
இந்த மாநிலத்தே ''

என்று இப்பெருமானது தோற்றத்தையும் இன்னும் இப்பெருமானது தோற்றக் குறிப்பு தன்னடியார்களை நோக்கி ''என்று வந்தாய்'' என்று அழைப்பதுபோல உள்ளது என்றும் மற்றும் இப்பெருமானது திருமேனியின் ஒவ்வொரு உறுப்புகளின் அழகுச் சிறப்பை,

'' சிற்றம்பலத்து அரன் ஆடல்கண்டால் பிளை
யுடல் கண்களால் பின்னைப் பேய்த்தொண்டர்
காண்பதென்னே ? '' [8] என்று ஆடற்சிறப்பையும்

திருவடி, உடுத்த துகில், உந்தியின் மேல் அசைத்த கச்சு, கண்டத்து இலங்கும் எயிறு, சிரித்த முகம், நெற்றியிற்கண், இவற்றைக் ''கண்ட கண் கொண்டு மற்று இனிக் காண்பதென்னே ?'' என்றெல்லாம் சிறப்பிக்கின்றது.

மற்றும் எடுத்தியம்பும் வடமொழி தென்மொழி நூல்கள் பலப்பலவாகும்.

சிற்ப நூல்களில் இவ்வடிவச் சிறப்புப் பல்வகை ஆடல் தோற்றம் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

இவரது ஆடல் வடிவங்களில் இடது கால் தூக்கியாடும் வடிவம்

வலது கால் '' ''

காலை மேல் நோக்கி ஆடும் வடிவம்

நான்கு கை, ஆறுகை, எட்டுகை, பத்துகை, பதினாறு கைகளை உடைய வடிவங்கள் மற்றும் 108 வகைத்



மதுரை நந்திமண்டபத்தில் இடபாருடர், (ஏகபாதர்)

தாண்டவம் முதலிய கோலங்களில் உள்ளன. ஆயிரம் திருக்கைகளை உடைய நடராச வடிவத்தையும், உமாபதி சிவாசாரியாரின் குச்சிதாங்கிரிஸ்தவம்' என்னும் வடமொழி நூல் குறிப்பிடுகிறது. நடராசருக்குரிய தியான சுலோகங்களுள் ஒன்று இரண்டாயிரம் திருக்கரங்களைப் பற்றிக் கூறுகிறது.

இவற்றையெல்லாம் தற்காலத்தில் பல தமிழ், வடமொழி ஆங்கிலம் முதலிய நூல்களில் ஆய்வுமுறையில் வெளிவந்துள்ள நூல்களில் இருந்து உய்த்துணரலாம்.

இவ்வாடுங்கடவுளை வழிபட, சிவானந்த வெள்ளம் பெருகும். இவரது அருட்சத்தி 'சம்பத்யோகப்ரதாயினி' ஆகும்.

சிதம்பர நகர வித்யா காண்டம் நடராசரின் அருட்சத்தி 'ஸர்வாதம் யோகப்ரதாயினி' என்று கூறும்.

தமிழோடு இசைப்பாடல் மறந்தறியா திருநாவுக்கரையர் திருக்கயிலையைக் காண வேண்டி இமயம் வரை சென்றார். அப்போது சிவபிரான் இத்திருநாவுக்கரயரைக் கொண்டு "மன்னுதிந்தமிழ் புவியின் மேல் பின்னையும் வழுத்த" திரு உள்ளங் கொண்டார். அதனால் ஆங்கோர் பொய்கையினில் அவரை மூழ்கவைத்துத் தமிழ்நாட்டுத் திருவையாற்றினில் ஓர் வாவியினில் எழச்செய்தார். அப்போது ஐயாற்று எம்பிரான் நாவலரசுக்குத்திருக்கயிலைக்காட்சியை அளித்து அருள்புரிந்தார். இக்காட்சிச்சிறப்பில் சிவபிரான் அவருக்குக்காட்டிய கோலத்தை

"வெள்ளி வெற்பின்மேல் மரகதக் கொடியுடன் விளங்கும்
தெள்ளா பேரொளிப் பவளவெற் பெனஇடப் பாகம்
கொள்ளு மாமலை யாளுடன் கூடவீற் றிருந்த
வள்ள லாரைமுன் கண்டனர் வாக்கின் மன்னவனார்" 9

எனக்காட்டுகின்றார் சேக்கிழார் அடிகள். இங்கு வெள்ளி வெற்பு-காளை ஊர்தி. மரகதக்கொடி-உமையம்மை, பவளவெற்பு-வண்ணராகிய சிவபிரான். காளை ஊர்தியில் உமையம்மையுடன்



கல்யாணசுந்தரர்

சிவபிரான் இருந்து காட்சி தந்தார். இவ்வாறு அடியவர்களுக்கு அருள்புரிய சிவபிரான் காளை ஊர்தியில் ஏறி வருவதை அடியவர்கள் திறத்தில் காணலாகும். இவ்வாறு காளை (இடபம்) ஊர்தியாகத் திருமாலும், அறக்கடவுளும் வெவ்வேறு சமயங்களில் அமைந்துள்ளனர்.

திருமாலே காளையாக (இடபமாக) இருந்து சிவபிரானைத் தாங்கும் தன்மையை மணிவாசகர்,

"கடகரியும் பரிமாவும் தேருமுகந் தேறாதே
யிடபமுகந் தேறியவா றெனக்கறிய வியம்பேடி
தடமதில்க ளவைமூன்றுந் தழலெரித்த வந்நாளில்
இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ" 10

சதாசிவ மூர்த்தியின் உச்சிமுகமான ஈசானத்தில் இவ் ஏறமர் கடவுள் தோற்றமாகும்.

காளை மீதமர்ந்து அருளும் இவரை வழிபட அறம்பெருகும். இவரது அருட்சத்தியை 'தர்மசித்திப்பிரதாயினி' என்று உரைக்கப்படுகிறது.

## 3. 3. 5. 4 பிறைசூடியபெம்மான் (சந்திரசேகரர்)

தக்கனது சாபத்தால் சந்திரன் கலைகள் குறைய அவன் சிவபிரானை அடைந்தான். அவர் சந்திரனைத் தம் சடையில் சூடி மீண்டும் வளரச் செய்தார். இதனால் பிறைசூடி, சந்திரசேகரன் எனப்பெயர் வந்தது. இக்கோலம் கொண்ட இவர் ஈசானத்தில் தோற்றம்.

இக்கோல வடிவைச் சுந்தரர் தம் முதற்பதிகத்துள் 'பித்தா! பிறைசூடி! பெருமானே! என விளிக்கின்றார். 11

இம்மூர்த்தியின் அமைப்பால்:-

1. உமாசந்திரசேகரர்: இடப்பால் உமையாகிய பார்வதியுடன் நின்ற கோலம்.

2. ஆலிங்கன சந்திரசேகரர் : உமையின் அருகணைத்து நிற்கும் கோலம்.

3. கேவல சந்திரசேகரர்: உமை அருகில் இன்றி தனித்து நிற்கும் கோலம்.

இவ்வாறு மூன்று வகைப்படும்.

மற்றும் ஆலிங்கன சந்திரசேகரரை அமைக்கும் விதத்தில் மூன்று விதமாகக் கொள்ளப்படுகிறது.

இம்மூர்த்தி விசாலமான முகமும், கண்களும், அழகிய தோற்றம், நான்கு கைகளில் அபயம், வாதம், மான்மழு, திருமுடியில் பிறைமதி இவற்றுடன் தாமரை இருக்கையில் இடப்பால் உமையுடன் நின்ற கோலத்தில் காணப்படுவதாகும்.

இக்கடவுளை வழிபடப் பொருள் செல்வமும், தானியப் பெருக்கமும் உண்டாகும். இவரது அருட்சத்தி 'தனதான்ய பிரதாயினி' எனத் தென்குடித்திட்டை வடமொழித் தல புராணத்தில் காணப்படுகிறது.

### 3.3.5.5 மணவழகர் (கலியாணசுந்தரர்)

இம்மண்ணுலகில் மக்கள் நாம் வேண்டியதை வேண்டியாங்கு பெற்று வாழ அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கும் வேண்டப்படுதாகும். இதற்கு மனைத்தக்க மாண்புடைய மனைவியுடன் இல்லறம் நடத்துவதே வேண்டப்படுவதாகும். இதனை அளிக்க வல்ல கடவுளாய் இருக்கும் சிவபிரானது அருட் கோலமே மணவழகர் கலியாண சுந்தரர் கோலம் ஆகும். இம்மனை வாழ்க்கை இல்லையேல் உலகம் கலங்கி நிற்கும். ஆதலால் திருமணம் புரிவது கொள்ளப் பட் வேண்டிய தென்பதைக் காட்டவே பிறை மௌலிப் பெருமான் மலை மகளாகிய உமையை உலகறியத்திருமணம் செய்து கொண்டு காட்டினார் என்பதை மணிவாசகர்,

" மலையரையன் பொற்பாவை வாணுதலாள்
பெண்டிருவை
உலகறியத் தீவேட்டா னென்னுமது என்னேடி
உலகறியத் தீவேளா தொழிந்தனனேல் உலகனைத்தும்
கலைநவின்ற பொருள்களெல்லாம் கலங்கிடுங்காண்
சாழலோ[12]

என்கிறார்.

ஈசானத்தில் தோன்றிய ஐந்தில் இவ்வடிவம் ஒன்று. இவ்வடிவ அமைப்புத் தமிழ் நாட்டுக் கோயில்களில் பலவற்றில் காணப்படுவதாகும். இதில் இருவகை :

ஒன்று சிவபிரான் நான்கு திருக்கைகளுடன் வலப்பால் உமை மணக்கோலத்தில் நிற்க அருகில் வலப்பக்கம் திருமால் இலக்குமியுடன் இவர்கட்கு முன்னால் நான்முகன் தீவேட்க இருக்கும் அமைப்பு.

மற்றொன்று சிவபிரான் இருகைகளுடன் அல்லது நான்கு கைகளுடன் வலப்பால் உமை மணக்கோலத்தில் இருக்கக் காட்சி தரும் வடிவம்.

தமிழ்நாட்டில் திருமணஞ்சேரி, திருவேள்விக்குடி, திருவீழிமிழலை, பந்தணைநல்லூர் முதலிய தலங்களில் காணலாம். மற்றும் பல அருங்காட்சி அகங்களிலும் இருப்பதைக் காணலாம். தஞ்சை அருங்காட்சியகத்தில் இருக்கும் திருவெண்காட்டு செப்பு வடிவம் காணத்தக்கதாகும்.

மற்றும் பல சிவாலயத்தில் சிவபிரான் (மூலலிங்க) அம்பிகை இவ்விரு தெய்வங்களின் கோயில் அமைப்பில் சிவபிரான் கோயிலின் வலப்பால் அம்பிகையின் கோயில் கீழ்நோக்கி இருப்பது மணக்கோலத்தைக் காட்டுவதாகும் என்பர்.

இராமேஸ்சுரம், மதுரை, திருவலஞ்சுழி, திருவிடைமருதூர் திருச்சோற்றுத்துறை, திருப்பாலைத்துறை, பெருவேளூர் முதலிய தலங்கள் சிவபிரானது மணக்கோலத்தைக் காட்டி நிற்பனவாகும்.

## 3. 3. 5. 6. பிச்சை தேவர் [பிட்சாடனர்]

சிவபிரானை முழு முதல் பொருளாய்க் கொள்ளாது கன்மப் பிரமவாதிகளாயிருந்த தாருகாவனத்து முனிவர்களுக்கு நல்லுணர்வு உண்டாக்க சிவபிரான் திகம்பர வடிவுடன் கையில் பிரமனது மண்டையோட்டை ஏந்தி அவர்கள் இல்லம் தோறும் பிச்சை எடுக்க எழுந்தருளிய கோலம். இது உமையற்ற கோலம். அதாவது மகேசுவர வடிவங்களில் உமையோடும் உமையின்றியும் காணப்படும் கோலம் என இருவகை சோமாஸ்கந்தர், நடராசர், சந்திரசேகரர், மணவழகர் ஏறமர்ச் செல்வர் இவையும் மற்றும் பலவும் உமையோடு இருப்பன, பிட்சாடனர், காமாரி, வீரபத்திரர், ஏகபாதர் மற்றும் சில உமையற்ற சிவவடிவங்கள் ஆகும்.



மதுரை நந்திமண்டபத்தில் காமாரி (காமாதகனுமூர்த்தி)

இப்பிட்சாடனக் கோலச் சிறப்பைக் காஞ்சிப் புராணம் காட்டுவது.

“ அடியிற் றொடுத்த பாதுகையும்
அசைந்த நடையும் இசைமிடறும்
வடியிற் சிறப்ப நடந்தருளி
மூழைஏந்தி மருங்கணைந்த
தொடியிற் பொலிதோள் முனிமகளிர்
சுரமங்கையரை மயல்பட்டில்
படியிட் டெழுதாப் பேரழகாற்
பலிதேர் பகவன் திருடருவர்”

தத்புருடத்தில் தோற்றமான இக்கடவுள் வடிவம் வழுவூரில் சிறப்பாகவும் மற்றும் திருவையாறு, திருவிடைமருதூர் முதலிய தலங்களிலும், தில்லை நாற்கோபுரமொன்றில் சிலை வடிவாயும் காணப்படுகிறது.

இவரது அருட்சத்தி ‘யோஷித்பரந்த விமோகினி’ ஆகும். (தென்குடித்திட்டை தலபுராணம்)

## 3. 3. 5. 7. காமாரி (காமனை எரித்தமூர்த்தி)

உமையற்ற மகேசுவர வடிவங்களில் ஒன்றான இது. தத்புருடத்தில் தோற்றம் சிவபிரான் உமையம்மையைப் பிரிந்து சனகாதி நால்வருக்கு அறமுறைத்து நிட்டையில் நெடிது காலம் இருந்தார். அப்போது தேவர்களது தூண்டுதலால் காமதேவனாகிய மன்மதன் மலர் அம்புகளைச் சிவபிரான்மீது பொழிந்தான். அதுபோது அவனை எரிவிழியால் நோக்கக் காமன் சாம்பரானான். இவ்வரலாறு நிகழ்ந்த இடம் அட்டவீரட்டத் தலங்களில் ஒன்றான திருக்குறுக்கையாகிய சோணாட்டுத் தேவாரத்தலம்.

இவரை வழிபட மன்மத பீடை நீங்கும். இதனை அருளும் இச்சத்தி ‘மோகவிக்னா விநாசினி’ எனத் தென்குடித் திட்டை வடமொழித் தலபுராணத்தில் காணப்படுகிறது.



காலசம் ஹாரமூர்த்தி திருச்செங்காட்டங்குடி

இக்காமாரியின் செப்புவடிவம் திருக்குறுக்கைவீராட்டானத்தில் நான்கு திருக்கரங்களுடன் அமர்ந்த கோலத்தில் யோகீசுவரர் என்ற பெயருடன் உள்ளது.

மற்றும் மதுரை சொக்கநாதர் சந்நதி நந்தி மண்டபத்தில் நான்கு திருக்கரம் யோகாசனம் அமைப்பில் காணத்தக்கது.

## 3. 3. 5. 8 காலாரி

காலசம்காரர், காலாந்தகர் என்றெல்லாம் அழைக்கப்படும் இச்சிவவடிவம் சிவத்தொண்டன் மார்க்கண்டேயர் (என்றும் பதினாறு) வரலாற்றின் மூலம் யாவரும் அறிந்ததாகும். இவர் சிறப்புடன் விளங்கும் தலம் சோணாட்டுத் திருக்கடவூர். இவ்வடிவ அமைப்பு; தாமரை இருக்கையில் நின்ற நிலை. வலக்கால் இயல்பாகத் தாமரை இருக்கையில் படிந்திருக்க இடக்கால் சற்றுத் தூக்கிக் காலனுடைய மார்பில் வைக்கப்பட்டிருக்கும். கோரைப் பற்களுடைய திருமுகம். சடைமுடி, முக்கண், நான்கு கைகள் அல்லது எட்டுக் கைகள், இருவித அமைப்பிலும் காணப்படும். இவருக்கே சிறப்பிடமான திருக்கடவூரில் நான்கு திருக்கரங்களுடன் இடப்பா அம்மையும், வலப்பால் மார்க்கண்டேயனும் இருக்க இவரது வடிவம் உள்ளது. அடியில் காலன்நான்கு திருக்கரங்களில் உள்ளான்.

எட்டுகைகளாயின் வலதுபுறம் முறையே சூலம், கோடரி, வச்சிரம், கத்தி, இடதுபுறம், குச்சரியக்கை, கேடயம், பாசம், சூசி, அஸ்தம் இப்படியிருக்கும்.

திருக்கடவூரேயன்றி திருச்செங்காட்டங்குடி (சோணாட்டுத் தலம்) யிலும் இவரதுசிலாவடிவம் பொலிவுறக்காணப்படுகிறது. மற்றும் கோயில் கோபுரங்கள் பலவற்றில் சுதைவடிவிலும், சுவர்களில் ஓவியவடிவிலும் காணப்படும்.

இவரை வழிபட, காலனது அச்சம் நீங்கும். 'சர்வாரிட்டவிநாசினி' என்பது இவரது அருட்சத்தியின் பெயர் எனத் தென்குடித் திட்டை வடமொழித் தலபுராணத்தில் உள்ளது.

### 3.3.5.9 சலந்தராரி

"ஆறாம் எதிராத வலியாகிய சலந்தரனை
ஈருவகை செய்தருள் புரிந்தவன்"

சிவபிரானின் வியர்வையில் தோன்றிக் கடல் அரசனால் வளர்க்கப் பெற்று நான்முகனது அருள்பெற்று சலந்தரன் என அழைக்கப் பெற்ற இவன் விண்ணவர் கட்குப் பெரும் ஊறு செய்துவந்தான்.

சிவபிரான் தரையில் காலால் கீறிய சக்கரமொன்று இவன் தலையை அரிந்தது. இவ்வாறு இச்சலந்தரனை அழித்த சிவ வடிவமே சலந்தராரி என்றழைக்கப்பெறுகிறது.

இவ்வடிவம் சிறப்பிடம் பெற்றுத் திகழுமிடம் மேற்கூறிய சலந்தரனை அழித்த இடமான திருவிற்குடி வீரட்டம் என்னும் இடமாகும். நான்கு திருக்கரங்களுடன் நின்ற கோலத்தில் உள்ள இவ்வடிவம் இடக்கை ஒன்றில் சக்கரத்தைத் தாங்கி உள்ளது. இவரை வழிபட பிகுசினம் நீங்கும். இவரது அருட்சத்தி துட்டவிநாசினி எனப்படுகிறது.

### 3. 3. 5. 10. முப்புரமெரித்தோன் (திரிபுராந்தகர்)

திரிபுராரி, திரிபுராந்தகர் என்றெல்லாம் அழைக்கப்பெறும் இச்சிவ வடிவத்தின் சிறப்பிடம் திருவதிகை ஆகும். இங்கும் மற்றும் சில சிவத் தலங்களில் இவரது நின்ற கோல வடிவம் இடப்பாகத்தில் உமாதேவியார் நிற்கத் தோன்றும் வகையில் உள்ளது.

திரிபுராதியர் என்னும் மூன்று அசுரர்களை அழிக்கச் சிவ பிரான் நான்மறைகளும் சக்கரமாக உடைய தேரில் நான்முகன் தேரைச் செலுத்த ஏறிச் சென்றார். மேருமலை வில்லானது. வாசுகி என்னும் பாம்பு நாணாக வில்லில் இருந்தது. திருமால் எய்யும் அம்பாகக்கையில் இருந்தார். இக்கோலத்தில் சென்ற சிவபிரான் அம்மூவர் வாழ்ந்த திரிபுரம் என்னும் கோட்டையைத் தம் சிரிப்பால் எரித்தார்.



திருச்செங்காட்டங்குடியில் திரிபுராந்தகர்

நான்கு திருக்கைகளில் வலப்புறத்துக் கைகளில் மழுவும் அம்பும், இடப்புறத்துக் கைகளில் மானும் வில்லும் தோன்றும். மதுரை ஆயிரக்கால் மண்டபத்துள் முன்பக்க மேல்வரிசையில் இருக்கும் கற்றூண் ஒன்றில் இருக்கும் இவ்வடிவின் கையில் உள்ள அம்பு நுனியில் திருமால் வடிவத்துடன் உள்ளது.

இவ்வடிவில் பத்து பதினாறு கைகளுடன் கூடிய வடிவம் உண்டு. இவரது அருட்சத்தி 'ஜென்ம இராமிருத்யிவிநாசினி ஆகும்.

## 3. 3. 5. 11 கசாரி (கசாஸுரசம்காரமூர்த்தி)

"போர்த்தாய் அங்கோர்
யானையின் ஈருரிதோல்" 13

என்று கூறுகிறார் நாவரசு. இவ்வாறு கூறும் யானைத் தோலை, சிவபிரான் போர்த்துக் கொள்ளக் காரணம்?

தாருகாவனத்து முனிவர்கள் வேள்வியில் ஏவிய யானையை உரித்து அதன் தோலைப் போர்த்திக் கொண்டார். இதனை விளக்கும் தலம் சோணாட்டில் மயிலாடுதுறையில் அருகில் தென்பால் உள்ள 'வழுவூர்' என்னும் தேவார வைப்புத் தலம் இங்கு யானையை உரித்துப்போர்த்துப் போர்க் கோல வடிவில் உள்ள இச்சிவ வடிவம் காணக் கண்களுக்கு விருந்தாகும்.

எட்டு கைகள், வலக்கை மூன்றில் சூலம், கத்தி, உடுக்கை இடக்கைமூன்றில் மண்டைஓடு, கேடயம், பாம்பு. மற்ற இரு வல இடக்கைகள் யானையின் தோலைத் தாங்கியிருக்கிறது இடக்கால் யானைத் தலைமீதும் வலக்கால் மடக்கி தூக்கிய நிலையிலும் இருக்கிறது. இவ்வாறு இவ்வழுவூரில் உலோகச் சிற்பமாக இருக்கிறது.

மற்றும் திருச்செங்காட்டங்குடி முதலிய ஒரு சில இடங்களில் இதன் சிலை வடிவைக் காணலாம். இவரை வழிபட கங்காரம் நீங்கும். இவரது அருட்சத்தி 'பராவி சாரஷ் மணியாகும்.

## 3. 3. 5. 12. வீரபத்திரர்

நான்முகனின் மகன் எனப்படும் தக்கன் உமாதேவியைத் தன் மகளாகப் பெற்று சிவபிரானுக்கே தேவியாகத் தந்த காரணத்தால் அகந்தை மிகவு கொண்டான், இதனால் சிவபிரானை மதியாது யாகம் ஒன்று செய்தால். சிவநிந்தை பலவும் செய்தால் இதனால் சிவபிரான் சினமுற்று இவனை அழித்தார். இதற்கு இவர் கொண்ட வடிவமே 'வீரபத்திரர் ஆகும்.

"கொலையிற் பிழைத்த பிரசா பதியைத்
தலையைத் தடிந்திட்டு தானங்கி யிட்டு
நிலையுல குக்கிவன் வேண்டுமென்றெண்ணித்
தலையை யரிந்திட்டுச் சத்திசெய் தானே"14

இவ்வரலாறு நிகழ்ந்த இடமாகக் கூறப்படும் இடம் திருப்பறியலூர் வீரட்டம் என்னும் தேவாரத்தலம். இது சோணாட்டில் மயிலாடுதுறைக்குக் கிழக்கில் உள்ள செம்பொன்னார் கோயிலுக்கு அருகில் தென்பக்கம் உள்ளது. இங்கு விளங்கும் இவ்வீர பத்திரக்கடவுள் எட்டுத் திருக்கைகளுடன் தக்கன் ஆட்டுத்தலையுடன் கரங்குவித்து அருகில் நிற்கக் காணப்படுகிறது.

## 3. 3. 5. 13. ஆலமர் செல்வர்

தென்முகக்கடவுள், தெட்சணாமூர்த்தி என்றெல்லாம் அழைக்கப்படும் இச்சிவவடிவம் சிவாலயங்களில் கருவறையின் தென்பக்கம் அகரோமுகத்தில் இருப்பதாகும், இது மகேசுவர வடிவர்களில் ஒன்று. கல்லால் மரத்தடியில் அமர்ந்து சனகாதி நால்வழிக்கும் மெய்பொருளை அருளுகிற கடவுள்.

'நூலடைந்த கொள்கையாலேறுண்ணடி கூடுதற்கு
மாலடைந்த நால்வர் கேட்கில் நல்கிய நல்லறத்தை
ஆலடைந்த நிழற்மேவி அருமறை சொன்னதென்னே
சேலடைந்த தண்கழனி சேய்குலூர் மேயலனே'15



தெட்சணாமூர்த்தி — ஆலங்குடி



படம் 27 உபதேச தெட்சணாமூர்த்தி



படம் 28 யோக தெட்சணாமூர்த்தி. ஆய்வுக்கு வரைந்தது

தெட்சணாமூர்த்தி என்ற சொல் ஞானம் என்ற பொருளையே தரும்.

த-க்ஷி-ணம். இவை மூன்றும் பீஜாட்சரங்கள், ஒவ்வொன்றுக்கும் சிறப்பான பொருள் உண்டு. இக்கடவுளுக்கு வடிவங்கள் பலவாகும்.

1 மேதா தெட்சணாமூர்த்தி
2 யோக தெட்சணாமூர்த்தி
3 வீணாதர தெட்சணாமூர்த்தி
4 வீரதெட்சணாமூர்த்தி
5 லட்சுமி தெட்சணாமூர்த்தி
6 இராச தெட்சணாமூர்த்தி
7 கீர்த்தி தெட்சணாமூர்த்தி
8 சக்தி தெட்சணாமூர்த்தி
9 பிரம தெட்சணாமூர்த்தி
10 சுத்த தெட்சணாமூர்த்தி

என்று தெட்சணாமூர்த்தியின் பேதங்கள் ஆகமங்களிலும் மந்திர சாத்திரங்களிலும் பலவாகக் கூறப்பெறுகின்றன.

சிவாலயத்தின் கருவறையில் இருந்தருளும் மூவலிங்கமும் கருவறையில் தென்பக்க கோட்டத்தில் பரிவாரத் தெய்வமாக இருக்கும் இவ் ஆலமர் செல்வனும் ஒரே சிவ வடிவம். என்றும்

மூலவடிவம் — தென்முகத் தெய்வ வடிவம்
அருவம் — உருவம்

உயர்த்தப்படும் தெய்வம் — உணர்த்தும் தெய்வம்[16]

தமிழ்நாட்டுச் சிவாலயங்களில் இக்கடவுளுக்குச் சிறப்பிடமாகத் திகழ்வது தேவாரத் தலமான திரு இரும்பூளை என்னும் ஆலங்குடி.

மற்றும் திருமயிலாடுதுறையில் உள்ள வள்ளலார் கோயிலில் மேதா தெட்சணாமூர்த்தி என்ற பெயருடன் சிறப்புடன் விளங்கும் இக்கடவுள் வீராசனத்தில் முன் வலக்கையில் சூலம், முன் இடக்கையில் சுவடி, பின் இடக்கையில் உடுக்கை, காலடியில் முயலகன், பின்னால் ஊர்தி.

தேவாரத் தலமான திருவையாற்றில் விளங்கும் இத்தென் முகத் தெய்வம் அரிகுரு தெட்சிணாமூர்த்தி என்று சிறப்புடன் விளங்குகிறது. இவரது வலக்கையில் கபாலம் அபயம், இடது கையில் சூலம், சுவடியும் உள்ளன. திருவடியில் ஆமை உள்ளது.

தென்முகத் தெய்வமான இவ்ஆலமர் செல்வன் இவ்வடிவங்களில் "உமையற்ற சிவவடிவங்களில் ஒன்றாய்ப் பேசப்படினும் தலங்கள் சிலவற்றில் உமை இடப்பால் இருக்கும் வடிவங்களும் உள.

சென்னை மாநகருக்கு வடமேற்கில் திருப்பதி செல்லும் வழியில் அறுபது கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள 'சுருட்டப் பள்ளி' என்ற ஊரின் சிவாலயத்தில் இடபக்கம் உமையவள் அமர்திருக்கும் நிலையில் உள்ளது. இங்கு இம்மூர்த்தியான தாம்பத்ய தெட்சணாமூர்த்தி என்றழைக்கின்றனர்.

திருவிடைமருதூர் சித்திரப்பிரகாரம் என்றழைக்கப்படும் திருச்சுற்று விதவிதமான சிற்ப வடிவங்களைக் கொண்டு திகழ்வது அதன் தொடக்க இடமான தென்கிழக்கில் சுதைவடிவில் உள்ள தென்முகத் தெய்வம் தன் இடப்பால் உமையம்மை அருகில் நிற்கும் நிலையில் உள்ளது.

திருவாஞ்சியம் என்னும் தேவாரத்தலக் கருவறை விமானத்தில் தென்பக்கம் முதல் அடுக்கில் சுதைவடிவில் விளங்கும் தென்முக வடிவம் மிகவும் விசித்திரமானது

இது மாதொரு கூறனாக அதாவது வலப்பால் சிவம் - இடப்பால் உமை இவ்வமைப்பில் விளங்குகிறது.

இத்தெய்வத்தின் பல்வித வடிவங்களின் வீணையை சைவத் திசைக்கும் வடிவம் வீணாதர தெட்சிணாமூர்த்தி என்ற பெயருடன் சில தலங்களில் காணப்படுகிறது.



படம் 30 நீல்கண்டர் (விஷாபகரணமூர்த்தி - சயன கோலம்
(ஆந்திர நாட்டுச் சிற்பம் - ஆய்வாளரால் வரையபபட்டது)

ஆனால் திருநெல்வேலி மாவட்டம் கழுகு மலைக் குடைவரைக் கோயிலில் எங்கும் காணப்படாவகையில் இவ்வடிவம் விளங்குகிறது அதாவது

நான்கு கைகள், சடைமுடி, பின் வலக்கையில் மழு பின் இடக்கை சிதைந்துவிட்டது. முன்வலதுஇடது கைகளும் சிதைந்துவிட்டன. இவ்விருகை சிதைந்த கைகளில் இடையில் இசைக்கருவிகளின் ஒன்றான மத்தளம் இருக்கிறது. இவ்வாறு தோற்றத்தில் வேறு படத் தோன்றும் இவ்வடிவங்கள் தல இடத்தில் உள்ளன.

இத்தென்முக ஆலமர் செல்வனை வழிபட நல்லறிவு பெருகும் பிறவித்துயர் நீங்க வீடுபேறு வந்தடையும். இவரது அருட்சத்தி 'மேதாப்ரஞானபிரதாயினி (தென்குடித்திட்டை வடமொழி தலப்புராணம்)

## 3. 3. 5. 14 வேட்டுருப்பரமன் (கிராமமூர்த்தி)

' பாடகஞ்சேர் மெல்லடி நற்பாவையாகும் நீயும்
போய்ப் பார்த்தனது பலத்தைக் காண்பாம்
வேடனாய் வில்வாங்கி நின்றநாளோ '' 18

பாண்டவருள் ஒருவனான அருச்சுனனுக்குப் பாசுபத அம்பு அளிக்கச் சிவபிரான் சிலைவேடராய்ச் சென்றவடிவம்.

நான்கு திருக்கரங்களுடன் வில்லையும் அம்பையும் கொண்டும் இரண்டு கைகளுடன் வில்லையும் அம்பையும் கொண்டும் ஆசு இருவிதங்களின் தமிழ்நாட்டுச் சிவாலயங்களின் காணப்படுகிறது. இதன் சிறப்பு வடிவத்தைச் சிதம்பரத்திற்கு அருகில் உள்ள திருவேட்களம், காரைக்காலுக்கு அருகில் உள்ள திருவேட்டக்குடி, ஆகிய இவ்விரு தலங்களில் சிறப்பு மூர்த்திகளாகக் காணலாம்.

இவரை வழிபடப் பகை நீங்கும், வெற்றி உண்டாகும்.

## 3. 3. 5. 15 நீலகண்டன்

விடமுண்ட கண்டன், விஷாப கரணர் என்றெல்லாம் அழைக்கப்பெறும் இப்பெருமானின் வடிவம் ஒருசில தலங்களில்



திருச்செங்காட்டங்குடி கங்காளர்

அமர்ந்த கோலத்தில் குறிப்பாக மதுரை நந்தி மணப்படத்தில் உள்ளது மற்றும், எங்கும் காணப்படாத வகையில் கிடந்த (சயனக்) கோலத்தில் உள்ளது குறிப்பிடத்தக்கது.

சென்னையிலிருந்து திருப்பதி செல்லும் வழியில் 60 கி. மீட்டர் தூரத்தில் ஆந்திர மாநிலச் சோதனைச் சாவடியை அடுத்துள்ள சுருட்டப்பள்ளி, என்ற சிற்றூரில் உள்ள விடமுண்ட (விஷாபகரண சிவவடிவம்) குறிப்பிடத்தக்கது.

சிவவடிவங்களில் நின்ற, இருந்த கோலமே எங்கும் காணப்படும். ஆனால் கிடந்த (சயன) விடமுண்ட கடவுள் மான் மழு ஏந்திய திருக்கரங்களுடன் வலது மற்றொரு கை தலைக் கடியிலும் இடக்கையை இடுப்பில் வைத்தும் கிடந்த கோலத்தில் உள்ளார். அருகில் அம்மையும் மற்றும் விண்ணவரும் முனிவர்களும் நிற்கின்றனர்.

இந்நீலகண்டச் சிவனாரின் சிலை செப்பு வடிவங்கள் காணப்படும் இடங்கள் சிலவே. ஐரோப்பாவில் கானாஸ் என்ற நகரத்து அருங்காட்சி அகத்தில் 10- ஆம் நூற்றாண்டு ஆந்திர சிற்பம் ஒன்றும் நின்ற நிலையில் இருப்பது மிகவும் குறிப்பிடத்தக்கது.

இக்கடவுளை வழிபட ஆணவமலம் நீங்கும். இவரது அருட்சத்தி 'விஷதோஷந்ரணாசினி' ஆகும்.

## 3. 3. 5. 16 கங்காளமூர்த்தி

திருமால் குறுமாணி (வாமன) வடிவாய் வந்து மாவலியிடம் மூன்றடி மண் கேட்டு அளந்து அவனை அடக்கிய பின் அகந்தை கொண்டு அலைந்தார். அப்போது சிவபிரான் வச்சிரத்தண்டத்தால் வாமனரின் முதுகெலும்பைக் கொண்டு அடக்கினார். இந்தக் கோலமே 'கங்காளர்' எனப்படும். தோற்றத்தில் பார்த்தவுடன் இவ்வடிவம் பிச்சைத்தேவர் (பிட்சாடனர்) போல் தோன்றும்.

இக்கடவுளரின் கற்சிலைவடிவம் ஒன்று தஞ்சை அரண்மனை அருங்காட்சி அகத்திலும் திருச்செங்காட்டங்குடி மற்றும் சில சிவ

தலங்களிலும் இருப்பதைக் காணலாம். இவரை வழிபட நல்ல மனவுறுதி உண்டாகும். இவரது அருட்சக்தி 'சர்வபாவப்ராகினி' ஆகும்.

## 3. 3. 5. 17 சக்ரதானர்

'மாலுக்குச் சக்கரம் என்று அருள் செய்தவன். 'மன்னிய தில்லை' என்பதற்கிணங்க திருமால் சிவபிரானை வழிப்பட்டு 'சக்கரப்'படையைப் பெற்றவரலாற்றை த்தலங்கள் சிலகாட்டும். அவற்றுள் சோழ நாட்டுத் தேவாரத் தலமான திருவீழிமிழலை யும் ஒன்று. சக்கரம் வேண்டி திருமால் இங்கு ஆயிரம் மலர் கொண்டு அருச்சித்த போது மலர் ஒன்று குறைய உடன் திரு மால் தன் விழியை இடந்து அருச்சித்து சக்கரம் பெற்றதாகக் கூறப்படும்.

இவ்வாறு இங்கு சக்கரம் அருளியசக்கரதான மூர்த்தியின் செப்புவடிவம் இத்திருவீழிமிழலையில் மான்மழுவுடன் நான்கு திருக்கரங்களுடன் அம்மை உடனிருக்க அமர்ந்த கோலத்தில் சிவ பிரான் இருக்கிறார். இவரது வலது திருவடியில் சக்கரம் இருக்கிறது. திருமால் இதனைப் பெற்றுக் கொண்டு இரு கைகளை ஏந்தி நிற்கிறார். இத்தகைய கற்சிலை வடிவம் ஒன்று மதுரை சொக்கநாதர் சந்நிதி மண்டபத்தில் இருக்கிறது.

இவரை வழிபட இன்னல்கள் அகலும்.

## 3. 3. 5. 18 கசமுகா அனுக்கிரகர்

இவ்வடிவம் கசமுகனாகிய பிள்ளையாருக்கு அருள்புரிந்த வர் என்று ஐராவதம் எனப்படும் இந்திரனது வெள்ளை யானைக்கு அருள்புரிந்தவர் என்று கூறப்படும்.

இவரது அருட்சக்தி 'சர்வ சுத்தப்ரதாயினி' ஆகும்.

## 3. 3. 5. 19 சண்டேச அனுக்கிரகர்

சிவதரிசனம் சிவபூசனை இவற்றின் பயனை சிவனடியார் களுக்குக் கொடுக்கும் சண்டேசுரருக்கு அருள்புரிந்த பரமன். இப் பரமன் இச்சண்டேசுரருக்கு தாம் உண்ட கலம், உடுத்த ஆடை சூடிய மலர் இம் மூன்றையும் தந்து தனது மகனாகக் கொண்

டார், இவ்வாறு இவற்றைத் தந்து சண்டேசுவரரை ஆட்கொண்ட இப்பரமன் வடிவங்கள் காணப்படும் இடங்களில் கங்கைகொண்ட சோழச்சரப் பெருங்கோயிலில் உள்ளதே மிகவும் குறிப்பிடத்தக்கது சிற்ப உலகில் முதலிடம் பெற்றும் விளங்குகிறது. மற்றும் இச்சிற்பம் மதுரைச் சொக்கர் நந்தி மண்டபத்திலும் ஒரு சில சிவாலய சண்டேசுரரின் பொற் கோவிலின் விமானத்திலும் காணப்படுவதாகும்.

இவரை வழிபட சில கணைப்பதவி கிடைக்கும் இவரது அருட் சத்தி 'மகாபாதகணாஷினி' ஆகும்.

## 3. 3. 5. 20. ஏகபாதமூர்த்தி

மான்மழுவுடன் நான்கு திருக்கரங்களையும் ஒன்றைக் காலையும் உடைய இம்மூர்த்தியின் வடிவம் மதுரைக் கோயில் நந்தி மண்டபத்திலும், சிவாலயக் கோபுர விமானங்களில் சுதை வடிவிலும் காணப்படுவதாகும்,

மற்றும் இந்த ஒற்றைக்காய் (ஏகபாத) மூர்த்தியின் வடிவம் இருமருங்கிலும் திருமாலும் நான்முகனும் ஒட்டியிக்க ஏகபாத திரிமூர்த்தி என்ற பெயருடன் (திருஒற்றியூர்) மற்றும் ஒரு சில தலங்களில் காணப்படுகிறது

இவரை வழிபட அறிவினைப் பெருக்கத் தோன்றும் இவரது அருட்சத்தி 'மகாரோகவிநாஷினி' ஆகும்.

## 3. 3. 5. 21 இலிங்கோத்பவமூர்த்தி

திருமாலுக்கும் நான்முகனுக்கும் அகந்தையை அடக்கி நல்லறிவு தோற்றுவிக்க சிவபிரான் மண்முதல் விண் அளவும் அழற்பிழம்பாய் நின்ற வடிவம். அனைத்து சிவாலயக் கருவறையின் மேற்கு முகக் கோட்டத்திலும் இது இடம்பெற்றிருக்கும்

இவரை வழிபட உடல்நலம் உண்டாகும். இவரது அருட் சத்தி 'மோட்சப்ரதாயினி' ஆகும்.



படம் 33 சங்கரநாராயணர். 1) தென்னாட்டு சிற்பம் (ஆய்வுக்கு வரைந்தது) 2) வடநாட்டு ஓவியம் (Manifectation of Shiva நூலில் கண்டுள்ளபடி வரைந்தது.

## 3. 3. 5. 22 சுகாசனர்

உமையை அருகில் இடப்பால் அமர்த்தி அவருக்கு நான் மறை மற்றும் ஆகமங்களை உரைக்கும் பெருமான். இவரது வடிவம் இடையில் கந்தன் இன்றி இருக்கும் சோமாஸ் கந்தரின் வடிவை ஒத்திருக்கும், சில சிவன் கோயில்களில் சிலை வடிவில் இருக்கக் காணலாம்.

இவ்வடிவக் கடவுளை வழிபடுபவர் இம்மையில் அறம். பொருள், இன்பம், அடைந்து வீடு பேறடையலாம். இந்நான்கு பேறையும் அருளும் இச் சுகாசன மூர்த்தியின் அருள்சத்தி தர்மார்த்த காம மோட்சப்பிரதாயினி ஆகும்.

## 3. 3. 5. 23 உமாமகேசர்

சிவபிரான் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐவகைத் தொழிலை இயற்ற உமையோடு பொருந்திய வடிவம் இதுவாகும். அம்பிகை இப்பால் நிற்க அவரை அணைத்து நின்றும், அம்பிகையை இடப்பால் அருகில் அமரச் செய்தும் இவ்வடிவம் இருக்கும். திருவையாற்றிலும் மற்றும் சில கோயில்களிலும் இவ்வடிவைக் காணலாம். இவரது அருட்சத்தியின் பெயர் 'பார்யாசவுக்கியப்பிரதாயினி, ஆகும்.

## 3. 3. 5. 24 சங்கரநாராயணர்

அரிஅர்த்தர், அரிஅரர், மாலொருபாகர் என்றெல்லாம் அழைக்கப்பெறும் இக்கடவுள் வலப்பாதி சிவம். இடப்பாதி திருமால் வடிவாக இருக்கும்.

" அரியலால் தேவியில்லை
ஐயன் ஐயாறனார்க்கே "

ஒருசமயம் திருமால் தம்மை நோக்கிச் செய்த தவத்திற்கு மகிழ்ந்த சிவபிரான் திருமாலை நோக்கி 'எத்தகையினரையும் மயக்குவிக்கின்ற சத்தியை உனக்குத் தந்தோம் எனக் கூறி இதன் நிமித்தமாய் மாயன் என்ற பெயர் பெற்று எமது இடப் பாலுள்ள பராசத்தியுமானாய் என்றருளி மறைந்தார்.



படம் 35 அர்த்தநாரீசுவரர் 1) தென்னாட்டுச் சிற்பம் ஆய்வுக்கு வரைந்தது 2) வடநாட்டு ஓவியம். Manifestation of Shiva என்ற நூலில் கண்டுள்ளபடி வரைந்தது.



கும்பகோணம் — நாகேசுவரர் கோயிலில் மாதொருபாகன்
(அர்த்தநாரீசுவரர்)

பெண்ணுருவில் பார்வதியெனவும் ஆண்உருவில் திருமால் எனவும், அதுவே பரம்பொருளின் திருமுன் நடிக்கின்ற மாலை எனவும் தத்துவ நூல்கள் கூறும்.

இவ்வாறு சிவமும், திருமாலாகவும் உள்ள இத்திரு வடிவை திருமலை திருவேங்கடவன்பால் தான் கண்டதைப் பேயாழ்வார்

"தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்-சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவு மொன்றாய் இசைந்து"[19] என்றுபாடுகின்றார்.

## 3.3.5.25 மாதொருபாகன் அர்த்தநாரீசுவரர்

வலப்பாதி சிவடிவவமாயும் இடப்பாதி உமையாகவும் இருக்கும் கோலம். இவ்வடிவ தோற்றத்தை மணிவாசகர் தொன்மைக் கோலம் என்று

"தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும் உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்து ஊதாய் கோத்தும்பீ"[20]

என்கிறார்.

| (வலம்) சிவபாகத்தில் | (இடம்) உமைபாகத்தில் |
|---|---|
| தோலாடை | துகில் ஆடை |
| காதில்குழை | சுருள்தோடு |
| பால்வெண்ணீறு | பசுஞ்சாந்து |
| கையில் சூலம் | கிளி கையில் வளை |

இக்கோல வடிவு நான்கு திருக்கரங்களுடனும் மூன்று திருக்கரங்களுடனும், இடபத்தின் அருகில் நிற்கும் நிலையிலும் பல்விதமாகக் காணப்படும்.

சில சிவத்தலங்களில் வலப்பால் உமையாகவும் இடப்பால் சிவமாகவும் திருவேள்விக் குடியில் இருக்கிறது.

இச்சிவ வடிவத்திற்கு மிகப்பெருமை தரும் தலம் கொங்கு நாட்டில் உள்ள திருக்கொடி மாடச் செங்குன்றூர் (திருச்செங் கோடு) ஆகும். மற்றும் கும்பகோணம் நாகேசுவர சுவாமி கோயில் மேற்குப் பக்கம் உள்ள கோஷ்டத்தில் லிங்கோத்பவ மூர்த்திக்குப் பதிலாக வைக்கப்பட்டுள்ள 'அர்த்தநாரீசுவர' வடிவம் குறிப்பிடத்தக்கது.

## 3. 4. சிவபராக்கிரமத்தில் கூறப்படும் 64 சிவவடிவங்கள்

### 3. 4. 1 இலிங்கமூர்த்தி

உருத்திரபாகம் விருத்தம்

பீடத்தில் அடி நான்கு மூலை பிரமபாகம்

நடுவின் எட்டுமூலை - விஷ்ணுபாகம்

பிரமபாகம்—நபும்சகலிங்கம்

விஷ்ணுபாகம்— ஸ்திரிலிங்கம்

உருத்திரபாகம் - புல்லிலிங்கம் பிரணவ முதற்பொருள். இதன் சோதி உருவமே மகர அகர உகரமாயிருக்கும். அகார வாச்சியமே சிவம். உகாரவாச்சியமே சத்தி.

### 3. 4. 2 இலிங்கோத்பவமூர்த்தி*

இது மகேஸ்வர வடிவங்களில் ஒன்று. சிவாலயங்களில் விமானத்தின் மேற்புறம் (மேற்குநோக்கிய சந்நதி எனில் கீழ்ப் புறம்) இருக்கும். அரியும் அயனும் அடிமுடி தேடமுடியாது தீப்பிழம்பாய் பெருமான் எழுந்தருளிய நிலை.

### 3. '. 3 முகலிங்கம்*

இது ஆட்யம் 1001 முகம், அநாட்யம் முகமற்றது. சுரேட் யம் 108 முகம். சர்வசம் 5, 4, 3, 2, 1 முகங்களை தனித்தனி உடை 5 ஆக 8

### 3. 4. 4 சதாசிவமூர்த்தி*

ஈசானாதி ஐந்துமுகங்களையும் பத்து திருக்கரங்களையும் உடையமூர்த்தி.

### 3. 4. 5 மகாசதாசிவர்*

கணக்கிட்டு உரைக்கமுடியாத திருமுகங்களையும் திருக்கரங் களையும் உடையவர்.

### 3. 4. 6 உமாமகேஸ்வரமூர்த்தி*

ஆனந்த தேவரூபமாய் கிருத்தியாபேதத்தைச் செய்யும் உமையோடுகூடிய கோலம், மகேஸ்வர வடிவங்களில் ஒன்று.

### 3. 4. 7 சுகாசனர்*

உமாதேவிக்கு வேதசிவாகமங்களைச் சுகாசனத்தில் இருந்து உபதேசித்த கோலம்.

### 3. 4. 8 உமேசமூர்த்தி*

உமையோடும் சிவபிரான் நின்றருளும் தோற்றம்.

### 3. 4. 9 சோமாஸ்கந்தர்*

உண்மை அறிவானந்த (சச்சிதானந்த) வடிவாய் பெருமா னுக்கும் பெருமாட்டிக்கும் நடுவில் கந்தர் ஆனந்த வடிவில் இருக்கும் கோலம். மகேஸ்வர வடிவங்களில் ஒன்று.

### 3: 4: 10 சந்திரசேகரர்*

தக்கனது சாபத்தால் கலைகளை இழந்து தன் தாளடைந்த சந்திரனைச் சடையில் சூடி வளரச் செய்த பெருமான். மகேஸ்வர வடிவங்களில் ஒன்று.

## 3. 4. 11 இடபாரூடர்*

இடபாரூடர் திருமாலாகிய இடபத்தில் பெருமான் உமையோடு அமர்ந்து காட்சி தரும் கோலம், மகேஸ்வர வடிவங்களில் ஒன்று.

## 3. 4. 12 இடபாந்திகர்*

தரும தேவதையாகிய இடபத்தில் பெருமான் பெருமாட்டியோடு நின்றருளும் கோலம்.

## 3. 4. 13 புஜங்கலளிதமூர்த்தி

கருடனால் அவதியுற்ற பாம்புகளின் வேண்டுதலுக்கு இரங்கி அவைகளை உடலில் தரித்துக் காத்த மூர்த்தி.

## 3. 4. 14 புஜங்கத்ராசமூர்த்தி

தாருகாவனமுனிவர் செய்த வேள்வியினின்றும் தோன்றிய பாம்புகளை அடக்கிய மூர்த்தி.

## 3. 4. 15 சந்தியாதாண்டவமூர்த்தி

பிரதோஷ காலத்தில் நந்தியின் இரு கொம்புகளுக்கிடையில் தாண்டவம் செய்த மூர்த்தி.

## 3. 4. 16 சதாந்ருத்த மூர்த்தி

எந்நேரமும் நடனத்துடன் இருக்கும் மூர்த்தி. (அநவரத தாண்டவர்)

## 3. 4. 17 சண்டதாண்டவமூர்த்தி

சண்டியாகிய காளியுடன் நடனமாடி அவளது அகந்தையை அடக்கிய மூர்த்தி.

## 3. 4. 18 கங்காதரமூர்த்தி

பகீரதன் கொணர்ந்த ஆகாய கங்கையைத் தம் சடையில் அடக்கியமூர்த்தி.



சுரம்நீக்கும் பரமன் (சுவராபக்ன மூர்த்தி)
(ஆய்வாளரால் வரையப்பட்டது)

### 3. 4. 19 கங்காவிசர்ச்சனமூர்த்தி

சகரமைந்தர்களது சாம்பரைக் கரைக்க பகீரதனது வேண்டு கோளின்படி முடிக்கங்கை நீரை விட்டமூர்த்தி.

### 3. 4. 20 திரிபுராந்தகமூர்த்தி

திரிபுராதியரை, திரிபுரத்தை, எரித்தமூர்த்தி. மகேஸ்வர வடிவங்களில் ஒன்று.

### 3, 4. 21 கலியாணசுந்தரமூர்த்தி

மலையரையன் மடப்பாவை உமையம்மையைத் திருமணம் செய்து கொண்ட மூர்த்தி. மகேஸ்வர வடிவங்களில் ஒன்று.

### 3. 4. 22 அர்த்தநாரீசுவரமூர்த்தி

வலப்பாதி ஈசன். இடப்பாதி நாரி (உமை) யாக உள்ள மூர்த்தி. மகேஸ்வர வடிவங்களில் ஒன்று. சோணாட்டு காவிரி வடகரை திருவேள்விக்குடியில் உள்ள அர்த்தநாரீசுரர். வட நாட்டில் உள்ள இங்குக் குறிக்கப்பட்டுள்ள ஓவியம் வலப்பாதி உமை. இடப்பாதி சிவம்.

### 3. 4. 23 கஜயுக்தமூர்த்தி

பிரமனிடம் வரம்பெற்ற வலியுடன் விண்ணவர்கட்கு இன்னல்கள் புரிந்த கரிய யானை உருப்பெற்ற கயாசுரனை வென்ற சிவபிரானின் போர்க்கோல வடிவம்.

### 3. 4.24 சுரம்நீக்கும் பரமன் (சுவராபக்னமூர்த்தி)

வாணாசுரனுக்கும் கண்ணனுக்கும் ஒருசமயம் நிகழ்ந்த போரில் கண்ணன் விட்ட குளிர் சுரத்தை அழிக்க சிவபிரான் வெம்மை சுரத்தை ஏவினார். இதனால் குளிர் சுரம் நீங்கியது. இந்த வெம்மை சுரம் மூன்று தலை, மூன்று கைகள், மூன்று கால்களை உடைய வடிவாய்ச் சென்றதால் உலகம் இவ்வடிவ

முதலைப் பணிந்து இதற்கு சுரம் நீக்கும் பரமன் (சுவராபக்ன மூர்த்தி) எனப்பெயரிட்டு வழங்குகின்றது.

இத்தகைய வரலாற்றை விளக்கும் சிலைவடிவம் ஒன்று மதுரை சொக்கலிங்கப் பெருமான் திருக்கோயில உட்திருச் சுற்றின் மேற்குப் பகுதியில் இருக்கிறது.

மூன்று தலைகள், வலப்பக்கம் ஒரே கை அபயநிலையில் உள்ளது. இடப்பக்கம் இரண்டு கைகள். இவற்றுள் ஒன்று வீசிய கை. மற்றொரு கையில் படைக்கலம் ஒன்று. மூன்று கால்கள். இவற்றுள் இரண்டு ஊன்றியும் ஒன்று தூக்கியாடும் நடனக் கோலத்தில் உள்ளது.

இவ்வடிவம் சிவபிரானது தோற்றங்கள் 64இல் சுரகண்டீசு வரர் என்றும், பஞ்சவிம்சை 25 தோற்றங்களுள் சுரதாண்டவம் என்றும் சொல்லப்படுகிறது.

சிவபராக்கிரம், என்னும் நூலில் இவ்வடிவிற்கு 3 தலைகள். 4 கைகள், 3 கால்கள், ஒன்பது கண்கள் என்று கூறப்பட்டுள்ளது.

## 3. 4. 25 சார்த்துலஹரமூர்த்தி

தாருகாவனத்து முனிவர்களது வேள்வியில் தோன்றிவந்த புலியினைக் கொன்று அதன் தோலை அணிந்தமூர்த்தி.

## 3. 4. 26 பாசுபதமூர்த்தி

பஞ்சவரில் ஒருவனான அருச்சுனனுக்கு பாசுபதம் என்னும் அம்பினை அளித்த மூர்த்தி.

## 3. 4. 27 கங்காளமூர்த்தி

திருமாலாகிய வாமனரை அடக்கிய மூர்த்தி. மகேஸ்வர வடிவங்களில். ஒன்று.

## 3. 4. 28 கேசவார்த்தமூர்த்தி

அரியர்த்தர், சங்கரநாராயணர் என்றழைக்கப்படும் இம் மூர்த்தி மகேஸ்வர வடிவங்களில் ஒன்று. வலப்பாதி சிவபிரான் இடப்பாதி திருமால் இவ்வாறான கோலம்.

## 3. 4. 29 பிட்சாடனமூர்த்தி

தாருகாவனத்து முனிவர்களுக்கு நல்லுணர்வு தோற்றுவிக்க சிவபிரான் திகம்பரராய் கையில் கபாலத்துடன் அவர்கள் இல்லந்தோறும் சென்று பலி ஏற்ற கோலம். மகேசுவர வடிவங்களில் ஒன்று.

## 3. 4. 30 சிம்மக்நமூர்த்தி (சரபமூர்த்தி)

இரணியனைக் கொன்ற நரசிம்மத்தை திருமாலை சரபமாகத் தோன்றி அடக்கிய மூர்த்தி. இவ்வடிவம் சிறப்பாக உடைய தலம் திருவிடைமருதூருக்கு அருகில் (மேற்கில்) உள்ள திருபுவனம் ஆகும்.

இம்மூர்த்தியின் வடிவுத் தோற்றத்தைத் ஸ்ரீதத்துவநிதி என்னும் நூலில் முதற் பகுதியில் கூறப்படுவதாவது.

மகாமேரு போன்ற கம்பீர வடிவம் 8 கால்கள், சூரியனைப் போன்ற காந்தி.

சோம, சூரிய, அக்கினியாகிய மூன்று கண்கள். ஊர்த்துவ முகசேகம் துர்க்கையும் காலனும் இருபக்கம் முப்பத்திரெண்டு கைகள், இக்கைகளில்.

| வலப்பக்கம் 16 கைகளில் | இடப்பக்கம் 16 கைகளில் |
|---|---|
| 1 வச்சிரம் | 1 வரதம் |
| 2 முஷ்டி | 2 பாசம் |
| 3 அபயம் | 3 கதாயுதம் |
| 4 சக்கரம் | 4 அம்பு |
| 5 சக்தி | 5. கொடி |
| 6 தண்டம் | 6 இரம்பம் |
| 7 அங்குசம் | 7 பன்றி |

| | | | |
|---|---|---|---|
| 8 | கத்தி | 8 | சங்கம் |
| 9 | கட்வாங்கம் | 9 | கேடயம் |
| 10 | பரசு | 10 | நாகம் |
| 11 | செபமாலை | 11 | பத்மம் |
| 12 | எலும்பு | 12 | கபாலம் |
| 13 | சூலம் | 13 | சுவடி |
| 14 | வில் | 14 | குந்தம் |
| 15 | உலக்கை | 15 | துர்க்கையை ஆலிங்கனம் |
| 16 | அக்கினி | 16 | கலப்பை |

தெத்திப் பற்களுடன் சிம்மத்தின் பிடரிமயிரைப் போல் அடர்த்தியான பிடரிமயிருடன் பயங்கரத் தோற்ற வடிவமாகும். சிவப்புநிறம். இம்மூர்த்தியின் வடிவதோற்றம் ஓவியமாகவும் கற்சிலை செப்பு சிலை வடிவாயும் நம் பரத கண்டத்தில் சற்று வேறுபாட்டுடன் பல இடங்களில் உள்ளன.

அவற்றுள் மூவகைத் தோற்றம்.

1 தென்னாட்டுச் சிவாலயங்கள் பலவற்றுள் காணப்படும் செப்புச் சிலைவடிவம்.

2. இம்மூர்த்தியின் சிறப்புத் தலமாக விளங்கும் திருபுவனக் கோயிலில் செப்பு வடிவம்.

3. வடநாட்டில் காணப்படும் ஒரு ஓவியம்.

## 3. 4. 31 சண்டேச அனுக்கிரகமூர்த்தி

சேய்ஞலூர்ப் பிள்ளையாராகிய கண்டே_சுரருக்கு சண்டேசுரப் பதவியை அளித்த மூர்த்தி. மகேசுவர வடிவங்களில் ஒன்று

## 3, 4. 32 தெட்சிணாமூர்த்தி

வல்லார்கள் நால்வருக்கும் கல்லால மரத்தின் கீழிருந்து உபதேசித்தமூர்த்தி. மகேஸ்வர வடிவங்களின் ஒன்று.

## 3. 4. 33 யோக தெட்சணாமூர்த்தி

யோக நிலைத் தோற்றத்தில் உள்ள மூர்த்தி.

## 3. 4. 34 வீணாதர தெட்சணாமூர்த்தி

தும்புரு நாரதாதிகட்கு இசைஞானம் அளிக்கையில் வீணையுடன் இருந்தருளிய மூர்த்தி.

## 3. 4. 35 காலாந்தகமூர்த்தி

காலாரி, காலசம்ஹாரமூர்த்தி. மார்க்கண்டேயரின் உயிரைக் கவர வந்த காலனை (இயமனை) காலால் தடிந்த மூர்த்தி. மகேஸ்வர வடிவங்களில் ஒன்று.

## 3. 4. 36 காமதகனமூர்த்தி (காமாரி)

சனகாதி நால்வருக்கு நிஷ்டையில் இருந்து உபதேசித்த பெருமாள் மீது காமன் (மன்மதன்) மலர் அம்புகளைப் பொழிய அவனை நெற்றிக் கண்ணால் எரித்த மூர்த்தி. மகேஸ்வர வடிவங்களில் ஒன்று.

## 3. 4. 37 வகுளிசமூர்த்தி

ஒவ்வொரு புவனத்திலும் ஒவ்வொரு மூர்த்தியாய் எழுந்தருளி அங்குள்ள ஆன்மாக்களுக்கு அனுக்கிரகம் செய்பவர். புவனங்கள் 224.

## 3. 4. 38 பைரவமூர்த்தி

இரண்யாட்சகன் மகன் அந்தகாசுரனை வென்று நாய் வாகனத் தமர்ந்த கோலம்.

## 3. 4. 39 ஆபத்தோத்தாரமூர்த்தி

முனிவர்களது துன்பங்களை களைந்த மூர்த்தி.

### 3. 4. 40 வடுகமூர்த்தி

பிரமனை வருத்திய முண்டாசுரனை வென்ற மூர்த்தி.

### 3. 4. 41 க்ஷேத்திரபாலகமூர்த்தி

ஊழிக்காலத்தில் உலகைக் காத்தமூர்த்தி.

### 3. 4. 42 வீரபத்திரமூர்த்தி

தக்கனது அநந்தையை அடக்கிய மூர்த்தி

### 3. 4. 43 அகோராஸ்த்ரமூர்த்தி

சத்த தந்துவை வென்றமூர்த்தி.

### 3. 4. 44 தட்சயக்ஞஹதமூர்த்தி

தட்சனது யாகத்தையும் அவனையுதி அழித்த மூர்த்தி.

### 3. 4. 45 கிராதமூர்த்தி

வேடருபம் கொண்ட மூர்த்தி.

### 3. 4. 46 குருமூர்த்தி

வாதவூரடிகட்குக் குருந்தமரத்தடியில் அமர்ந்து உபதேசித்த மூர்த்தி.

### 3. 4. 47 அசுவாருடமூர்த்தி

வாதவூரடிகளுக்காக நரிகளைப் பரியாக்கி அவற்றை மாறனிடம் சேர்க்க குதிரை மீதமர்ந்து வந்த மூர்த்தி.

### 3. 4. 48 கஜாந்திகமூர்த்தி

கஜமாகிய ஐராவதத்திற்கு அனுக்கிரகம் செய்த மூர்த்தி.



ஏகபாத திரிமூர்த்தி—திரு ஒற்றியூர்

### 3. 4. 49 சலந்தரவதமூர்த்தி

கலந்தராசுரனை வென்ற மூர்த்தி. மகேஸ்வர வடிவங்களில் ஒன்று.

### 3. 4. 50 ஏகபாத திரிமூர்த்தி

பெருமான் ஒற்றைக் காலில் நான்கு திருக்கரங்களுடன், இவரது பாதத்தின் வலப்பக்கம் பிரமனும், இடப்பக்கம் திருமாலும் நான்கு கரங்களுடன் இருக்கும் தோற்றம்.

### 3. 4. 51 திரிபாதமூர்த்தி

மூன்று பதமாக நின்ற மும்மூர்த்திகளும் மகேசுவரர் இடத்தில் லயமாகின்ற கோலம்.

### 3. 4. 52 ஏகபாதமூர்த்தி

சர்வசங்கார காலத்தில் அனைத்தும் லயம் அடைய ஒற்றைக் காலுடன் விளங்கிய மூர்த்தி. மகேஸ்வர வடிவங்களில் ஒன்று.

### 3. 4. 53 கௌரி வரப்ரசதாமூர்த்தி

உமை தன் கருமை நிறம் நீங்க வேண்டிப் பூசித்தபோது, அவளுக்குப் பொன்னிறம் அளித்த மூர்த்தி.

### 3. 4. 54 சக்ரதானஸ்வருபமூர்ததி

சக்ரதானர். திருமாலுக்குச் சக்கரம் அளித்த மூர்த்தி மகேஸ்வர வடிவங்களில் ஒன்று.

### 3. 4. 55 கவுரிவிலாசமந்விதமூர்த்தி

கவுரியாகிய உமையுடன் லீலைகள் புரிந்த மூர்த்தி.

### 3. 4. 56 விஷாபஹரணமூர்த்தி (நீலகண்டர்)

பாற்கடலில் தோன்றிய விடத்தை உண்டு கண்டங்கருத்து தேவர்களைக் காத்த மூர்த்தி. மகேஸ்வர வடிவங்களில் ஒன்று.

## 3, 4. 57 கருடாந்திகமூர்த்தி

நந்தியைப் பகைத்துத் துன்புற்ற கருடனுக்கு அருள்செய்த மூர்த்தி.

## 3. 4. 58 பிரம்ம சேதச்சிரமூர்த்தி

அயன்தலைகள் ஐந்தில் ஒன்றை அறுத்த மூர்த்தி.

## 3. 4. 59 கூர்மசங்காரமூர்த்தி

கூர்ம (ஆமை) வடிவான திருமாலின் அகந்தையை அடக்கிய மூர்த்தி

## 3, 4. 60 வராக சம்ஹாரமூர்த்தி

வராகம் (பன்றி) வடிவான திருமாலை அடக்கிய மூர்த்தி.

## 3. 4. 61 மச்சசம்ஹாரமூர்த்தி

மச்சவடிவத் திருமாலின் அகந்தையை அடக்கிய மூர்த்தி.

## 3. 4. 62 பிரார்த்தனாமூர்த்தி

இறைவியின் ஊடலைத் தணித்த கோலம்.

## 3. 4. 63 இரதத்த பிக்ஷப்ரதானமூர்த்தி

தேவர்களது இரத்தத்தைப் பலியேற்று அவர்களது அகந்தையை அடக்கிய மூர்த்தி.

## 3. 4. 64 சிஷ்யபாவமூர்த்தி

தன் குமரன் முருகன் பிரணவத்திற்குப் பொருள் உரைக்கக் கேட்ட மூர்த்தி.

* இக்குறியிடப்பட்ட தலைப்புகள் இந்த ஆய்வில் 'மகேஸ்வர வடிவங்கள்' என்ற தலைப்பில் விளக்கிக் கூறப்பட்டுள்ளன.

## 35 எட்டுவீர (வீரட்ட) சிவ வடிவங்கள்

காவிரியின் கரைக்கண்டி வீரட்டானங்
கடவூர் வீரட்டானங் காமருசீரதிகை
மேவிய வீரட்டானம் வழுவை வீரட்டம்
வியன்பறியல் வீரட்டம் விடையூர் திக்கிடமாம்
கோவலிகர் வீரட்டங் குறுக்கை வீரட்டங்
கோத்திட்டைக்குடி[1] வீரட்டான மிவை கூறி
நாவினவின்றுரைப்பார்க்கு நணுகந் சென்றா
னமனுறுமருஞ் சிவன்றமரென்ற கல்வர் நன்கே[21]

வீரட்டானம், வீரட்டம் என்பது சிவபிரான் வெவ்வேறு சமயங்களில் தன் அடியவர்களைக் காக்கும் பொருட்டுச் செய்த எட்டு வீரச் செயல்கள் நடந்த இடங்களாகும்.
அவையாவன:

"பூமன் சிரங்கண்டி, அந்தகன் கோவல், புரம் அதிகை
மாமன்மறியல், சலந்தரன்விற்குடி, மாவழுவூர்
காமன்குறுக்கை, யமன் கடவூர், இந்தக் காசினியில்
தேமன்று கொன்றையும், திங்களும் சூடிதன் சேவகமே"[2]

| வீரச்செயல் நிகழ்ந்த இடம் | நிகழ்ந்த வீரச்செயல் | செய்தமையால் சிவபிரான் பெற்ற வீரப்பெயர் |
|---|---|---|
| 1. திருக்கண்டியூர் | பிரமன் சிரம் கொய்தது | பிரமசிரக்கண்டீச வரர் |
| 2. திருக்கோவலூர் | அந்தகாசுரனைக் கொன்றது | அந்தகாசுரர் |
| 3. திருவதிகை | திரிபுரத்தை எரித்தது | திரிபுராந்தகர் |

| | | |
|---|---|---|
| 4. திருப்பறியல் | தக்கன் சிரங்கொய்தது | வீரபத்திரர் |
| 5. திருவிற்குடி | சலந்தராசுரனைக் கொன்றது | சலந்தராரி |
| 6. வழுவூர் | யானையை உரித்தது | கசாசூரசம்கார மூர்த்தி (கசா) |
| 7. திருக்குறுக்கை | காமனை எரித்தது | காமாரி |
| 8. திருக்கடவூர் | இயமனை உதைத்தது | காலாரி |

## வீரட்ட வடிவங்கள்

### 3. 5. 1 பிரமன் தலையைக் கொய்தமூர்த்தி

பிரமசிரக்கண்டீசுவரர், பிரம்மசிரச்சேத மூர்த்தி என்று அழைக்கப்படும் இவ்வீரட்டானேசுவரர் வெண்மை நிறம், முக்கண் சடைமுடி, வலக்காதில் ஓலை, இடக்காதில் குண்டலம், வலது இரு கைகளில் வச்சிரம், கோடாரி, (பரசு) இடது இரு கைகளில் பிரமனின் மண்டைஓடு, சூலம் இவற்றுடன் இருப்பார். ''அறுத்தானை அயன்தலைகள் ஐந்தில் ஒன்றை'' என்று நாவுக்கரசர் பாடுகின்றார்.

### 3. 5. 2 அந்தகாசுரனைக் கொன்ற அந்தகாசுரமூர்த்தி

வடமொழி போற்றியில் (அருச்சனையில்) ''ஓம் அந்தகாசுர சூதனாயநம'' என்று போற்றப்படும் இவ்வீரட்டேசுவரர் சடைமுடி, முக்கண், நான்கு திருக்கரங்கள் அந்தகாசுரன் மீது இடதுகாலை ஊன்றி வலதுகாலை அவனது குதத்தின்மேல் அமுக்கி வலது இடது இரு கைகளால் சூலத்தைப் பிடித்துக்குத்துவது போல் நிற்கும் நிலை. மற்ற இரு வலது இடது கைகளில் கோடரி(பரசு) மற்ற இடது கையில் மான் ஏந்திய நிலை 'அந்தகனை சூலத்தால் அழுத்திக் கொண்டார்' என்பது நாவரிசின் திருவாக்கு.

## 3. 5. 3 திரிபுரம் எரித்த விரிசடைக்கடவுள்

திரிபுராரி, திரிபுராந்தகர் என்றெல்லாம் பேசப்படும் இவ் வடிவத்தை மகேசுவர வடிவ 25ல் 10வது இடத்தில் காண்க.

## 3 5 4 தக்கன் தலையைக் கொய்த வீரபத்திரர்

இவரை தட்சயஞக்கரமூர்த்தி என்றும் அழைப்பர். அச்சம் தரும் திருமுகத்தை உடைய இக்கடவுள் சடைமுடி, முக்கண், வலது இரு கைகளில் கத்தி, அம்பு, இடது இருகைகளில் கதை, வில் தாங்கியவராய் தலைமாலைகளை அணிந்து, காலில் மிதி கட்டையை (பாதுகையை) சூடி உடன் பத்திரகாளியும் இருக்க நின்ற கோலத்தில் இருப்பவர். இவரது வலப்பக்கம் காலடியில் அகந்தை அடங்கப் பெற்ற தக்கன் ஆட்டுத் தலையுடன் கை குவித்து வணங்கும் நிலையில் இருப்பான். மகேசுவர வடிவ 25ல் 12இல் காண்க.

## 3. 4. 5 சலந்தராரி[சலந்தரகரமூர்த்தி]

சலந்தரன் என்ற கொடிய அவுணன், சிவபிரான் தன் திருவடியால் கீறிய சக்கரமொன்றை எடுக்க அது அவனது தலையை அரிந்தது. இவ்வாறு இச்சலந்தரனை அழித்த சலந்தராரி, சடைமுடி, முக்கண், நான்கு கைகள், இவற்றுள் வலது இருகைகளில் மழு, மற்றொரு கையில் சக்கரம். இடது இரு கைகளில் மான், வரதம் இவற்றுடன் நின்ற கோலம். மகேசுவர வடிவ 25ல் ஒன்பதில் காண்க.

"இருகூறாகச் சலந்தரனை யிறுத்து மாட்டி அவ்வடிவம்
அருகே தோன்றத் சுதரிசனம் அங்கைத் தலத்தின் மிசை ஏந்தி
முருகார் கடுக்கைத் தண்ணறும் பூத்தொடையல் வானக முடிவிளங்க
திருவார்காட்சியளித்தருளுந் தேவர் சேரமான் திருஉருவம்'
(காஞ்சிபுராணம்)

## 3. 5. 6 யானையை உரித்தமூர்த்தி

### கசாரி, கசாசுரசம்காரமூர்த்தி, கசயுக்தமூர்த்தி

வலது காலை யானையின் தலையில் ஊன்றியும் இடது காலை வலது தொடை வரை தூக்கியும் யானையின் தோலை இரண்டு கைகளால் உயரத் தூக்கிக் கொண்டு, மற்ற ஆறு கைகளில் சூலம், கத்தி, உடுக்கை, மழு,மான்,சுசீமுகம் இவைகளை தாங்கி நிற்கும் கோலம். வெளுப்பான நிறத்துடன் அச்சமிகு தோற்றத்தை உடைய இவரது இடப்பக்கத்தில் உமையம்மையார் குமரனை இடையில் வைத்துக் கொண்டு அச்சம் கொண்ட பார்வையுடன் நிற்பார். மகேசுவர வடிவ 25ல் 11இல் காண்க

## 3. 5. 7 காமாரி

காமதகனமூர்த்தி, யோகிசுவரமூர்த்தி என்றழைக்கப்படும் இச்சிவ வடிவம் திருக்குறுக்கை வீரட்டம் என்னும் தேவாரத் தலத்தில் இருப்பவர். தாமரை மலர் இருக்கையில் இருக்கும் இவர் நான்கு கைகளை உடையவராய் மழு, மான், அபயம், வரதம உடைய கைகளுடன் இருப்பவர். மதுரைக் கோயில் நந்திமண்டபத் தூண் சிற்பமொன்றில் நான்கு திருக்கரங்களில் அபயக்கை உருத்திராக்க மணிமாலையை தாங்கி நெற்றிக்கண் (எரிவிழ) விளங்க இருக்கும் தோற்றம் காணற்குரியது. மகேசுவர வடிவ 25ல் 7இல் காண்க.

## 3. 5. 8 காலனைக்காலால் கடிந்தவர்

காலாரி, காலசம்காரமூர்த்தி, காலநாசமூர்த்தி என்றெல்லாம் அழைக்கப்பெறும் இச்சிவ வடிவம் சிறப்பாய் விளங்கும் இடம் திருக்கடவூர் வீரட்டம் (திருக்கடையூர்) ஆகும். சீதத்துவநிதி என்னும் (வடமொழி-தமிழ் மொழிபெயர்ப்பு) நூலில் இவரது வடிவம் கூறப்பட்டுள்ள நிலை. சம்பரத்தம்பூ நிறம், முக்கண், நான்கு திருக்கைகளில் சூலம், பத்மம், மழு, பாசக் கயிறு, தெத்திப்பற்கள், பயங்கரமுகம். வலது காலை ஊன்றி

இடது காலால் இயமனது மார்பில் உதைக்கும் நிலை அருகில் உமாதேவியார் நிற்க இருப்பவர்.

இத்திருவடிவத்திற்கு வலப்பக்கம் மார்க்கண்டேயர் சிவலிங்கத்தை கட்டிப்பிடித்துக் கொண்டு இருக்கும் நிலை. மகேசுவர வடிவ 25ல் 8ல் காண்க.

## அடிக்குறிப்புகள்

1. பேரூர்ப்புராணம், திருவாவடுதுறை ஆதீனப்பதிப்பு, பக்கம் 458 குறிப்புரை
2. இந்த ஆய்வில் இனி அடுத்துவரும் இயற்கை வடிவங்கள் தலைப்பில் காண்க.
3. அப்பர் திருமுறை 6, பதிகம் 34, பாடல் 3
4. அப்பர் திருமுறை 4, பதிகம் 4 பாடல் 10
5. பெரியபுராணம்-சிறுத்தொண்டர்புராணம்-பாட்டு எண் 84
6. இந்த ஆய்வில் திருவைந்தெழுத்தில் நடராசர் (மந்திர வடிவில்) காண்க
7. அப்பர் திருமுறை 4, பதிகம் 81, பாடல் 4
8. " " 4, " 80, " 1
9 பெரியபுராணம்-திருநாவுக்கரசர்புராணம், பாட்டு எண் 9
10. திருவாசகம், திருச்சாழல் பாட்டு எண் 15
11. சுந்தரர் திருமுறை 7, பதிகம் 1, பாடல் 1
12. திருவாசகம் திருச்சாழல், பாட்டு எண் 13
13. அப்பர் திருமுறை 4, பதிகம் 1, பாடல் 10
14. திருமந்திரம் பதிவிலியில் வீரட்டம், பாட்டு எண் 2
15. சம்பந்தர் திருமுறை 1, பதிகம் 48 பாடல் 1

16. திருமயிலை கும்பாபிஷேக மலர், தென்முகத்தெய்வம் என்னும் தலைப்பில் டாக்டர் சபாரத்தினம் எழுதியுள்ளது.

17. தமிழகத்து கலைச் செல்வ

18. அப்பர், திருமுறை 6, பதிகம் 34, பாடல் 3

19. நாலாயிர திவ்யப் பிரபந்தம் இயற்பா மூன்றாம் திருவந்தாதி பாட்டு எண் 63

20. திருவாசகம், திருக்கோத்தும்பி, பாட்டு எண்

21. அப்பர் திருமுறை 6, பதிகம் 1, பாடல் 2

—o—

# 4. அருவம்

இனி அருவ வடிவில் ஆன சிவவடிவங்கள் குறித்த செய்திகளைக் காண்போம்.

## 4.1 தியானவடிவம்

இறைவனது வடிவத்தை உள்ளத்தில், வேறு பிற எண்ணங்கள் இல்லாதவாறு நினைத்துப் பார்த்தல் தியானம், செபம் என்றெல்லாம் கூறப்படும்.

தேவார மூவருள் ஒருவரான நம்பியாரூரர்(சுந்தரர்) தம் தலயாத்திரையில், தம் வயது பதினேழில் 'கொங்கு நாட்டுச் சிவத்தலமான திருப்பாண்டிக் கொடுமுடிக்குச் சென்றார். சென்றவர் சிவபிரான் திருமுன் நின்று பாடும்போது,

"திருப்பாண்டிக் கொடுமுடி நற்றவா! இன்றுதான் நான் பிறந்தேன். மற்றும் இனி பிறவாத தன்மையையும் பெற்று விட்டேன். ஏன்?

"மற்று பற்று எனக்கின்றி நின் திருப்பாதமே மனம் பாவித்தேன் பெற்றலும் பிறந்தேன்'' ஆதலினால் தான் என்று பாடினார். இவ்வாறு ஒரு நெறிய மனம் வைத்து நினைக்க (தியானிக்க) ஐம்புலன்களும் ஒடுங்க வேண்டும். புலன்கள் ஐந்தும் எப்போது ஒடுங்கும் 'அன்னம் ஒடுங்கினால்?

இதனாற்றான் புனித நாட்களில் அன்னத்தை (உணவை) ஒடுக்கி விரதம் இருந்து இறை எண்ணத்துடன் இருக்கும் வழக்கம் இன்றும் நம்மவர்களிடம் உள்ளது.

இறைவன் முழுநிறைவுடன் எங்கும் நீக்கமற நிறைந்திருப் பவர். இதேபோல் இவருடைய திருப்பெயரும் முற்றும் நிறைந்த நிலையை உடையது. இதற்கு அளவற்ற ஆற்றலுண்டு. இதனால் யாவற்றையும் அடையலாம்.

எந்த ஒரு பொருளின் பெயரைச் சொல்வதால் அப்பொரு ளைப் பற்றிய உயர்வு நம் உள்ளத்தில் எழுகிறதோ, இதே போல் இறைவனின் திருப்பெயரும் அவரைப் பற்றிய தூய எண்ணங்களை உள்ளத்தில் எழச் செய்து தெளிவாக இறையைத் தெரிந்து கொள்ளக் காரணமாகிறது.

எந்த ஒரு சொற்றொடரையும் பலமுறை சொல்வதோ, அல்லது இறைவனின் திருப்பெயரை மீண்டும் மீண்டும் பல முறை சொல்லுவதோ நினைப்பதோ தியானம் (செபம்) எனப்படும்.

இறைவனைப் பற்றி அறிந்து கொள்ள விரும்பும் சாதாரண ஒருவனுக்கு (குருட்டு பத்தனுக்கு) ஒரு ஊன்றுகோலை ஒத்தது தியானம். தியானம் உள்ளத்தைத் தூய்மையாக்கி அமைதி அடையச் செய்கிறது. தொண்டனையும் ஒன்றாக இணைக் கிறது.

மந்திரம் என்பது தெய்வத்தன்மை வாய்ந்தது. எண்ணத் தில் பிரதிபலிக்கும் இப்புனித மந்திரமும் இறைவன் திருப்பெயர் களும் நிறைந்த அனுபவத்தை உண்டாக்கும், இறைவனது திருவடிப் பேற்றை அடைய நம்பக மிகுந்த திறவுகோலைப் போன்ற சின்னங்கள் தாம் தியானத்தில் பிரதிபலிக்கும் மந்திர மும் பெயரும். மந்திரயோகம் என்பது ஒரு சரியான அறிவியல் கலை.

மந்திரத்திற்கு மூலகாரணமாக ஒரு அளவும் சக்தியும் ஒரு கருவும் நம்பிக்கையும் இருக்கிறது.

இம்மந்திரத்தில் ஒலி அதன் அலைகளால் சலனம் உண்டாக்கி ஒரு உருவம் அமையக் காரணமாகிறது. எவ்வாறு ஒரு அணுவிற்குள் வெளிக்காட்டாமல் இருந்த ஆற்றல் (சக்தி) அதனில் பிளவு தோன்றியபோது வெளிப்படுகிறதோ அதைப் போல் மந்திரத்தை பன்முறை அடுத்தடுத்து உச்சரிப்பதால் ஏற்படும் அலைவினால் அதனுள் மறைந்திருக்கும் மறைவான ஆற்றல் (இரகசியமான சக்தி) அதற்காக ஏற்பட்டிருக்கும் இறையின் உருவைப் பிறக்கச் செய்யக் காரணமாகிறது.

குறிப்பிட்ட ஒரு தெய்வத்தின் மந்திரம் முறையான வகையில் உச்சரிக்கப்படுமானால் அதனுடைய ஒலிஅலைகள் உதிர்ந்து பரந்த வெளியில் அத்தெய்வத்தின் வடிவை உருவாக்கக் காரணமாகிறது.

"ஓம் நமச்சிவாய" என்னும் திருவைந்தெழுத்தை உச்சரிக்கும்போது இம் மந்திரத்திற்குரிய சிவபிரானது வடிவத்தை அவ்வுச்சரிப்பு உண்டாக்குகிறது.

இம்மந்திரத்தை வல்லார்வாய் (ஞானாசிரியன்மூலம்) உபதேசிக்கப் பெற்று நித்தம் இயன்ற அளவு எண்ணல் வேண்டும். இவ்வாறு எண்ணுமுன் தன் உள்ளத்தில் வேறு எண்ணங்கள் இன்றி தூய்மை செய்து எண்ணுதல் சிறப்பாகும். இவ்வாறு எண்ணிப் பார்க்கும் செயல் மூவகைப்படும்.

ஒன்று சொல்லும் மந்திரம் பிறர் செவியில் விழுமாறு வாய்விட்டுச் சொல்லுதல். இது குறைந்த பயனைக் கொடுப்பதாகும்.

இரண்டாவது தன் செவி அளவில் மட்டும் விழுமாறு சொல்லுதல். இது நடுத்தரப் பயனைக் கொடுக்கும்.

மூன்றாவது தம் உள்ளத்தால் மட்டும் எண்ணுதல் நிறைந்த பயனைக் கொடுக்கும் என்பர் மேலோர்.

எண்ணத்தால் இறைவடிவத்தையும், கோயிலையும் அமைத்தவர்களின் 63 நாயன்மார்களின் வாயிலார் நாயனார்,

பூசலார் நாயனார் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர். வாயிலார் நாயனார் எண்ணத்தால் வழிப்பட்ட தன்மையை,

"மறவாமையான் அமைத்த மனக்கோயில் உள்ளிருத்தி
உறவாதி தனையுணரும் ஒளிவிளக்குச் சுடரேற்றி
இறவாத ஆனந்தம் எனும் திருமஞ்சனம்சூட்டி
அறவாணர்க்கன்பென்னும் அமுதமைத் தர்ச்சனை
செய்வார்[2]

"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம் தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்[2-1] என்கிறார் திருமூலர் திருநாவுக்கரசரோ.

"காயமே கோயிலாக கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறைய நீரமைய ஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே"[3]
என்கிறார்.

செந்தில் முருகன் அருள்பெற்ற குமரகுருபரர்:-

1. பிறப்புக்குக் காரணமான நான் என்ற செருக்கும் எனது என்ற பற்றும் அற்ற இடமே திருவடி
2. வாய் பேசாது மௌனமாயிருக்கும் இன்பமே திருவடி
3. இறைவனை உணரும் அறிவே திருமேனி
4. விருப்பம், செயல், அறிவு மூன்றும் முக்கண்கள்
5. கருணையாகிய செந்தாமரைக்கைகள்
6. பெரிய இந்நிலமே சந்நதி……… ……யாகக்

கொண்டு சிவவடிவம் திகழ்வதை

……………………………… தோன்றவரும்

யான் எனதென்று அற்ற இடமே திருவடியா

மோனபரானந்தம் முடியாக — ஞானம்
திருவுருவா இச்சை செயல் அறிவு கண்ணா
அருளதுவே செங்கை அலரா — இருநிலமே
சந்நிதியாய் நிற்கும் தனிச்சுடர்[4]
பெரியபுராணம் — சித்தத்தை சிவன்பாலே வைத்தார் - கருத்து

'உத்தமமாகிய சிவபுண்ணிய மேலீட்டினாலே அறமும், பொருளும், இன்பமென்னும் காட்டினை ஒடி போலாக்கி எறிந்து. இதயம் முதலியனவாகிய ஐந்து ஞான இருப்பிடங்களாகிய தானங்களையும் கடந்து, அதன்மேல் சுழுமுனை திறந்து அவ்வழியே சென்று, விளங்கும்படி தலையில் ஊமத்தம் பூவைச் சூடிய இறைவரது திருவடிக்கீழ் சித்தத்தை நிறுத்தி வைத்தவர்கள் இம்மையிலே வீடுபேற்றை அடைந்த செல்வர்கள்[5].

உத்தமம் தானத் தறம்பொரு
விற்ப மொடிடியெறிந்து
வித்தகத் தானத் தெருவழிக்
கொண்டு விளங்கச் சென்னி
மத்தவைத் தான் திருப்பாத
கமல மலரடிக்கீழ்ச்
சித்தம்வைத் தாரென்பர் வீடுபே
றெய்திய செல்வார்களே

பிரமன் முதலாகிற காரணக் கடவுளர்-ஐவர்க்கும் உரிய ஐந்து தாமரைகருடலிருக்கும் தானங்களைக் கடந்து மேற்சென்று அப்பால் நிறைவுடையதாய், உட்பொருளாய் சுய சோதியாய் உள்ள சிவம் ஞான ஒளிவீசும் நாதாந்தத்தில் சித்தத்தை நிறுத்தலினாலே, சிவத்தினிடத்தே நிறுத்திய சித்தத்தை உடைமையால் சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் என்பவராவர்.

தாரணயால் சிவத்தை அடைதலாவது அட்டாங்க யோகத்துள் இமயம் நிஃமத் ஆசனம் பிரணாயாமம் பிரத்தியாகாரம்.

என்றும் ஐந்தினையும் பயின்று, மேல் தாரணை என்ற யோக வழியால் சிவத்தினில் சித்தத்தை நிலை பெறுத்தல் இது. இது உடலில் குண்டலித்தானத்திலுள்ள குண்டலித்தானத்தில் சத்தியைப் பிரவைத்தால் எழுப்பிச் சுழுமுனை வழியாக மேலே செலுத்தலாம்.

ஐந்து கடவுளர்தம் பதங்கடத்தல் என்பது

1. முதல் நாற்கோணம்-பொன்னிறம்-லகார அக்கரம் உடைமை பிருதிவியை மண் இதயத் தானத்தில் வைத்து அதன் கடவுளாகிய பிரம தேவரை தியானித்தல்

2. பின் அதன் மேற்சென்று இரண்டாவது இருகோணம் (தாமரை என்றும் கூறுவர்) வெண்ணிறம் வகார அக்கரம் உடைய அப்பு (நீர்) வைக்கண்டத் தானத்தில் வைத்து அதன் கடவுளாகிய விட்டுணுவைத் தியானித்தலும் பின் அதன் மேற்சென்று

3. மூன்றாவது முக்கோணம் - செந்நிறம் - வகார அக்கரம் உடைய தேயு (தீ) வை உண்ணாக்கின தானத்தில் வைத்து அதன் கடவுளாகிய உருத்திரமூர்த்தியைத் தியானித்தலும் பின் அதன் மேற்சென்று

4. நான்காவது அறுகோணம் - கருநிறம் - யகார அக்கரம் உடைய வாயுவைப் புருள நடுத்தர தானத்தில் வைத்து அதன் கடவுளாகிய மகேச மூர்த்தியைத் தியானித்தலும் பின் அதன் மேற்சென்று

5. ஐந்தாவது வட்டப் - புகைநிறம். உரகாரவக்கரம் உடைய ஆகாயத்தை பிரமந்திரத் தானத்தில் வைத்து அதன் கடவுளாகிய சதாசிவமூர்த்தியைத் தியானித்தலும்

அவ்வூர்மூர்த்திகளை ஆங்காங்கும் தரிசித்தலும், அத் தியானத்தில் அசைவற்றிருந்து சென்று முத்திக்கபாடம் திறக்க ஆறாவதாகிய நாதாந்தத்தில் சேறலுமாம்.

## 4. 2 மந்திர வடிவங்கள்

### 4. 2. 1 அத்துவாக்களை உறுப்புகளாகக் கொண்ட சிவவடிவம்

சிவபிரானது வடிவங்களில் காணும் உறுப்புகள் யாவும், மக்களது உடல் உறுப்பில் காணப்படும் என்பு, தோல், இரத்தம் தோய்ந்தன போலன்று. அத்துவாக்களே உடல் உறுப்புகளாகக் கொண்டமைந்த வடிவமாகும்.

அத்துவா எனல் வழி என்பதாகும்.

அதாவது உயிர்களின் மலபந்தத்தை அறுத்துசிவஞானத்தை அடைவதற்கு வகுத்த, அதாவது கன்மம் ஈட்டுவதற்கும் பரகதி அடைவதற்கும் வழியாகும்.

இவ் அத்துவாக்கள் ஆறு.

| | | |
|---|---|---|
| மந்திராத்துவா | 11 | |
| பதாத்துவா | 81 | இம்மூன்றும் சொல்வடிவம் |
| வன்னாத்துவா | 51 | |
| புவனாத்துவா | 224 | |
| தத்துவாத்துவா | 36 | இம்மூன்றும் பொருள்வடிவம் |
| கலாத்துமா | 5 | |

"தத்துவம் ஆறாறு தன்மனு வேழ்கோடி
மெய்த்தகு வண்ணம்ஐம் பானொன்று மேதினி
ஒத்திரு நூற்றிரு பான்நான்கெண் பானொன்று
வைத்த பதங்கலை யோரைந்தும் வந்தவே"[1]

இவ்வத்துவாக்கள் ஆறும் சிவவடிவில் உள்ள தன்மை

மந்திராத்துவா 11ம் குருதி (இரத்தம்)

பதாத்துவா 81ம் நரம்புகள்

வன்னாத்துவா 51ம் தோல்
புவனாத்துவா 224ம் உரோமங்கள்
தத்துவாத்துவா 36ம் என்பும் தசையும்
கலாத்துவா 5ம் உறுப்புகள்

இவ்வாறு உறுப்புகளால் அமைந்துள்ள அத்துவாக்களை

"மந்திரமே சோரியா, வான்பதமே மாமுடியாத்
தொந்தமுறும் வன்னமே தோக்காப்-பந்தணையால்
ஒத்தபுவனத்துருவே உரோமமத்
தத்துவங்களே சத்ததாதுவா - வைத்த
கலையே அவயவமாக் காட்டும் அத்துவாவின்
நிலையே வடிவாய் நின்றோய்[8]

என்று குறிப்பிடுகின்றார் குமரகுருபரர்

இவ்வாறு கூறப்பட்ட ஆறு அத்துவாக்களின் விவரத்தையும் இவை சிவபிரானது வடிவில் எங்கெங்கு அமைந்துள்ளன என்பதையும் படத்துடன் விளக்கப்பட்டுள்ளதைக் காணலாம். படம்39

## படவிளக்கம்

அருவுரு வடிவாகிய சிவலிங்கம் உருவடிவாகிய சிவவடிவுடன் இணைக்கப் பெற்று, அதன் கண் ஐம்பெரும் பூதங்களான மண் (பிரிதிவி), நீர்(அப்பு) அனல்(தேயு)வலி(வாயு)வெளி(ஆகாயம்) ஆகியவற்றை, அடிமுதல் உச்சிவரை பிரித்துக் காட்டப் பெற்றுள்ளது.

இவ்வைம்பெரும்பூத மண்டலங்களில் இவ் அத்துவாக்கள் இடம்பெற்றுள்ளதை எண்வடிவில் படத்திலும் பெயர்கள் தனியாகவும் குறிக்கப் பெற்றுள்ளன.

சொல்வடிவாகிய மந்திரம், பதம், வன்னம் ஆகிய மூன்று

அத்துவாக்களை உறுப்புகளாகக் கொண்ட

**சிவவடிவம்**

| மண்டலங்கள் | மந்திரம் 11ம் இரத்தம் | பதம் 81ம் நரம்பு | வன்னம் 51ம் தோல் | புவனம் 224ம் உரோமம் |
|---|---|---|---|---|
| வெளி மண்டலம் | 3 | 1 | 16 | 15 |
| வளி மண்டலம் | 2 | 10 | 3 | 18 |
| அனல மண்டலம் | 2 | 20 | 7 | 27 |
| நீர மண்டலம் | 2 | 21 | 24 | 56 |
| நில மண்டலம் | 2 | 28 | 1 | 108 |

| தத்துவம் 36ம் எலும்பு தசையும் | கலைகள் 5ம் அவயங்கள் | தொழில்கள் | மூர்த்திகள் | தத்துவம் |
|---|---|---|---|---|
| 2 | சாந்தியாதீத கலை திருமுடி | அருளல் | சதாசிவன் | சிவ தத்துவம் |
| 3 | சாந்தி கலை திருமுகம் | மறைத்தல் | மகேசன் | |
| 7 | வித்தியாகலை மார்பு | அழித்தல் | உருத்திரன் | வித்தியா தத்துவம் |
| 23 | பிரதிட்டாகலை குய்யம் | காத்தல் | திருமால் | ஆன்ம தத்துவம் |
| 1 | நிவர்த்திகலை முழந்தாள் | படைத்தல் | பிரமன் | |

படம் 39 ஆய்வாளர் ஆய்ந்து வரைந்தது

அத்துவாக்களை உறுப்புகளாகக்
கொண்ட
## சிவ வடிவம்

| மண்டலங்கள் | வெளி மண்டலம் | வளி மண்டலம் | அனல் மண்டலம் | நீர் மண்டலம் | நில மண்டலம் |
|---|---|---|---|---|---|
| மந்திரம் 11ம் இரத்தம் | 3 | 2 | 2 | 2 | 2 |
| பதமந்திரம் 81ம் நரம்பு | 1 | 10 | 20 | 21 | 28 |
| வன்னம் 51ம் தோல் | 16 | 3 | 7 | 24 | 1 |
| புவனம் 224ம் உரோமங்கள் | 15 | 18 | 27 | 56 | 108 |

| தத்துவம் 36ம் [illegible] | கலைகள் 5ம் அவயங்கள் | தொழில்கள் | மூர்த்திகள் | தத்துவம் |
|---|---|---|---|---|
| 2 | சாந்தியாதீத கலை திருமுடி | அருளல் | சதாசிவன் | சிவ தத்துவம் |
| 3 | சாந்தி கலை திருமுகம் | மறைத்தல் | மகேசன் | |
| 7 | வித்தியாகலை மார்பு | அழித்தல் | உருத்திரன் | வித்தியா தத்துவம் |
| 23 | பிரதிட்டாகலை குய்யம் | காத்தல் | திருமால் | ஆன்ம தத்துவம் |
| 1 | நிவிர்த்திகலை முழந்தாள் | படைத்தல் | பிரமன் | |

அத்துவாக்களும் திருமுடி முதல் வெளிமண்டலத்திலிருந்து வரிசையாகக் கீழ்நோக்கியும், பொருள்வடிவான புவனம், தத்துவம், கலை ஆகிய மூன்று அத்துவாக்களும் திருவடியில் மண் மண்டலத்திலிருந்து மேல்நோக்கியும் வரிசையாக அமைந்துள்ள தன்மை முறையே விளக்கப் பெற்றுள்ளது.

1. மந்திராத்துவா 11-ம் குருதி
(இரத்தம்)

| | | |
|---|---|---|
| 1. | வெளிமண்டலத்தில் சிவ, ஈசான, அத்திர ... ... | 3 |
| 2. | வளிமண்டலத்தில் தத்புருட, கவச. ... ... ... ... | 2 |
| 3. | வளிமண்டலத்தில் வாமதேவ, சிரோ ... ... ... | 2 |
| 4. | நீர்மண்டலத்தில் வாமதேவ, சிரோ ... ... ... ... | 2 |
| 5. | மண்மண்டலத்தில் சத்யோசாத இருதய ... | 2 |
| | ஆக மந்திரங்கள் ... ... | 11 |

2. பதாத்துவா 81ம் நரம்புகள்[8]

1. வெளிமண்டலத்தில்

ஓம் 1

2. வளிமண்டலத்தில்

| | |
|---|---|
| வியோமயாபினே | அநாச்ரிதாய |
| வியோமரூபை | த்ருவாய |
| சர்வவியாபிணி | சாசுவதாய |
| சிவாய | யோகபீடசம்சிதாய |
| அனந்தாயா | நித்யயோகினி |
| அநாதாய | 11 |

3. அனல் மண்டலத்தில்

| | |
|---|---|
| த்யானகாராய | குஹ்யாதிகுஹ்யாய |
| ஓம்நமச்சிவாய | கோப்த்ரே |

| | |
|---|---|
| சர்வப்ரபவே | அநிதநாய |
| சிவாய | சர்வயோகாதிக்ருதாய |
| ஈசானமூர்த்தாய | சர்வவித்யாதிபாய |
| தத்புருடவக்தராய | சோதிரூபாய |
| அகோரஇருதயாய | பரமேசுவரபராய |
| வாமதேவகுஹ்யாய | அசேதநஅசேதந |
| சத்யோசாதமூர்த்தயே | வியோமின்வியோமின் |
| ஓம்நமோநம | வியாபின்வியாபின் 20 |

4. நீர்மண்டலத்தில்

| | |
|---|---|
| அரூபிந்அரூபிந் | ஓம்பு |
| ப்ரதமப்ரதம | ஓம்புன |
| தேசஸ்தேச | ஓம்சுவ |
| சோதிர்சோதி | அந்தன |
| அருப | நிதந |
| அநக்நி | நிதோத்பவ |
| அத்ரும | சிவ |
| அபசும | சர்வ |
| அநாதே | பரமாத்மந் |
| நாநா | மகேசுவர் |
| தூ தூ தூ தூ | 21 |

5. மண்மண்டலத்தில்

| | |
|---|---|
| மகாதேவ | பூர்வஸ்தித |
| சத்பாவேசுவர | சாக்ஷிசாக்ஷி |
| மகாதேவ | துருதுரு |
| யோகாதிபதே | பதங்கபதங்க |

| | |
|---|---|
| முஞ்சமுஞ்ச | பிங்கபிங்க |
| ப்ரதமப்ரதம | ஞானஞான |
| சர்வசர்வ | சப்தசப்த |
| பவபவ | சூட்சமசூட்சம |
| பவோத்பவ | சிவ |
| சர்வபூதசுகப்ரத | சர்வ |
| சர்வசாந்நித்யகர | சர்வத |
| பிர்மவிஷ்ணுருத்ரபர் | ஓம்நமோநம |
| அநர்ச்சிதஅநர்ச்சித | ஓம்சிவாயநமோநம |
| அசம்சுதஅசம்சுத | ஓம் 28 |

ஆக பத தாத்துவா ... ... ... 81
... ... நரம்புகள்

3 வன்னாத்துவா[10]

வடமொழி உயிரும் உடம்பும் ஆன 51 எழுத்துக்கள் தோல்

1. வெளிமண்டலத்தில்

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, ரு, ருரு, லு, லுலு, ஏ, ஐ, ஓ, ஔ, அம், அஹ என்னும் உயிர் எழுத்துக்கள் 16

2. வளிமண்டலத்தில்

க$^{1}$, க$^{2}$, க$^{3}$, என்னும் (மெய்யில் 1-3) 3

3. அனல்மண்டலத்தில்

க$^{4}$, ங, ச$^{1}$, ச$^{2}$, ச$^{3}$, ச$^{4}$, ஞ (மெய்யில் 4-10) 7

4. நீர்மண்டலத்தில்

ட$^{1}$, ட$^{2}$, ட$^{3}$, ட$^{4}$, ண, த$^{1}$, த$^{2}$, த$^{3}$, த$^{4}$, ந, ப$^{1}$, ப$^{2}$, ப$^{3}$, ப$^{4}$, ம, ய, ர, ல, வ, ஸ, ஷ, ஸ, ஹ, ஸ. மெய்யில் (11-34) 24

5. மண்மண்டலத்தில்

க்ஷ மெய்யில்(35வது) 1

ஐந்துமண்டலங்களுக்கும் 16 3 7 24 1 51

## 4. புவனாத்துவா புவனங்கள் 224ம் உரோமங்கள்

### 1. மண்மண்டலத்தில் 108

| | | |
|---|---|---|
| காலாக்கினி | சீக்கிர | சம்போத்திரு |
| கூழ்மாண்ட | இலகு | வியோத்திரு |
| ஆடகேசுவர | வாயுவேக | தருமபதி |
| பிரம | சூக்கும 40 | அதருமபதி |
| வைணவ | தீக்கண | அக்கினிருத்ர |
| உருத்திர | கயாந்தக | உதாசன |
| இடப | பஞ்சாந்தக | பிங்கல |
| இடபதர | பஞ்சசிக | காதக 80 |
| அனந்த | கபர்த்தி | அர |
| குரோதன 10 | மேகவாகன | சுவலன |
| மாருதாசன | பெல | தகன |
| சிரசன | அதிபெல | பப்புரு |
| உதும்பரீச | பாசவத்த | பற்பாந்தக |
| பணீந்திர | மாபெல 50 | கயாந்தக |
| வச்சிர | சுவேத | காபலீச |
| தமுட்டிரி | செயபத்திர | அச |
| வித்யாதிஷ | தீர்க்கவாகு | புத்த |

ஈசான
சர்வஞ்ஞ
ஞானபுக்கு 20
வேதபார
சுரேச
சருவ
சேட்ட
பூதபால
பெலிப்ரிய
நிதீச
உருபவான்
தன்னிய
சவுமியதேக 30
சடாதர
இலக்குமிதர
இரத்தினதர
கிரீதர
பிரசாத
பிரகாமந

சலாந்தக
மேகநாத
சுனாத
நிருதி
மாரண
அந்திரு
குரூரதிட்டி 60
பயாந்தக
ஊர்த்துவசேப
விருபாக்க
துமிர
உலோகித
தமுட்டிரி
யாமிய
மிருத்தியு
அர
தாத்திரு 70
விதாத்திரு
கருத்திரு

வச்சிரதேக 90
பிரமர்த்தன
விபூத
அவ்விய
சாத்த
பினாகி
திரிசசாகி
சம்பு
விபு
கணாத்தியக்க
திரியக்க 100
திருதசேச
சம்வாக
விவாக
நப
இலீச்சு
திரிலோசன
வீரபத்திர
பத்ரகாளி 108

## 2. நீர்மண்டலத்தில் [109—144] 56

அமரேச
பிரபாச
நைமிச

நாகல
விமலேசுர
அட்டகாச

தூலேச்சர
தலேச்சர
பைசாச

| | | |
|---|---|---|
| புட்கர | மயேந்திர | இராக்கத |
| ஆசாடி | பூமேச | இயக்க |
| திண்டிமுண்டி | வத்திரபத | காந்தருச |
| பாரபூத | உருத்திரகோடி | ஐந்திர |
| இலகுளீச | அவிமுக்த் | சௌமிய |
| அரிச்சந்திர | மகாலய | பிராகேச |
| ஸ்ரீசயில | கோகர்ண | பிராம |
| செற்பேச | பத்திரகர்ண | அகிருத |
| ஆமிராதிகேசுர | சுவர்ணாக்க | கிருத |
| மத்திமேச | தாணு | வைரவ |
| மாகாகான | சகலண்ட | பிராம |
| கோதார | துவிரண்ட | வைணவ |
| பைரவ | மாகோட | கௌமார |
| கயை | மண்டலேச்சுர | ஔம |
| குருக்கேத்திர | காளாஞ்சர | சிரீகண்ட |
| நகல | சங்குன்ன | 56 |

## 3. அனல் மண்டலத்தில் (155-191) 27

| | | |
|---|---|---|
| வாம | அனந்த | சிகேத |
| வீம | ஏகசிவ | அங்குட்டமாத்திர |
| உக்கிர | குரோத | ஈசான |
| பவ | சண்ட | ஏகேக்கண |
| ஈசான | சோதி | ஏகபிங்க |

| | | | |
|---|---|---|---|
| ஏகவீர | சமுவர்த்த | பவோற்பவ | |
| பிரசண்ட | சூர | வாமதேவ | |
| அச | ஏகவீர | புவனேச | 27 |

## 4. வளிமண்டலத்தில் (192-209) 18

| | | | |
|---|---|---|---|
| வாமை | பலப்பிதமனி | ஏகருத்ர | |
| சேட்டை | சர்வபூததமனி | ஏனநேத்திர | |
| இரௌத்திரி | மனோன்மனி | சிவோத்தம | |
| காளி | சிகண்டி | சூக்கும | |
| கலவிகரணி | சிகண்ட | அனந்த | |
| கலவிகரணி | திரிமூர்த்தி | சதாசிவ | 18 |

## 5. வெளிமண்டலத்தில் (210-224) 15

| | | | |
|---|---|---|---|
| நிவிர்த்தி | இத்திகை | வியாபினி | |
| பிரதிட்டை | தீபிகை | வியோமருபை | |
| வித்தை | உரோசிகை | அனந்தை | |
| சாந்தி | மோதிகை | அனாதை | |
| சாந்தியாதீதை | ஊர்த்துவகை | அநாசிருதை | 15 |

ஆக 108 + 56 + 27 + 18 + 15 = 224

5 தத்துவாத்துவா 36ம் எலும்பும் தசையுமாய் இருப்பது

1. மண்மண்டலத்தில்

பிரிதிவி

2. நீர்மண்டலத்தில் (2-24) 23

| | | | |
|---|---|---|---|
| அப்பு | சத்தம் | சட்சு | |
| தேயு | உபத்தம் | துவக்கு | |
| வாயு | பாயுரு | சுரோத்திரம் | |
| ஆகாயம் | பாலி | பனம் | |
| கந்தம் | பாதம் | அகங்காரம் | |
| ரசம் | வாக்கு | புத்தி | |
| ரூபம் | ஆக்கிராணம் | சித்தம் | |
| பரிசம் | சிங்வுவை | | 23 |

3. அனல் மண்டலத்தில் (25-31) 7

| | | |
|---|---|---|
| புருடன் | கலை | மாயை |
| அராகம் | நியதி | |
| வித்தை | காலம் | |

4. வளிமண்டலத்தில் (32-34) 3

| | | |
|---|---|---|
| சுத்தவித்தை | ஈச்சரம் | சாதாக்கியம் |

5. வெளிமண்டலத்தில் (35-36) 2

| | |
|---|---|
| விந்து | நாதம் |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆக | 1 | 23 | 7 | 3 | 2 | 36 |

6 கலாத்துவா 5ம் அவயவங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | மண்மண்டலத்தில் | நிவிர்த்திகலை | திருவடி |
| 2. | நீர்மண்டலத்தில் | பிரதிட்டாகலை | குய்யம் |
| 3. | அனல்மண்டலத்தில் | வித்தியகலை | மார்பு |
| 4. | வளிமண்டலத்தில் | சாந்திகலை | திருமுகம் |
| 5. | வெளிமண்டலத்தில் | காந்தியாதீதகலை | திருமுடி |

## 4.2.2 திருவைந்தெழுத்தில் தில்லை ஆடல்வல்லான்

படம்: 40

"கற்பனை கடந்தசோதி கருணையே உருவமாகி
அற்புதக் கோலநீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோமமாகும் திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடஞ் செய்கின்ற பூங்கழல் போற்றி
போற்றி"[11]

"வித்தக நீறணிவார் வினைப் பகைக்கு'
அத்திரமாவன அஞ்செழுத்துமே[12]

'நாவினுக்கருங்கலம் நமச்சிவாயவே'[13]

'திருவாய் பொலிய சிவாயநம என நீறணிந்தேன்'[14]

'நற்றவா உனை நான் மறக்கினும் சொல்லும்நா
நமச்சிவாயவே'[15]

'நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க'[16]

'வாயிலே வைக்கும் அளவில் மருந்தாகி
தீயபிறவி நோய் தீர்க்குமே - கயிலாயத்து
எம்பெருமான் அஞ்செழுத்து'[17]

'சிவாயநம என்று சிந்தித்திருப்போர்க்கு
அபாயம் ஒருநாளும் அங்கில்லை'[18]

என்றெல்லாம் போற்றப்படும் திருஐந்தெழுத்து (பஞ்சாட்சரம்) சைவ சாதனங்கள் மூன்றனுள் (திருவைந்தெழுத்து, திருநீறு, கண்டிகை) முதன்மையாய், உள்ளத்தில் சிந்தித்து வாயினால் முறைப்படி ஓத வேண்டிய பெருமையினை உடையதாகும்.

சைவாகமங்களும் நான்மறைகளும் தமக்கு நாயகமாகவும் தாயகமாகவும் இத்திருவெழுத்துக்களையே கொண்டு விளங்கு கிறது. இதனை

"வேதநான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே .." [19]

"செந்தழலோம்பிய செம்மை வேதியர்க்கு
அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே" [20]

என்று ஞானசம்பந்தர் நவில்கின்றார்.

மேலும் நான்மறைகளின் நடுவில் ஒளிதரும் சீவரத்தினமாய்

"விண்ணினார் பணிந்தேத்த வியப்புறும்
மண்ணினார் மறவாது சிவாய என்று
எண்ணினார்க் கிடமாம் எழில்வாகனம்
பண்ணினார் அவர் பாலைத்துறையலே" [21]

என்று வைத்துப் போற்றப்பெறும் இத்திருவைந்தெழுத்தின் பெருமை அளவிடற்கரியது.

மந்திரங்களில் உயர்ந்தது திருவைந்தெழுத்து.
தத்துவங்களில் உயர்ந்தது சிவதத்துவம்
மந்திரவாக்கியங்களில் உயர்ந்தது துரியசிவம்

எனச் சைவ சமயம் சாற்றும்.

காண வீடுபேறளிக்கும் சிதம்பரத்தின்கண் சிற்பர வியோம மாகிய பரவெளியில் ஆனந்தக் கூத்தியற்றும் ஆடவல்லானின் திருவடிவம் இத்திருவைந்தெழுத்தால் ஆனதாகும்.

சிதம்பரம் அல்லாத மற்றத் திருத்தலங்களில் உள்ள ஆடல் வல்லானது திருவடிவம் மகேஸ்வர வடிவங்கள் இருபத்தைந்துள் ஒன்றாகுமே தவிர அறிவுவெளி (ஞானகாய) சிதம்பர சிற்சபா நாதரல்லர். மகேசுவர வடிவங்களில் ஒன்றாக விளங்கும் நடராசரது வடிவம் பஞ்சப் பிரத சடாங்க[22] மந்திரத்தால் அமைந்தது. ஆனால் தத்துவங்கடந்த கடவுளாகிய தில்லை நடராசர் திருவைந்தெழுத்தே வடிவானார்.

நகரம் — திருவடி
மகரம் — உந்தி
சிகரம் — தோள் — தூல பஞ்சாக்கர வடிவம்
வகரம் — திருமுகம்
யகரம் — திருமுடி

"ஆடம்படிகேள் அம்பலத்தான் ஐயனே
நாடும் திருவடியில் நகரம் கூடும்
மகரம் உதரம், வளர்தோள் சிகரம்
பகரும் முகம்வ, முடிய ப்பார்[23]

சிகரம் — உடுக்கை
வகரம் — வீசிய திருகை
யகரம் — அபயத்"
நகரம் — அனலேந்திய" — முத்திபஞ்சாக்கர வடிவம்
மகரம் — ஊன்றிய திருவடி

"சேர்க்கும் துடிசிகரம், சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம்-பார்க்கில் இறைக்கு
அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்
தங்கும் மகரமது தான்"[24]

ஓங்காரமான பிரணவமே திருவாசி, இத்திருவாசிகன் ஐம்பத் தோறு சுடர்கள் 51 அக்கரங்களாகும.

"ஓங்காரமே நல்திருவாசி, உற்றதனில்
நீங்கா எழுத்தே நிறைசுடராம்-ஆங்காரம்
அற்றார் அறிவர் அணிஅம்பலத்தான் ஆடலிது
பெற்றார் பிறப்பற்றார்பின்."[25]

இவ்வாறு திருவைத்தெழுத்தின் வடிவாய, தில்லையம்பலவன் ஆடும் திருக்கூத்து ஐந்தாழில் ஆற்றுகிறது.

| | |
|---|---|
| துடிஉடுக்கைஒலியில் | — படைத்தல் |
| அமைந்தகரம் | — காத்தல் |
| அனல் | — அழித்தல் |
| ஊன்றிய திருவடி | — மறைத்தல் |
| வீசியகரம் | — அருளல் |

"தோற்றம் துடியதனில் தோயும் திதியமைப்பில்,
சாற்றிடும் அங்கியிலே சங்காரம்-ஊற்றமாம்
ஊன்றும் மலர்ப்தத்தில் உற்றிரோதம் முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"[26]

தூலபஞ்சாக்கரமாகிய 'நமசிவாய, திருவைந்தெழுத்தின் 120 மாற்றுவரிசையில் சிவவடிவ உறுப்புகள்

தில்லைச்சிற்றம்பலத்தில் ஆனந்தக் கூத்தியற்றும் ஆடல்வல்லான் திருவடிவம் 'நமசிவாய' என்னும் திருவைந்தொழுத்தால் ஆனது.

இத்திருவைந்தெழுத்துக்கள் ஒவ்வொன்றையும் தனித்தனி முன்வைத்து அடுத்துவரும் நான்கு எழுத்துக்களை இடம் மாற்றி அமைத்து ஒவ்வொரு வரிசைக்கும்

| | | |
|---|---|---|
| நகார வரிசைக்கு | | 24 |
| மகார | ” | 24 |
| சிகார | ” | 24 |
| வகார | ” | 24 |
| யகார | ” | 24 |

ஆக வரிசை 120 ஆகப் பிரித்து ஒவ்வொன்றும் சிவ பிரானின் உச்சிமுதல் திருவடிவரை உறுப்புகளாகவும், ஆடை அணிகளாகவும் உருவகப்படுத்தியுள்ளது.

இத்தகையதொரு அமைப்பு சோணாட்டு காவிரித் தென் கரைத் தேவாரத் தலமான தென்குடித்திட்டையின் வடமொழி தலபுராணமாக 'ஸ்ரீதெட்சிணாக் குடீத் வீபமகாத்மியம் என்னும் நூலின் அனுபந்தத்தில் உள்ள குறிப்பு தமிழில் மொழி பெயர்க்கப்பெற்று அடுத்துக் குறிக்கப் பெற்றுள்ளது.

## நகாரவரிசை - சிவ வடிவ உறுப்புகள்

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | ” | 1 | ந | ம | சி | வா | ய | தலையின் முன்புறம் |
| 2. | ” | 2 | ந | ம | சி | வா | ய | தலையின் நடு பாகம் |
| 3. | ” | 3 | ந | ம | வா | சி | ய | தலையின் பின்புறம் |
| 4. | ” | 4 | ந | ம | வா | ய | சி | நெற்றியின் வலப்பக்கம் |
| 5. | ” | 5 | ந | ம | ய | சி | வா | நெற்றியின் நடுபாகம் |
| 6. | ” | 6 | ந | ம | ய | வா | சி | நெற்றியின் இடப்பக்கம் |
| 7. | ” | 1 | ந | சி | ம | வா | ய | வலது புருவம் |
| 8. | ” | 2 | ந | சி | ம | ய | வா | இடது புருவம் |
| 9. | ” | 3 | ந | சி | வா | ம | ய | வலதுகண் |
| 10. | ” | 4 | ந | சி | வா | ய | ம | இடதுகண் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 11. | ” | 5 | ந | சி | ய | ம | வா | நெற்றிகண் |
| 12, | ” | 6 | ந | சி | ய | வா | ம | வலதுகண் விழி |
| 13. | ” | 1 | ந | வா | ம | சி | ய | இடதுகண்விழி |
| 14. | ” | 2 | ந | வா | ம | ய | சி | நெற்றிக்கண்விழி |
| 15. | ” | 3 | ந | வா | சி | ம | ய | மூக்கின் அடிப்பகுதி |
| 16. | ” | 4 | ந | வா | சி | ய | ம | மூக்கு |
| 17. | ” | 5 | ந | வா | ய | ம | சி | மூக்கின் வலத்துவாரம் |
| 18. | ” | 6 | ந | வா | ய | சி | ம | மூக்கின் இடத்துவாரம் |
| 19 | ” | 1 | ந | ய | ம | சி | வா | வலதுகாதின் செவிப் படலம் |
| 20 | ” | 2 | ந | ய | ம | வா | சி | இடதுகாதில் ” |
| 21 | ” | 3 | ந | ய | சி | ம | வா | வலதுகாதில் தொங்கல் |
| 22 | ” | 4 | ந | ய | சி | வா | ம | இடதுகாதின்தொங்கல் |
| 23 | ” | 5 | ந | ய | வா | ம | சி | நாவின் அடிப்பகுதி |
| 24 | ” | 6 | ந | ய | வா | சி | ம | நாவின் நடுப்பகுதி |

## மகார வரிசை சிவ வடிவ உறுப்புகள்

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 25 | ” | 1 | ம | ந | சி | வா | ய | நாவின் நுனி |
| 26 | ” | 2 | ம | ந | சி | ய | வா | மேல்உதடு |
| 27 | ” | 3 | ம | ந | வா | சி | ய | கீழ்உதடு |
| 28 | ” | 4 | ம | ந | வா | ய | சி | மேற்பல்வரிசை |
| 29 | ” | 5 | ம | ந | ய | சி | வா | கீழ்ப்பல்வரிசை |
| 30 | ’ | 6 | ம | ந | ய | வா | சி | முகவாய் |
| 31 | ” | 1 | ம | சி | ந | வா | ய | வலதுதாள் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 32 | ” | 2 | ம | சி | ந | ய | வா | இடதுதாள் |
| 33 | ” | 3 | ம | சி | வா | ந | ய | கழுத்தின் முன்பகுதி |
| 34 | ” | 4 | ம | சி | வா | ய | ந | கழுத்தின் பின்பகுதி |
| 35 | | 5 | ம | சி | ய | ந | வா | தாடையின் வலப்பக்கம் |
| 36 | ” | 6 | ம | ச | ய | வா | ந | தாடையின் இடப்பக்கம் |
| 37 | ” | 1 | ம | வா | ந | சி | ய | வலதுதோள் |
| 38 | ” | 2 | ம | வா | ந | ய | சி | இடதுதோள் |
| 39 | ” | 3 | ம | வா | சி | ந | ய | வலதுகைமூட்டு |
| 40 | 2 | 4 | ம | வா | சி | ய | ந | இடதுகைமூட்டு |
| 41 | ” | 5 | ம | வா | ய | ந | சி | வலதுகை |
| 42 | ” | 6 | ம | வா | ய | சி | ந | இடதுகை |
| 43 | ” | 1 | ம | ய | ந | சி | வா | வலதுகை நடுப்பகுதி |
| 44 | ” | 2 | ம | ய | ந | வா | சி | இடதுகைநடுப்பகுதி |
| 45 | ” | 3 | ம | ய | சி | ந | வா | வலதுமுழங்கை நீழ்நடு |
| 46 | ” | 4 | ம | ய | சி | வா | ந | இடதுமுழங்கை கீழ்நடு |
| 47 | ” | 5 | ம | ய | வா | ந | சி | வலதுகை கீழ்மூட்டு |
| 48 | ” | 6 | ம | ய | வா | சி | ந | இடதுகை கீழ்மூட்டு |

## சிகார வரிசை சிவ வடிவ உறுப்புகள்

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 49 | ” | 1 | சி | ந | ம | வா | ய | வலது புறங்கை |
| 50 | ” | 2 | சி | ந | ம | ய | வா | இடதுபுறங்கை |
| 51 | ” | 3 | சி | ந | வா | ம | ய | வலது கைத்தலம் |
| 52 | ” | 4 | சி | ந | வா | ய | ம | இடது கைத்தலம் |
| 53 | ” | 5 | சி | ந | ய | ம | வா | வலதுகை கட்டைவிரல் |
| 54 | ” | 6 | சி | ந | ய | வா | ம | இடதுகை கட்டைவிரல் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 55 | ” | 1 | சி | ம | ந | வா | ய | வலதுகை ஆள்காட்டி விரல் |
| 56 | ” | 2 | சி | ம | ந | ய | வா | இடதுகை ஆள்காட்டி விரல் |
| 5 | ” | 3 | சி | ம | வா | ய | ந | வலதுகை நடுவிரல் |
| 58 | ” | 4 | சி | ம | வா | ய | ந | இடதுகை நடுவிரல் |
| 59 | ” | 5 | சி | ம | ய | ந | வா | வலதுகை மோதிரவிரல் |
| 60 | ” | 6 | சி | ம | ய | வா | ந | இடதுகை மோதிரவிரல் |
| 61 | ” | 1 | சி | வா | ந | ம | ய | வலதுகை சுண்டுவிரல் |
| 62 | ” | 2 | சி | வா | ந | ய | ம | இடதுகை சுண்டுவிரல் |
| 63 | ” | 3 | சி | வா | ம | ந | ய | வலதுகை பின்புறம் |
| 64 | ” | 4 | சி | வா | ம | ய | ந | இடதுகை பின்புறம் |
| 65 | ” | 5 | சி | வா | ய | ந | ம | மார்பின் நடுப்பகுதி |
| 66 | ” | 6 | சி | வா | ய | ம | ந | மார்பின் மேற்பகுதி |
| 67 | ” | 1 | சி | ய | ந | ம | வா | வலது மூலை |
| 68 | ” | 2 | சி | ய | ந | வா | ம | இடது மூலை |
| 69 | ” | 3 | சி | ய | ம | ந | வா | மூலையின் மத்தி |
| 70 | ” | 4 | சி | ய | ம | வா | ந | வலது கமுக்கட்டு |
| 71 | ” | 5 | சி | ய | வா | ந | ம | இடது கமுக்கட்டு |
| 72 | ” | 6 | சி | ய | வா | ம | ந | தொப்புள் |

## வகார வரிசை சிவ வடிவ உறுப்புகள்

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 73 | ” | 1 | வா | ந | ம | சி | ய | அடி வயிறு |
| 74 | ” | 2 | வா | ந | ம | ய | சி | இடை |
| 75 | ” | 3 | வா | ந | சி | ம | ய | இடையின் பின்பகுதி |
| 76 | ” | 4 | வா | ந | சி | ய | ம | பின்இடையில் கீழ்ப்பகுதி |
| 77 | ” | 5 | வா | ந | ய | ம | சி | பின்இடையின் நடு |
| 78 | ” | 6 | வா | ந | ய | சி | ம | வலதுபுறம் |
| 79 | ” | 1 | வா | ம | ந | சி | ய | இடதுபுறம் |
| 80 | ” | 2 | வா | ம | ந | ய | சி | முதுகு எலும்பு |
| 81 | ” | 3 | வா | ம | சி | ந | ய | இருக்கை அடிவாய் |
| 82 | ” | 4 | வா | ம | சி | ய | ந | ஆண்குறி |
| 83 | ” | 5 | வா | ம | வ | ந | சி | வலதுவிலா |
| 84 | ” | 6 | வா | ம | வ | சி | ந | இடதுவிலா |
| 85 | ” | 1 | வா | சி | ந | ம | ய | வலதுதுடைஅடி |
| 86 | ” | 2 | வா | சி | ந | ய | ம | வலதுதுடைநடு |
| 87 | ” | 3 | வா | சி | ம | ந | ய | வலதுஇருக்கை அடிப் பாகம் |
| 88 | ” | 4 | வா | சி | ம | ய | ந | வலது முழங்கால் |
| 89 | ” | 5 | வா | சி | ய | ந | ம | வலது கணுக்கால் |
| 90 | ” | 6 | வா | சி | ய | ம | ந | வலது பாகம் |
| 91 | ” | 1 | வா | ய | ந | சி | சி | இடதுபாகம் |
| 92 | ” | 2 | வா | ய | ந | சி | ம | வலது குதிக்கால் |
| 93 | ” | 3 | வா | ய | ம | ந | சி | வலதுகால் |
| 94 | ” | 4 | வா | ய | ம | சி | ந | இடது துடைஅடி |

# யகார வரிசை சிவ வடிவ உறுப்புகள்

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 95 | ” | 5 | வா | ய | சி | ந | ம | இடதுதுடைநடு |
| 96 | ” | 6 | வா | ய | சி | ம | ந | இடது இருக்கை அடிப் பாகம் |
| 97 | ” | 1 | ய | ந | ம | சி | வா | இடதுமுழங்கால் |
| 98 | ” | 2 | ய | ந | ம | வா | சி | இடது கணுக்கால் |
| 99 | ” | 3 | ய | ந | சி | ம | வா | இடப்பக்கம் |
| 100 | ” | 4 | ய | ந | சி | வா | ம | இடதுஇடை |
| 101 | ” | 5 | ய | ந | வா | ம | சி | இடது குதிக்கால் |
| 102 | ” | 6 | ய | ந | வா | சி | ம | இடதுகால் |
| 103 | ” | 1 | ய | ம | ந | சி | வா | வலதுகால் கட்டைவிரல் |
| 104 | ” | 2 | ய | ம | ந | வா | சி | வலது இரண்டாவதுவிரல் |
| 105 | ” | 3 | ய | ம | சி | ந | வா | வலதுகால் நடுவிரல் |
| 106 | ” | 4 | ய | ம | சி | வ | ந | வலதுகால் நான்காவது விரல் |
| 107 | ” | 5 | ய | ம | வா | ந | சி | வலது சின்னவிரல் |
| 108 | ” | 6 | ய | ம | வா | சி | ந | இடதுகால் கட்டைவிரல் |
| 109 | ” | 1 | ய | சி | ந | ம | வா | இடதுகால் இரண்டாவது விரல் |
| 110 | ” | 2 | ய | சி | ந | வா | ம | இடதுகால் நடுவிரல் |
| 111 | ” | 3 | ய | சி | க | ந | வா | இடதுகால் நான்காவது விரல் |
| 112 | ” | 4 | ய | சி | ம | வா | ந | இடதுகால் சின்னவிரல் |
| 113 | ” | 5 | ய | சி | வா | ந | ம | வலதுகால் அடி |
| 114 | ” | 6 | ய | சி | வா | ம | ந | இடதுகால் அடி |
| 115 | ” | 1 | ய | வா | ந | ம | சி | மூச்சு |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 116 | ” | 2 | ய | வா | ந | சி | ம | இடைஆடை |
| 117 | ” | 3 | ய | வா | ம | ந | சி | கழுத்து அணி |
| 118 | ” | 4 | ய | வா | ம | சி | ந | பூணூல் |
| 119 | ” | 5 | ய | வா | சி | ந | ம | இருக்கை (ஆசன) அடி |
| 120 | ” | 6 | ய | வா | சி | ம | ந | பரசுமுதலிய படைக் கலங்கள் |

## 4. 2. 4 சிவயசிவ என்னும் மந்திரவடிவில் சோமாஸ் கந்தர்

சோமாஸ்கந்தர் வடிவம் ஓரே இருக்கையில் சிவபிரான், உமை இருக்க நடுவில் முருகனை இருத்திக் காணும் தோற்றம் இங்கு 'சிவயசிவ' என்னும் மந்திரம்

முதலில் வரும் 'சி' சிவபிரானையும்

இறுதியில் ஐந்தாவது இடத்தில் வரும் 'வ' உமை அம்மை யையும் நடுவில் வரும் 'ய' கந்தனையும் குறித்து சோமாக்கந்தர் வடிவைக் காட்டி நிற்கிறது.

## 4. 2. 5 சிவ சிவ என்னும் மந்திரவடிவில் அம்மை யப்பர்

“சிவ சிவ என்கிலர் தீவினையாளர்
சிவ சிவ என்றிடத் தீவினை மாளுஞ்
சிவ சிவ என்றிடத் தேவரு மாவர்
சிவ சிவ என்னத் சிவகதி தானே”[27]

இப்பாடலில் வரும் 'சிவசிவ' என்னும் மந்திரம் சிந்திக்கப் பாலது. திருவைந் தெழுத்தாய சிவமூல மந்திரத்தில்(நமசிவாய) வரும் சிவாய என்னும் மூன்றெழுத்துள்

சி — சிவபெருமான்

வ — உமை

ய — உயிர்

இவற்றைக் குறிப்பதாகும். இங்கு சிவ சிவ' என்னும் மந்திரச் சொற்றொடரில் சிவமும் சக்தியும் ஒன்றுக்குள் ஒன்றடங்கி அம்மையப்பராய் விளங்குகிறது.

இத்தொடரில் முதலில் வரும் 'சி', இரண்டாவதாக மூன்றாவது இடத்தில் வரும் சி. இரண்டிற்கும் இடையில்வரும் முதல் 'வ'. சிவத்தின் இடை அம்மை இருப்பதையும்

அடுத்த இத்தொடரில் இரண்டாம் இடத்தில் உள்ள 'வ'. நான்காம் இடத்தில் உள்ள 'வ' இரண்டிற்கும் இடையில் வரும் இரண்டாவதான 'சி' அம்மைக்கு இடையில் சிவம் இருப்பதைக் குறிக்கிறது.

இவ்வாறு இச் 'சிவ சிவ'. என்னும் மந்திரம் அம்மையப்பராய் விளங்க இதனை உள்ளத்தே உச்சரிக்கும் அடியார்கள் மனதில் சிவமும் சத்தியும் இடம்பெறுகிறது. இதனை வாதவூரடிகள்

"உடையாள் உன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்ப தானால் அடியேன் உன்
அடியார் நடுவுள் இருக்கும்
அருளைப் புரியாய் பொன் னம்பலத்தெம்
முடியா முதலே என்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே[28]

என்ற இப்பாடலில் முதல் இரண்டடிகளில் காட்டி விளக்கு இவ்வாறு அம்மையப்பரின் 'சிவ சிவ' மந்திரத்தை உள்ளத்தில் பெற்றுள்ள அடியவர்கள் இடையில் தம்மை இருத்தி வைக்கு மாறு உலகுய்ய நடமாடும் ஆடல்வல்லானிடம் விண்ணப்பிக் கிறார்.

## 4.3 யந்திர உருவில் சிவ வடிவம்

திருக்கோயில்களில் கருவறையில் முதன்மையான தெய்வத் திரு உருவச் சிலைகளை அவற்றின் இருக்கைகளில் (பீடத்தில) வைக்கும் முன்னம், அவ்வுருவச் சிலைகட்கு ஆற்றல் (சக்தி) மிகுவதற்கு கருங்கல் இருக்கையின் அடியில் நவரத்தினக் கற்க ளையும், மந்திரம் வரையப் பெற்ற ஐந்து உலோகங்களினால் ஆன தகட்டையும் வைத்து பின் இது ஆடாது அசையாது இருக்க எண்வகை மருந்துக் கலப்பை (அட்டபந்தனத்தை)[29] வைத்து உறுதிப்படுத்துவார்கள்

இவ்வாறு சிலைகட்கு அடியில் வைத்கப்பெறும் மந்திரத் தகட்டில் எழுதியுள்ள மந்திரம் மறைபொருளாகவே (இரகசிய மாகவே) இருக்கும்.

மற்றொரு வகையில் இவ்வியந்திரங்கள் உலோகத் தகட்டில் அல்லது அத்தி அரசு, வில்வம் ஆகிய பலகைகளில் வரைந்து வெளிப்படையாகப் பூசிக்கப்படுகிறது. இவ்வகையில் கோயில் களிலும், வீட்டிற்குளளும், வாயிற்படியிலும் தங்கள் தங்கள் விருப்பம் நிறைவேறத்தக்கவாறு பல்வகைத் தெய்வங்களின் பெயரால் இயந்திரஙகள் வைக்கப்பெறும்.

எல்லோரும் கண்டு தரிசித்துப் பேறு பெறும் வண்ணம் சில கோயில்களில் அங்கு சிறப்புடன் பூசிக்கப்பெறும் தெய்வ வடிவங் களுக்கு அருகில் இவ்வியந்திரங்கள் வைக்கப் பெற்றுள்ளன.

தில்லைச் திருச்சிற்றம்பலத்தில் உலகுய்ய நடமாடும் ஆடல் வல்லானின் வலப்பக்கம் யந்திரம் ஒன்று சிதம்பர ரகசியம் என்று குறிப்பிடப்பெறும் இடத்தில் இருக்கிறது.

மற்றும் வீரட்டத் தலங்களுள் ஒன்றான திருக்கடவூரில் (திருக்கடையூரில்) காலனைக் காய்ந்தபெம்மான் (காலசம்கார மூர்த்தி) அருகிலும், வழுவூர் யானையை உரித்த பெம்மான் (கசாசூரசம்காரமூர்த்தி) அருகிலும் மற்றும் திருவெண்காடு முதலிய கோயில்களிலும் சிவபிரானது இயந்திர வடிவங்கள் வைத்து வழிபடப்படுகின்றன.

இதனடியில் சில யந்திர வடிவங்கள் திருமூலர் திருமந்திரப் பாடல்களிலிருந்து படத்துடன் விளக்கப்பட்டுள்ளன.

திருவாவடுதுறை ஆதீன திருமந்திரப் பதிப்பில் வெளிவந்துள்ள இயந்திரப் படங்களில் ஏழினை அனுமதி பெற்று இதனடியில் கொடுக்கப்பட்டுள்ளது.

——o——

யந்திரம் — படம் 1

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சி | வ | ய | ந | ம | சி | வ | ய | ந | ம | சி |
| ம | ம | ம | ம | ம | ம | ம | ம | ம | ம | வ் |
| ந | ம | ந | ந | ந | ந | ந | ந | ந | ம | ய் |
| ய | ம | ந | ய | ய | ய | ய | ய | ந | ம் | ந் |
| வ் | ம | ந | ய | வ | வ | வ | ய | ந | ம | ம் |
| சி | ம | ந | ய | வ | சி | வ | ய | ந | ம | சி |
| ம் | ம் | ந | ய | வ் | வ் | வ | ய | ந | ம் | வ் |
| ந் | ம் | ந | ய | ய் | ய் | ய | ய | ந | ம் | ய் |
| ய் | ம | ந | ந் | ந | ந் | ந | ந | ந | ம | ந் |
| வ் | ம | ம | ம | ம | ம் | ம | ம | ம | ம | ம் |
| சி | ம | ந | ய | வ | சி | ம | ந | ய | வ | சி |

915 வது திருமந்திர விளக்கம்

தானொன்றி வாழிடந் தன்னெழுத் தேயாகுந்
தானொன்று மிந்நான்குந் தன்பே ரெழுத்தாகுந்
தானொன்று நாற்கோணந் தன்னைந் தெழுத்தாகுந்
தானொன்றி வேயொன்று மவ்வரன் தானே[30]

### யந்திரம் — படம் 2

946-வது திருமந்திர விளக்கம்

பரமாய அஞ்செழுத் துள்நடு வாகப்
பரமாய நவசிம பார்க்கில் பவயநசி
பரமாய சியநம வாம்பாத் தோதிற்
பரமாய வாசி மயநமாய் நின்றே[31]

யந்திரம் — படம் 3

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 |
| 17 | சி | வ | ய | ந | ம | 1 |
| 16 | ம | சி | வ | ய | ந | 2 |
| 15 | ந | ம | சி | வ | ய | 3 |
| 14 | ய | ந | ம | சி | வ | 4 |
| 13 | வ | சி | ய | ந | ம | 5 |
| 12 | 11 | 10 | 9 | 8 | 7 | 6 |

### 987, 988-திருமந்திர விளக்கம்

எட்டு வரையின் மேலெட்டு வரைகீறி
இட்ட நடுவுள் இறைவன் எழுத்தொன்றில்
வட்டத்திலேயறை நாற்பத்தெட் டுமிட்டுச்
சிட்டஞ் செழுத்தஞ் செபிசீக் கிரமே[32]

தானவர் சட்டர் சதிரர் இருவர்கள்
ஆனஇம் மூவரோ டாற்றவ ராதிகள்
ஏனைப் பதினைந்தும் விந்துவும் நாதமுஞ்
சேனையுஞ் செய்சிவ சக்கரத் தானே[33]

## யந்திரம் — படம் 4

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | |
| | ய | வ | ய | |
| | வ் | சி | வ | |
| | ய | வ் | ய் | |
| | | | | |

## 996-வது திருமந்திர விளக்கம்

நம்முதல் அவ்வொடு நாவின ராகியே
அம்முத லாகிய எட்டிடை யுற்றிட்டு
உம்முத லாகவே உணர்பவர் உச்சிமேல்
உம்முத லாயவ்வன் உற்றுநின் றானே[34]

யந்திரம் — படம் 5

| | | | | |
|---|---|---|---|---|
| ம | சி | வ | ய | ந |
| ந | ம | சி | வ | ய |
| ய | ந | ம | சி | வ |
| வ | ய | ந | ம | சி |
| சி | வ | ய | ந | ம |

997-வது திருமந்திர விளக்கம்

நின்ற அரசம் பலகைமேல் நேராக
ஒன்றிட மவ்விட்டு ஓலையிற் சாதகந்
துன்று மெழுகையுள் பூற்ச் சுடரிடைத்
தன்ற வெதுப்பிடத் தம்பனங் காணுமே[35]

மண்டலம் — படம் 6





(சத்யோ சாதாதி முகங்களுக்கு ஏற்ப இம்முறை)

1299-வது திருமந்திர விளக்கம்

நாலைந் திடவகை யுள்ளதோர் மண்டலம்
நாலுநல் வீதியுள் நல்ல இலிங்கமாய்
நாலுநற் கோணமும் நந்நா விலிங்கமாய்
நாலுநற் பூநடு நண்ணலவ் வாறே[36]

யந்திரம்—படம் 7




1298-1300 திருமந்திரங்களின் விளக்கம்

நாடறி மண்டலம் நல்விக் குண்டத்துக்
கோடற வீதியுங் கொடர்ந்துள் இரண்டழி
பாடறி பத்துடன் ஆறு நடுவீதி
ஏடற நகலைந் திடவகை யாமே[37]

நாலைந் திடவகை யுள்ளதோர் மண்டலம்
நாலுநல் வீதியுள் நல்ல இலிங்கமாய்
நாலுநற் கோணமும் நந்நா விலிங்கமாய்
நாலுநற் பூநடு நண்ணலவ் வாறே[38]

ஆறிரு பத்துநா லஞ்செழுத் தஞ்சையும்
வேறுரு வாக விளைந்து கிடந்தது
தேறி நிறுமல சிவாய நமவென்று
கூறுமின் கூற்றிற் குறைகளும் இல்லையே[39]

திருமந்திரம் 1298 - 1300

# 4:4 எழுத்து வடிவம்

வடமொழி உயிர் 16 மெய் 35
51 எழுத்துக்கள் (அட்சரங்கள்)

சிவபிரான் வடமொழி-தென்மொழி வடிவமாய் அமைந்துள்ளார் என்பதை 'முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்'

வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும் ஆனவன் காண்' என்றெல்லாம் திருநாவுக்கரசர் பாடுகின்றார்.

இவ்இருவி மொழிகளில் 'உயிரும் உடம்புமா முப்பது முதலே' என்பதன்படி உயிர் பன்னிரெண்டு மெய் பதினெட்டு ஆக முப்பதையும் தமிழ்மொழி முதல் எழுத்துக்களாகக் கொண்டுள்ளது

இது போல் வடமொழியாகிய சமசுகிருதம் உயிர் பதினாறு மெய் முப்பத்தைந்து ஆக ஐம்பத்தொரு எழுத்துக்களை முதல் எழுத்துக்களாகக் கொண்டுள்ளது.

இதனை 51 அட்சரங்கள் என்பர்.

சுத்தமாயை என்பதன் மூலம் தத்துவமான 'விந்து' என்பது சிவப்பிரானின் திருவருட்சத்தியால் அசைக்கப்படும்பொழுது நாதம்' தோன்றுகிறது. அந்த நாதமே ஓங்காரம் ஓங்காரத்தினின்று 51 அட்சரங்கன் தோன்றும் ..எனக் கிரணாகமம் கூறும்[4]

இந்த 51 அட்சரங்களும் அத்துவாக்கள் —ஆறில் ஒன்றாய் வன்னாத்துவா என்ற பெயருடன் சிவபிரானது வித்தியாதேகத்தில் மேல் தோலாக அமைந்துள்ளது.

தில்லை ஆடல்வல்லானது திரு உருவத் தத்துவத்தில் அவரது ஓங்கார வடிவான திருவாசியின் 51 சுடராக விளங்குகிறது.[41]

இவ்வாறாக விளங்கும் இந்த 51 அட்சரங்கள் சிவபிரானது திருஉடம்பின் 51 உறுப்புகளாக அமைந்து விளங்கும் சிறப்பினையும் பெற்றுத்திகழ்கிறது.

| வரிசை எண் | அட்சரங்கள் | தமிழ் உச்சரிப்பு | சிவவடிவ உறுப்பு | வரிசை எண் | அட்சரங்கள் | தமிழ் உச்சரிப்பு | வடிவ சிவ உறுப்புகள் |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | அ | | தலை | 27 | ட$^{1}$ | | வலப்பாதம் |
| 2 | ஆ | | முகம் | 28 | ட$^{2}$ | | வலத்தொடைமூலம் |
| 3 | இ | | வலக்கண் | 29 | ட$^{3}$ | | வலதுமுழந்தாள் |
| 4 | ஈ | | இடக்கண் | 30 | ட$^{4}$ | | வலது கணைக்கால் |
| 5 | உ | | வலதுகாது | 31 | ண | | வலக்கால் விரல்நுதி |
| 6 | ஊ | | இடக்காது | 32 | த$^{1}$ | | இடப்பாதம் |
| 7 | ரு | | வலக்கபோலம் | 33 | த$^{2}$ | | இடத்தொடைமூலம் |
| 8 | ருரு | | இடக்கபோலம் | 34 | த$^{3}$ | | இடதுமுழந்தாள் |
| 9 | லு | | வலதுநாகாபுடம் | 35 | த$^{4}$ | | இடதுகணைக்கால் |
| 10 | லுலு | | இடதுநாகாபுடம் | 36 | ந | | இடதுகால்விரல் நுதி |
| 11 | ஏ | | மேல்உதடு | 37 | ப$^{1}$ | | வலப்பக்கம் |
| 12 | ஐ | | கீழ்உதடு | 38 | ப$^{2}$ | | இடப்பாகம் |
| 13 | ஓ | | மேல்வாய்ப்பல் | 39 | ப$^{3}$ | | முதுகு |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 14 | ஔ | கீழ்வாய்ப்பல் | 40 | ப$^{4}$ | நாபி |
| 15 | அம் | தாலுமூலம் | 41 | ம | வயிறு |
| 16 | அகா | தாலுஅக்கிரம் | 42 | ய | இதயம் |
| 17 | க$^{1}$ | வலப்புயம் | 43 | ர | வலவம்ஸம் |
| 18 | க$^{2}$ | வலதுமுழங்கை | 44 | ல | இடவம்ஸம் |
| 19 | க$^{3}$ | வலதுமணிப்பந்தம் | 45 | வ | கழுத்து |
| 20 | க$^{4}$ | வலதுள்ளங்கை | 46 | ச | வலக்கக்கம் |
| 21 | ங | வலவிரல்நுதி | 47 | ஷ | இடக்கக்கம் |
| 22 | ச$^{1}$ | இடப்புயம் | 48 | ஸ | வலக்கால் மேல்பக்கம் |
| 23 | ச$^{2}$ | இடதுமுழங்கை | 49 | ஹ | இடக்கால்மேல்பக்கம் |
| 24 | ச$^{3}$ | இடமணிப்பந்தம் | 50 | ஸ | இதயமுதல்சிரம்முடிய |
| 25 | ச$^{4}$ | இடதுஉள்ளங்கை | 51 | க்ஷ | இதயமுதல்பாதஅந்த |
| 26 | ஞ | இடவிரல்நுதி | | | |

--- o ---

## 4: 5 ஆகம வடிவம்

சைவ சமயம் நான்மறைகளையும் இருபத்தெட்டு ஆகமங்களையும் அடிப்படையாகக் கொண்டு திகழ்வது. இவ்விரண்டும் முழு முதற்பொருளாகிய சிவபிரானிடத்திலிருந்து தோன்றியவையாகும். நான்மறைகளை ஒரு மரம் எனக் கொண்டால் ஆகமங்கள் இதன் உச்சியில் பழுத்த கனியாகும். ஆகமம் என்னும் சொல்

ஆ — அறிவு, க முத்தி ம ஆணவமல அழிவு ஆகும்.

அறுவகைச் சமயங்களுக்கும் அப்பாற்பட்டது. சித்தாந்த சைவம். இதனை விளக்கக் கூறுவன சிவாகமங்கள் ஆகும்.

> "அஞ்சனமேனி அரிவையோர் பாகத்தன்
> அஞ்சொடிருபது மூன்றுள ஆகமம்"[42]

என்கிறது திருமந்திரம். இவ்விருபத்தெட்டு ஆகமங்களும் சதா சிவ மூர்த்தியின் ஐந்து திருமுகங்களிலிருந்து தோன்றியவையாகும்.

மேற்கு நோக்கிய சத்தியோசாத முகத்திலிருந்து காமிகம், யோகசம், சித்தியம், காரணம், அசிதம் என்னும் ஐந்து ஆகமங்களும்.

வடக்கு நோக்கிய வாமதேவமுகத்திலிருந்து தீப்தம். சூக்குமம், சகத்திரம், அம்சுமான், சுப்பிரபேதம் என்னும் ஐந்து ஆகமங்களும்.

தெற்கு நோக்கிய கோரமுகத்திலிருந்து விசயம், நிசுவாசம், சுவாயம்புவம், அனலம், வீரம் என்னும் ஐந்து ஆகமங்களும்:

கிழக்கு நோக்கிய தத்புருடமுகத்திலிருந்து ரௌரவம் மகுடம், விமலம், சந்திரஞானம், பிம்பம் என்னும் ஐந்து ஆகமங்களும்.

உச்சிமுகமான ஈசானத்திலிருந்து புரோக்தீகம். லலிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேசுவரம், கிரணம், வாதுளம் என்னும் எட்டு ஆகமங்களும் வெளிவந்தன.

இவ்வாகமங்கள் சிவாலய வழிபாட்டிற்குரிய மந்திரங்கள் செயற்பாடுகள் இவை மட்டுமின்றி சிற்பக்கலை, கட்டிடக்கலை, ஓவியக்கலை, தானநூற்கலை, மருத்துவயோகம், மக்கள் வாழ்வு, சிற்றூர், நாடு நகர அமைப்பு முதலான பலவற்றையும் எடுத்துரைக்கின்றன.

இவ்வாறான சிவாகமங்களைத் தன்னிடத்தே ஒன்றிருக்க வேண்டும் தோற்றுவித்த சிவபிரான் இவ் ஆகமங்களைத் தன் திருஉருவில் உறுப்புகளாகவும் கொண்டு விளங்குகிறார்.

| | ஆகமங்கள் | உறுப்புகள் | | ஆகமங்கள் | உறுப்புகள் |
|---|---|---|---|---|---|
| 1 | காமிகம் | திருவடிகள் | 15 | வீரம் | கழுத்து |
| 2 | யோகசம் | கணைக்கால் | 16 | ரௌரவம் | செவிகள் |
| 3 | சிந்தியம் | கால்விரல்கள் | 17 | மகுடம் | திருமுடி |
| 4 | காரணம் | கெண்டை கால்கள் | 18 | விமலம் | கைகள் |
| 5 | அசிதம் | முழந்தாள் | 19 | சந்திரஞானம் | மார்பு |
| 6 | தீப்தம் | தொடைகள் | 20 | பிம்பம் | திருமுகம் |
| 7 | சூட்சமம் | மறைவிடம் (குய்யம்) | 21 | புரோத்கீதம் | நாக்கு |
| 8 | சகத்திரம் | இடுப்பு | 22 | லலிதம் | கன்னங்கள் |
| 9 | அம்சுமான் | முதுகு | 23 | சித்தம் | நெற்றி |
| 10 | சுப்ரபேதம் | தொப்புள் | 24 | சந்தானம் | குண்டலங்கள் |
| 11 | விசயம் | வயிறு | 25 | சர்வோக்தம் | பூணூல் |
| 12 | நிச்வாசம் | இதயம் | 26 | பாரமேசுவரம் | மாலை |
| 13 | சுவாயம்புவம் | மூலை | 27 | கிரணம் | அணிகள் |
| 14 | அனலம் | கண்கள் | 28 | வாதுளம் | ஆடை |

"அண்ணல் அருளால் அருளுஞ் சிவாகமம்
எண்ணில் இருபத்தெண் கோடிநூ றாயிரம்
விண்ணவர் ஈசன் விழுப்பம் உரைத்தனத் (து)
எண்ணிநின் றப்பொருள் ஏத்துவன் யானே"[43]
"ஆகமம் ஆகிநின்று
அண்ணிப்பான் தாள் வாழ்க"[44]

## அடிக்குறிப்புகள்

1. சுந்தரர் திருமுறை 7, பதிகம் 48, பாடல் 1
2. பெரியபுராணம் வாயிலார் நாயனார்: பாட்டு எண் 8
3. அப்பர் திருமுறை 4, பதிகம் 76, பாடல் 4
4. கந்தர் கலிவெண்பா வரி 34, 35, 36
5. பெரியபுராண விளக்கஉரை சி. கே. சுப்பிரமணிய முதலியார் சித்தத்தை சிவன்பாலே வைத்தார்புராணம்
6. திருத்தொண்டர் திருவந்தாதி பாட்டு எண் 72
7. மேற்கண்ட 6இன் விளக்கஉரை சி. கே. சுப்பிரமணிய முதலியார்
8. கந்தர்கலிவெண்பா வரி
9. சிவபூசையில் வரும் பதமந்திரங்கள் 81
10. வடமொழி உயிரும் மெய்யுமான 51 எழுத்துக்கள்
11. பெரியபுராணம் தில்லைவாழ் அந்தணர்புராணம் பாட்டு 2
12. சம்பந்தர் திருமுறை 3, பதிகம் 22, பாடல் 10
13. அப்பர் திருமுறை 4, பதிகம் 4, பாடல் 6
14. அப்பர் திருமுறை 4 பதிகம் 94, பாடல் 6
15. சுந்தரர் திருமுறை 7. " 48, " 1
16. திருவாசகம் சிவபுராணம் தொடக்க வரி 1

17. 11ஆந்தி முறை நக்கீரதேவ நாயனார்

18. நல்வழி-ஔவையார், பாட்டு 25

19. சம்பந்தர் திருமுறை 3, பதிகம் 39. பாடல் 1

20. சம்பந்தர் திருமுறை 3, பதிகம் 22, பாடல் 22

21. அப்பர் திருமுறை 5, பதிகம் 11, பாடல் 6

22. ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோ சாதம் என்னும் ஐந்தும் இருதயம், சிரசு, சிகா, நேத்திரம், கவசம், அஸ்திரம் என்னும் 6ம்

23. உண்மை விளக்கம் பாடல் எண் 34

24. மேலது 35

25. மேலது 36

26. மேலது 38

27. திருமந்திரம் சூக்குமபஞ்சாக்கரம் பாட்டு எண் 8

28. திருவாசகம் கோவில்மூத்த திருப்பதிகம் பாட்டு எண் 1

29. அட்டபந்தனம், சுக்கான்கல், கா க்கல், குங்கிலியம், கொம்பரக்கு, மெழுகு, பஞ்சுலிங்கம், வெண்ணெய் இந்த எட்டையும் விதிக்கப்பட்ட அளவில் செய்து கலந்த சேர்க்கை

30. திருமந்திரம், திரு அம்பலச்சக்கரம் பாட்டு எண் 2

31. மேலது 33

32. மேலது 74

33. மேலது 75

34. மேலது 83

35. மேலது 84

36. சாம்பளிமண்டலச் சக்கரம் 3

37. மேலது 2

38. மேலது 3

39. மேலது 4

40. நாதம் என்னும் கோயிலிலே சபாரத்தினம் பக்கம் 17

41. இந்த ஆய்வு 'சிவவடிவங்கள்' இத் திருஐந்தெழுத்து வடிவில் நடராசர் என்பதில் காண்க

42. திருமந்திரம் ஆகமச் சிறப்பு பாட்டு எண் 1

43. மேலது 2

44. திருவாசகம் சிவபுராணம் வரி 4

——o——

# 5. இலக்கியவடிவங்கள்

## 5 சிவபிரானின் எளிவந்த கோலங்கள் (மானிட வடிவங்கள்)

நீலமேனிவாலிழை பாகத்துப் பரமன் தம் அடியவர்களுக்கு அவர் தம் வாழ்வில் அருள்புரிந்த தன்மைகள் பலவிதமாகும்.

1 தோன்றாத் துணையாயிருந்து அருளியது

2 கனவின்கண் காட்சிதந்து அருளியது

3 விண்மொழியாய் உரைத்தருளியது

4 உமையுடன் விடைமீதமர்ந்து காட்சி அருளியது

5 மானிடக்கோலத்தில் வந்தருளியது

6 வேறு பகுத்தறிவற்ற உயிரின வடிவில் வந்து அருளியது.

இவ்வாறு பல்வகையில் சிவபிரான் தம்மடியவர்களுக்கு அருள்புரியும் தன்மைகளைப் பழைய வரலாறுகள்(புராணங்கள்) எடுத்தியம்புகின்றன.

இப்பழைய வரலாறுகளுள் சிவபிரானது முக்கண்கள் எனப் போற்றப்படும் கந்தபுராணம், திருவிளையாடற்புராணம், பெரியபுராணம் என்னும் மூன்றனுள் பின் இரண்டாகிய திருவிளையாடற்புராணம், பெரியபுராணம் இரண்டிலும் சிவபிரான் மானிடக் கோலத்தில் எளிவந்த தன்மையினைக் காண்போம்.

## 5:1 முதற்கண் திருவிளையாடற் புராணத்துள் வரும் சிவபிரானது எளிவந்த தோற்றங்கள்

திருவிளையாடற் புராணத்துள் சிவபிரானின் எளிவந்தமானிடக் கோலங்கள்

தென்னகத்துத் தொன்மையான நகரங்களுள் மதுரையும் ஒன்று. மதுரை என்றதுமே அனைவரது உள்ளத்திலும்உதிப்பது அங்குள்ள அங்கயற்கண்ணியம்மையின் திருக்கோயிலும் சங்கத் தமிழும் ஆகும். மதுரையின் அமைச்சராயிருந்து அடியவராய் வந்தவர் வாதவூரடிகள். தில்லையில் ஆடலரசை நோக்கி "சிறைவான் புனற்றில்லை சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும் உறைவான் உயர்மதில் கூடலின் ஆய்ந்த வொண்டீந் தமிழின் துறைவாய் நுழைந்தனையோ?" என்கிறார்.

செந்தில் முருகன் அருள்பெற்ற குமரகுருபரர், உலக அன்னையாகிய உமாதேவியார் தடாதகைப்பிராட்டி என்ற பெயருடன் மதுரையில் ஆட்சி செய்ததும், முழுமுதல் பொருளாய சிவபிரான் சவுந்தரபாண்டியனாக வந்து மதுரையில் அம்மையை மணந்து கொண்டதும், முருகப்பெருமான் இவர்களுக்கு மகனாய்த் தோன்றி உக்கிர பாண்டியன் எனப் பெயர்கொண்டு இருந்ததன் காரணம்? மதுரை நகரத் தமிழ்ச்சுவைமீதுகொண்ட விருப்பமேயாகும் என்பதை

"தமரநீர்ப் புவன முழுதொருங் கீன்றாள்
 தடாதகா தேவியென் றொருபேர்
தரிக்கவந் ததுவுந் தனிமுத லொருநீ
 சவுந்தர மாறனா னதுவும்
குமரவேள் வழுதி யுக்கிர வெனப்பேர்
 கொண்டதுந் தண்டமிழ் மதுரம்
கூண்டுணவெழுந்த வேட்கையா லெனிலிக்
 கொழிதமிழ்ப் பெருமையா ரறிவார்"

என்று பாடுகின்றார்.

இத்தகைய மதுரை மாநகரில் அங்கயற்கண்ணி பங்கனாகிய ஆலவாய் அழகர் அடியவர்கள் உய்யும் வண்ணம் அறுபத்து நான்கு திருவிளையாடல்களைச் செய்துள்ளார். இவ்வரலாற்றின் திருவிளையாடல்களை எடுத்தியம்பும் வடமொழி, தமிழ்மொழி

நூல்களுள் பரஞ்சோதி முனிவர் பாடியுள்ள திருவிளையாடற் புராணம் மிகச் சிறந்தது.

இதனுள் வரும் நிகழ்ச்சிகளில் சொக்கேசர் மானிட வடிவந் தாங்கி வந்து அருள்புரிந்த கோலச் சிறப்பினை மட்டும் அடியில் காண்போம்

## 5. 1, 1 திருவிளையாடல் புராணத்துள்

அருமறைக்கு பொருளுரைக்க ஆசிரியராக வந்தது

(வேதத்துக்குப் பொருள் அருளிச் செய்த படலம்)

ஒருசமயம் நைமி சாரண்ய முனிவர்கள் அருமறைப் பொருளை உணர மதுரை மாநகர் வந்து ஆலவாய் அண்ணலை வழிபட்டு தம் எண்ணம் நிறைவேற வேண்டி நின்றனர். அவ் வமயம் அண்ணலார் முப்பத்திரண்டு இலக்கணமும் நிறைந்த பதினாறாண்டு வயதுக் காளையராய் தோன்றி அருளியவடிவம்

நெற்றியில் விளங்கும் திருநீற்றின் முப்புரிநுதல் விழியை மறைத்தது. திருச்செவிகளில் விளங்கும் சிவமணிப் பொற் குழையின் ஒளி இருளை அகற்றியது. திருமார்பில் வெள்ளிய ஆடை வலப்பக்கம் ஒதுங்க முந்நூல் விளங்கியது. முத்துக்கள் இடையிட்ட உருத்திராக்கமணி கழுத்தில் ஒளிமிகுந்து இலங் கியது. கைகளிலும் தோள்களிலும் உருத்திராக்கம் விளங்க தோள் அணிகளும் அரையில் பட்டிகையும் அணிந்து, திருவடி களில் சிலம்பொலி இசைக்க வீரக்கழனும் விளங்க வலக்கையில் மோதிரமும். இடக்கையில் சுவடி இருக்கவும், நான்மறைகளாகிய பாதுகைகளை திருவடியில் சூடி, புன்முறுவலுடன் அறிவே வடிவான ஆசிரியராய் சிவபிரான் விளங்கினார்.

## 5. 1. 2 சோமசுந்தரக்கடவுளின் வணிகர் வேடக் கோலம் (மாணிக்கம் விற்க வந்த படலம்)

வீரபாண்டியன் என்ற மதுரை மன்னன் காட்டில் ஒரு புலியால் கொல்லப்பட்டான். பின் இவனது மகனுக்கு முடி

கூட்ட அமைச்சர் முதலாயினோர் முயன்றபோது பழைய மணி முடி காணப்பெறவில்லை. இதனால் மனம் கலங்கி வேறு ஒரு புதிய மணிமுடி செய்யதக்க மாணிக்கக் கற்கள் கிடைக்காமை யால் அரசகுமாரனை அழைத்துக் கொண்டு ஆலவாய்த் திருக் கோயிலை அடைந்தனர். அப்போது அவர்கள் குறைதீர்க்க அண்ணல் ஆலவாய் அரன்மாணிக்கக் கற்கள் விற்கும் வணி கராய்த் தோன்றினார்.

அக்கோலத்தோற்றம்: அரையில் அழகிய ஆடையும் தோளில் ஒளிவீசும் பட்டாடையும் அணிந்து, மார்பில் மறை விதிப்படி அணிந்து முந்நூலும் வானவில்லை ஒத்த ஆரமும் விளங்கியது. தோளில் புரளுமாறு அழகுமிக்க ஒளிவீசும் குண் டலம் திருச்செவியில் அணிந்து நவமணிப் பொதியைச் சுமந்த வராய் அவர் தம் மறைமலர்த் திருவடிகள் மண்ணில் தோய எதிர்வந்து நின்றார்.

## 5. 1. 3 எல்லாம் வல்ல சித்தராய் வந்த கோலம் (எல்லாம் வல்ல சித்தரான படலம்)

மதுரையம்பதி வாழ் மக்களும், மன்னர் மணிமுடிச் செழியன் அபிடேக பாண்டியனும் பேரின்ப வீடெய்த கூடல் நாயகனாகிய சோமசுந்தரப் பெருமான் சித்தர் வேடந்தாங்கி எழுந்தருளினார்.

"வட்டமாக நீண்ட சடை. மார்பில் முந்நூல். நீறணி நெற்றி. செவியில் படிக குண்டலங்கள். இடையில் தோலாலான அரைஞாண். தோளில் துவளும் திருநீற்றுப்பை. மார்பில் படிகமாலை. கையினில் மழு. வயிற்றில் கண்டவர் உள்ளம் கவரும் உதரபந்தனன் - புலித்தோல் கோவண ஆடை. இடத் தோளில் யோகப்பட்டிகை. மற்றொரு கையினில் பொற்பூண் அமைந்த புரம்பு. திருவடிகளில் ஒலிக்கும் சிலம்புடன் உபநிடதப் பாதுகையினைச் சூடி நடந்து வந்தார்.

அவ்வமையம் திருமுகத்தில் வியர்வை சிந்த புன்முறுவல் படர்ந்தது.

இவ்வடிவம் (எல்லாம் வல்ல சித்தர்) கற்சிலையாகவும் செப்புத் திருமேனியாகவும் மதுரை கோயிலினுள் இருக்கின்றது.

## 5. 1. 4 விருத்தகுமார பாலராக வந்தது. (விருத்த குமாரபாலரான படலம்)

சிவபத்தி மிகுந்த கௌரி என்ற மங்கை நல்லாள் வைணவக் கணவனுடன் அவனது இல்லத்தில் அவதிப்பட்டு வாழ்ந்து வந்தாள். ஒருநாள் அனைவரும் இவளை மட்டும் தனியே வீட்டில் இருத்தி பூட்டிக் கொண்டு அயலூர் சென்றுவிட்டனர். அப்போது தனியே சிவசிந்தையுடன் இருந்த கௌரியை ஆட்கொள்ள சிவபிரான் கிழவேடந்தாங்கி வந்தார்.

### அக்கிழவேடப் பொலிவு

செவி, கை, மார்பு, தலை, தோள், கழுத்து இவற்றில் உருத்திராக்க மணிகள், கையினில் சுவடி, நீண்ட கயலின் முள் போன்ற நரை, சுருங்கிய கவுள், கனைக்கும் நெஞ்சம். சரிகோவண ஆடை, நடுக்கமுற்ற தலை. மேலாடைதோளில் சரிய திருமார்பில் முந்நூல், மெய்யெலாம் திருநீற்றுப்பூச்சு. இத்தகைய கோலத்தில் கையினில் தண்டு ஊன்றி மற்றொரு கையினில் குடையுடன், கவிழ்ந்தசையும் நடையுடன் வந்தார்.

## 5. 1. 5 வளையல் வணிகராய் வந்த கோலம் (வளையல் விற்ற படலம்)

தங்கள் கணவன்மார்கள் இட்ட சாபத்தினால் தாருகா வனத்து முனிவரது மனைவியர் அனைவரும் கூடல் மாநகரில் வணிக மங்கையராய்ப் பிறந்தனர். பின் மங்கைப் பருவமுற்ற இவர்களுக்கு வளையல் அணிவித்து உய்விக்க மதுரை சோம சுந்தரக் கடவுள் வளையல் வணிகராய் வந்தார். அவ்வணிகக் கோலத் தோற்றம்:

'தம் தலைமீது இருக்கும் கங்கையை மறைத்தார். நஞ்சுண்டு கறுத்த கண்டத்தை மறைத்தார். நெற்றிக் கண்ணை மறைத்தார். தம் இடப்பாதி கொண்ட உமையம்மையையும் மறைத்தார். தம் கையினில் ஏந்திய மான் மழு இரண்டையும் மறைத்தார். வளையல்களைச் சுமந்து மாலறியாச் சேவடிகள் மதுரைநகர்த் தெருவினில் தோய வணிகராக நடந்து வந்தார்.'

## ௫. 1, 6 தண்ணீர்ப்பந்தல் வைத்தது (தண்ணீர் பந்தல் வைத்த படலம்)

இராசேந்திர பாண்டியனது தம்பியின் சூழ்ச்சியினால் காடு வெட்டிய சோழன் என்பான் பாண்டியனது நாட்டில் எதிர் பாராது படையெடுத்து வந்தான். இதனால் அதிர்ச்சியுற்ற பாண்டியன் இராசேந்திரன் தன் குலநாயகராகிய சோமசுந்தரக் கடவுளிடம் குறையிரந்தான். அவ்வமயம் எழுந்த சோமசுந்தரக் கடவுளின் விண்மொழிக்கிசைய படைகொண்டு சோழனை எதிர்த்தான். போர் இடையில் பாண்டியனது படை வீரர்களுக்காக ஆலவாய் அண்ணல் தண்ணீர்ப்பந்தர் ஒன்று வைத்து அங்கிருந்த கோலம்.

நெற்றியினில் திருநீறு, திருச்செவிகளில் நறுமண மலர், திருவடியில் ஒற்றைக் கிண்கிணி, கச்சினால் கண்டுண்ட தோலாடை, கண்டார் அனைவரது மனம் கவரும் இனிய புன் முருவல் கொண்ட திருமுகம்.

புண்டர நுதலுங் காதின் புறத்தணி மலரும் பாத
முண்டக மலர்மே லொற்றைக் கிண்கிணி முழக்குங்
கச்சியாப் புண்டதோ லுடையுங் கண்டா ருள்ளமுங்
கண்ணுங் கொள்ளை
கொண்டபுன் னகையுமுள்ளக் கருணையின் குறிப்புத்
தோன்ற'[2]

## 5. 1. 7 இரசவாதம் செய்ய சித்தராய் வந்தது (இரசவாதம் செய்த படலம்)

பாண்டி நாட்டுச் சிவப்பதிகளில் ஒன்றான திருப்பூவணத்தின் சிவப்பக்தி மிகுந்த பொன்னனையாள் என்னும் பெண் ஒருத்தி இருந்தாள். இவனார் உறையும் திருக்கோயிலில் நாளும் திருத்தொண்டு புரியும் இவருக்குப் பொன்னார்மேனியனாகிய சிவபிரானுக்குப் பொன்னால் திருவுரு அமைக்க முயன்றாள். இவ்வாறான இவளது எண்ணங்கைகூட இரசவாதத்தால் பொன் கிடைக்க அவளது இல்லத்திற்கு சிவபிரான் சித்தராய் எழுந்தருளினார்

"மெய்யெலாம் வெண்ணீறு விளங்க, கட்டங்கந் தொட்டகையும் யோகப் பட்டிகை அணிந்த இடையும், கோவணத்தின்மீது உடையும், திருமுடியில் செஞ்சடையும் திருநீற்றுப் பையையும் உடைய சித்தராய் எழுந்தருளினார்.

## 5. 1. 8 போர்வீரனாய்த் தோன்றி சோழனை மடுவில் வீட்டியது (சோழனை மடுவில் வீட்டிய படலம்)

பாண்டியன் சுந்தரேசபாதசேகரன் ஆலவாய் அண்ணலின் திருத்தொண்டிலேயே நின்றுவந்தவன். ஒருசமயம் இவனது படையினது பலக்குறையை அறிந்த ஆயிரம் பரிக்கோர் சேவகன் எனும் புனைப் பெயருடைய சோழன் பெரும்படைகொண்டு தாக்கினான். அப்போது பாண்டியன் சொக்கேசர் திருவருளைப் பெற்றுச் சோழன் படைமீது எதிரூர்ந்தான். அப்போது இவனுக்குத் துணையாக, கூடல் நாயகன் பெருவீரராய்ப் பரியூர்ந்து படையுடன் புகுந்தார். இக்கோலச்சிறப்பு:

"இருளில் திங்கள் போல செவியின் தந்தக் குழை, இருளில் வானவிண்மீனைப் போல ஒளிவீசும் முத்துவடம், இருளில் வானவில்லைப் போல வெட்சிக்கண்ணி, மற்றும் மயிற்பீலி, இருளைப்

போக்கும் தந்தக்காப்பு இவற்றை அணிந்து கருத்த திருமேனிய ராய் வளவனுக்குக் காலன் என்னுமாறு கையினில் கொல்வேல் ஒன்றை ஏந்திக் காவிரி நாடன் முன் நின்றார்.

## 5. 1 9 மாமனாக வந்து வழக்குரைத்தது (மாமனாக வந்து வழக்குரைத்த படலம்)

தனபதி என்ற வணிகன் தனக்குப் பிள்ளைப்பேறு இன்மையால் தன் செல்வம் அனைத்தையும் தன் தங்கை மகனுக்கு உடைமையாக்கி, தவத்தை மேற்கொண்டு காட்டிற்குச் சென்றான். இவனது தங்கையின் மகன் சிறுவனாக இருந்தமையால் தனபதியின் தாயத்தார் அச்சிறுவன் பெற்ற செல்வம் அனைத்தையும் கவர்ந்து கொண்டனர். இதனால் வணிகன் தனபதியின் தங்கை மதுரை நாயகன் முன் கண்ணீர்விட்டுக்கலங்கினார். பின் தன் துயிலில் கூடற்பெருமான் அருளியபடி அறநிலையத்தில் வழக்கினைத் தொடர்ந்தாள். அது சமயம் வெள்ளியம்பலவாணர் சிறுவனது மாமன் தனபதிபோல உருவங்கொண்டு அறமன்றத்திற்கு எழுந்தருளினார்.

“திருச்செவியில் அணிந்திருந்த விலை மிகுந்த குழைவிட்டு விட்டு ஒளிவீசிப் பிடருக்கு அழகு செய்தது. தோளில் தோடணி அழகினைத் தந்தது. திருமார்பில் மாணிக்கமாலை தவழ்ந்தது. விரலில் அணிந்திருந்த நீலமணி ஆழி தாமரை மலரில் வண்டுகள் மொய்ப்பது போல் ஒளிவீசியது. அடல்விடை போல் கைவீசிப் பெருமித நடையோடு அறமன்றம் வந்தடைந்தார்சிவபெருமான்.

## 5. 1. 10 விறகு விற்கும் ஆளாய் வந்தது (விறகு விற்ற படலம்)

வரகுணபாண்டியனது அவைக்களத்தில் பாணபத்திரன் என்றும் யாழ்வல்லான் ஒருவன் இருந்தான். இவன் கூடற்பிரானிடம் நிறைந்த பக்தியுடையவன். ஒரு சமயம் ‘ஏமநாதன்’ என்னும் யாழ்ப்பாணன் வடநாட்டிலிருந்து வரகுணனது அவைக்கு வந்து தன்னிடம் யாழிசையில் போட்டியிடப் பாணபத்திரனை அழைத்தான்.

அவ்வமயம் பாணபத்திரன் ஆலவாய்ப் பெருமானிடம் நிகழ இருக்கும் இசைவாதில் வெற்றிக்கு அருள்புரிய வேண்டினான். அண்ணல் ஆலவாய் அரனாரும் ஏமநாதனை வெல்வதற்காக ஒரு விறகு ஆளாய் உருவமாறி எழுந்தருளினார். அவ்வடிவ மாவது:

"அழுக்கு நிறைந்த கிழிந்த ஆடை. ஒளிமிகுந்த செஞ்சடையில் அமுதத்தைப் பொழியும் பிறைமதியை எடுத்துச் செருகியது போல் இடையில் கொடுவாள் செருகப் பெற்றிருந்தது. திருவடிகளில் தேய்ந்து இழுக்குடைய செருப்பு. தோளிலே கிடந்தலைக்கின்ற பழைய பத்தரையுடைய யாழ், ஒளிமிகு குழை அணியும் செவியினில் கொத்தாகிய கள்வின்காய். இவ்வகைத் தோற்றத்துடன் தழைத்த நீண்ட சிகை சரிந்திட விறகினைச் சுமந்து ஏமநாதன் தங்கியிருக்கும் இடத்தை வந்தடைந்தார்.

## 5. 1. 11 இசைவாது வென்றது (இசைவாது வென்ற படலம்)

வரகுணபாண்டியனுக்குப் பின் அவனது மகன் இராசராசன் ஆட்சிபுரிந்த சமயம் இவனது காமக்கிழத்திக்கும் பாணபத்திரனது மனைவிக்கும் இசையினால் பகைமூண்டது. பின் இதனால் ஈழநாட்டிலிருந்து விறலி ஒருத்தியை, வரவழைத்து இவருடன் பத்திரன் மனைவியை இசையில் போட்டியிட அவை கூட்டப் பெற்றது.

இவ்வவைக்கு வருமுன் பத்திமிகு பத்திரன் மனைவி சொக்கேசரை வழிபட்டுத் தனக்குத் துணைநிற்க வேண்டி வந்து சேர்ந்தாள். அவ்வமயம் சிவபிரான் அப்பேரவையில் "மார்பினில் ஆரம் அசைய, தோளில் அணிகலன்கள் ஒளிவிட, அவைக்களத்தில் வந்தமர்ந்து பத்திரன்மனைவிக்கு வெற்றியைத் தந்தார்,

## 5. 1. 12 நன்பாட்டுப் புலவனாய் வந்து தருமிக்குப் பொற்கிழி அருளல்

## (தருமிக்கு பொற்கிழி அளித்த படலம்)

வங்கிய சூடாமணி என்னும் பாண்டியனது ஆட்சிக்காலத்தில் தருமி என்ற ஆதி சைவ அந்தணனுக்கு பொற்கிழி கிடைக்குமாறு சிவபெருமான் அளித்த பாவினில் குற்றங்கண்டார் சங்கத் தலைவராகிய நக்கீரர். அப்போது தருமி சொக்கேசரிடம் இதனை விளம்ப, இறைவன் புலவராக வெளிப்பட்டு வந்த தோற்றம்.

"கண்டிகை, தோளணி ஆழி ஒளிவீசும் முடி, வயிரத்தாலான குழை முதலிய அணிகள் திருமேனியில் விளங்கின. திருநுதலில் முத்தமிழ் வல்லோன் என்பதனை எடுத்துககாட்ட வெண்ணீறு முப்படையாக விளங்கி அறியாமையைக் கிழித்துத் தள்ளியது. விரிகதிர் தவழும் நிலையங்கிமெய்யில் விளங்கியது. கற்றுச் சொல்லிகள் அடைப்பை காளாஞ்சி பொன்னாடை முதலியவற்றைப் பின்னால் சுமந்துவர முத்துக்குடையின்கீழ் பெருமான் புலவர் வடிவில் எழுந்தருளினார். திருவடிகளில் நான்மறைகளும் பாதுகையாய்த் திகழ்ந்தன.

## 5. 1. 13 வலையர் வேடம் கொண்டது

## (வலைவீசிய படலம்)

ஒரு சமயம் சிவபிரான் தந்த சாபத்தினால் பாகம் பிரியானாகிய உமாதேவியார் வலையர் சேரியில் வலைக்குலமகளாய் வளர்ந்தார். நந்தியெம்பெருமான் வலையர் சேரி மருங்கில் கடற்றுறையில் சுறாமீனாகி வலையர்களுக்குப் பேரிடர் விளைவித்தார். இதனால் உமையை வளர்க்கும் பேறு பெற்ற வலையன் அச்சுறாமீனை அடக்குபவர்க்குத் தன் வளர்ப்பு மகளைத் திருமணஞ்செய்து கொடுப்பதாக உறுதி செய்தான்.

இவ்வமயம் வலையர் இல்லத்தில் வளரும் அம்மையை மணக்க அண்ணலார் ஒரு வலைஞராக எழுந்தருளினார்.

காரிருளை முகந்ததை ஒத்த கச்சு. கச்சுடன் இணைத்துக் கட்டின சுரிகை திருத்தோளில் துகில். குடுமியில் தேன் துளிக்கும் நெய்தல் மலர்க்கண்ணி. உடன் இவர்தம் கூட்டத்துள் ஒருவன் ஒரு கடல்வாணன் போல உடுத்திட்ட கோலத்துடன் ஒரு வலையைத் தோளிலிட்டு முதுகிலே மீன் இடும் கூட்டைத் தாங்கிப் பின்னேவர, பாக்கத்தை வந்தடைந்தார்.

## 5. 1. 14 குதிரைச் சேவகனாக வந்தருளியது (நரி பரியாக்கிய படலம்)

அழுது அடி அடைந்தவர் மாணிக்க வாசகர். இவர் பாண்டியன் குதிரைகள் வாங்க அளித்த நிதியனைத்தையும் சிவப்பணியில் செலவு செய்து அதனால் சிறையில் அடைக்கப் பெற்றுப் பெரும் வேதனையுற்றார். அவ்வமயம் கண்ணுதற் பெருங்கடவுள் கானகத்து நரிகளையெல்லாம் பரியாக்கித் தாமும் ஒரு குதிரைமீது குதிரைச் சேவகனாய் அமர்ந்து வந்த கோலம்.

## கண்ணுதலார் அமர்ந்துவந்த குதிரையின் சிறப்பு

மறையே குதிரை. இதற்கு அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கும் கால்கள். ஞானகாண்டம், கருமகாண்டம் என்னும் உணர்வுகள் இரு இரண்டும் செவிகள். பரம், அபரம் என்னும் உணர்வுகள் இரு கண்கள். விதியே முகம். விலக்கே வால். முகமே புறஅணிகள். மந்திரங்கள் சதங்கைகள். ஞாயிறும் திங்களும் அங்க அடிகள். பிரணவமே கடிவாளம். உபநிடதம் அமரும் அணை (சேணம்)

இவ்வாறமைந்த குதிரைமீது ஆலவாய்ப் இண்ணல் குதிரைச் சேவகனாய் இருந்த நிலை.



மண் சுமக்கும் கூலியாளாய் மதுரை நாயகன்

திருவடியில் வார்கழல்கள் மறையாகிய உறையிலிருந்து எடுத்த ஞானமாகிய வாள் இடையில் செருகி ஒளிவீசியது. சாய்ந்த கொண்டை, திருமுடிச்சாத்து வைர உருத்திராக்க மணிமாலை, தொடிகள், குழைகள், திருநுதலில் முப்பட்டை திருநீற்றுப் பூச்சு, இடையில் தூய வெள்ளாடை, கைகளில் காப்பு இவற்றை திருமேனிமீது கொண்டு பரிமேல் அழகுடன் அமர்ந்து விளங்கினார்.

## 5. 1. 15 கூலிஆளாய் மண் சுமந்தது படம் (மண் சுமந்த படலம்)

அரிமர்த்தனபாண்டியன் மணிவாசகருக்கு இழைத்த தண்டனையால் சிவபிரான் வைகை ஆற்றில் பெருவெள்ளம் வரச் செய்தார். வெள்ளம் கரைகளை உடைக்காதிருக்க மதுரை நகர் மக்களை வீடுதவறாது ஆள் ஒருவர் வந்து அடைக்கக் கட்டளையிட்டான் பாண்டியன். அவ்வூரில் சொக்கேசர் மீது இடையறாப் பத்தி கொண்ட வந்தி என்னும் பிட்டுவிற்கும் கிழவிக்கு ஆள் எவரும் கிடைக்கவில்லை. அதனால் அவள் கூடல் நாயகனை வேண்டி நிற்க அவள்பொருட்டுச் சிவபிரான் மண் தூக்கும் கூலிஆளாய் வந்தார். அத்தோற்றமாவது:

அரையில் அழுக்குநிறைந்த பழந்துணி. சிறந்த தொண்டர்கள் சூட்டிய இண்டை மாலையைப் போன்ற சும்மாடு தலையிலிருந்தது. எழுகடலைக் கடந்து திசையைக் கடந்து உவமையைக் கடந்த திருத்தோள்மீது மழுவைக் கடைந்து விளங்கிய மண்வெட்டி விளங்கியது:

"அழுக்கடைந்த பழந்துணியொன்
றரைக்கசைத்து விழுத்தொண்டர்
குழுக்கடந்த விண்டைநிகர்
சுமையடைமேற் கூடைகவிழ்த்
தெழுக்கடந்து திசைகடந்திட்
டிணை கடந்த திருத்தோள்மேல்
மழுக்கடைந்து விளங்கியவாய்
மண்டொடுதிண் படையேந்தி[3]

## 5. 2 திருத்தொண்டர் புராணத்துள் [பெரியபுராணத்துள்]

### சிவபிரானின் எளிவந்தமானிடக் கோலங்கள்

"உமையவள் இறைவர் பாகத்தொடுக்கும்
இறைவர் தொண்டருள் ஒடுக்கம்
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே"[4]
(ஔவையார் — தனிப்பாடல் திரட்டு)

என்பதற்கிணங்க சிவனடியார் (நாயன்மார்) தனியடியார் அறுபத்துமூவர், தொகையடியார் ஒன்பதின்மர் வரலாற்றைப் பத்திச்சுவை நனிசொட்ட எடுத்துரைப்பது பெரியபுராணம், என வழங்கும் திருத்தொண்டர் புராணமாகும். சார்பு நூலாகிய இதற்கு முதல் நூல் திருவாரூர் வள்ளல் வேந்தராகிய (தியாகராசப் பெருமான்) "தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கு மடியேன்" என அடி எடுத்துக் கொடுக்க, நம்பியாரூரராகிய சுந்தரர் பாடிய திருத்தொண்டத்தொகை.

வழிநூல் திருநாரையூர் பொல்லப் பிள்ளையாரின் திருவருளை மிக்க இளமைப் பருவத்தே பெற்ற நம்பியாண்டார் நம்பிகள் பாடியுள்ள திருத்தொண்டர் திருவந்தாதி.

சார்பு நூலாகிய இப்பெரிய புராணத்தைத் தில்லை மன்றுள் ஆடும் நடராசப் பெருமான் "உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்" என்று அடி எடுத்துக் கொடுக்க, செல்வமலி குன்றத்தூர் சேக்கிழார் அடிகள், தில்லை ஆயிரக்கால் மண்டபத்திலிருந்து பாடினார்.

இப்பெரிய புராணத்தில் பேசப்படும் அடியவர்கள் வரலாற்றில், கண்ணுதல் பெருங்கடவுளாகிய சிவபிரான் இடையில், இறுதியில் தோன்றி அருள்புரிந்த தன்மைகள் பல. அவற்றுள் மானிடக் கோலம் தாங்கி இப்புவிமீது அவர்தம் பொன்னடிகள் தோய, நடந்து வந்து அருள்பாலித்த கோலத் தோற்றத்தைக் காண்போம்.

## 5. 2. 1 நம்பியாரூரரை (சுந்தரரை) தடுத்தாட்கொள்ள வந்த முதிய அந்தணர் வடிவம் (பெரிய புராணம் தடுத்தாட்கொண்ட புராணம்)

மாதவம் செய்த தென்திசை வாழ்ந்திடவும், தீதிலாத் திருத்தொண்டத் தொகை தரவும், திருக்கயிலை மால்வரையில் சிவபிரானுக்கு அணுக்கத் தொண்டராயிருந்த ஆலால சுந்தரர், இப்புவியில் திருநாவலூர் என்னும் சிவப்பதியில், சடையனார் என்னும் ஆதிசைவ அந்தணருக்கு, மகவாய்ப் பிறந்தார். இவரது திருப் பெயர் நம்பியாரூரர்.

திருமணப் பருவம் எய்திய இவருக்கு, இம்மண்ணுலகில் பிறந்து வளர்ந்த ஒரு பெண்ணை நிச்சயித்துத் திருமணம் நடந்து கொண்டிருந்தது. அவ்வமயம் இத் திருமணத்தைத் தடுத்து, இருமணம் செய்விக்க, சிவபிரான் முதிய அந்தணராய்த் திருமண இல்லத்தை நோக்கி வந்தடைந்தார்.

*அக்கோலச் சிறப்பு:*

"இருகண்களுக்கு இடையில் உள்ள நெற்றிக் கண்ணை மறைத்து, ஒளி பொருந்திய வெண்துகில் போன்ற நெற்றியில் திருநீற்றொளி திகழ்ந்தது. குளிர்ச்சி பொருந்திய பிறைமதி முதிர்ந்து, கதிர்சாய்ந்த தன்மையை ஒப்ப, வெள்ளிய நரை மயிர்முடி, தாழ்ந்த அசைந்து கிடைக்கவும்,

காதில் உருத்திராக்க மணியால் ஆன குழை தாழ்ந்து தொங்கவும், ஒளி பொருந்தியமணிமார்பில் முந்நூலும், திருத் தோளில் துவளும் மேலாடையும், கை ஒன்றில் வெய்யிலை மறைக்கும் மறைக் குடையும்,

வயிற்றின் அடியில் விளங்கும் சரிகோவணம் பழமை மிகும் படி அதன்மேல் அரையில் அசைந்த ஆடையும், மற்றொரு கையினில் உள்ள மூங்கில் தண்டில் வெள்ளை ஆடை ஒன்றும், நாணற்புல்லும் இருக்க, மூப்பு மிகுதியால் நடை தள்ளாடி வந்த கோலமானது.

செறிந்து வளர்ந்த பேரழகே முதிர்ந்து இவ்வாறு கிழக் கோலமாகியதோ? அல்லது அவ்வாறு இருந்த மூப்பினது உண்மை வடிவமோ? அல்லது மெய்யான வைதிக சைவநெறி யினை உலகில் விளைவித்த மூலப்பொருளோ? எனத் திருமணப் பந்தரில் இருந்தார் அனைவரும் ஐயம் கொள்ளுமாறு வந்தடைந்தார்.

"மொய்த்துவளர் பேரழகு மூத்தவடி வேயோ
அத்தகைய மூப்பெனும் அதன்படிவ மேயோ
மெய்த்தநெறி வைதிகம் விளைத்தமுத லேயோ
இத்தகைய வேடமென ஐயமுற எய்தி"

## 5. 2. 2 திருவதிகையில் நம்பியாரூரருக்குத் திருவடி சூட்டியருள் வந்த முதுவடிவ அந்தணர் கோலம்

இந்நிலவுலகில் வாழும் எச்சமயத்தவரும் முடிவில் அடைய விரும்புவது இறைவனுடைய திருவடிப் பேறாகும். இதனைப் பொதுமறையாகிய திருக்குறள் கடவுள் வாழ்த்தின் மூலம் அறியலாம். இத்தகைய இறைவனது திருவடிச் சுவட்டைத் திருநாவுக்கரசர் வேண்டி திருநல்லூர் என்னும் தலத்தில் பெற்றார் ஆனால் இங்கு அத் திருவடித் தோய்வை நம்பியாரூரருக்கு சிவபிரானே வலியவந்து சூட்டப்பெறும் பேற்றைப் பெற்றார்.

திருவெண்ணெய் நல்லூரில் தடுத்தாட்கொள்ளப் பெற்ற நம்பியாரூரர் திருவதிகைத் தலத்திற்கு வந்து தரிசித்தார். அங்கு அன்று இரவு 'சித்தவடம்' என்னும் திருமடத்தில் சிவபிரானது திருவடியினை உள்ளத்தில் நினைத்தவண்ணம் பள்ளி கொண்டார்.

அவ்வமயம் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள்

முதுமை மிகுந்த அந்தணராய் அம்மடத்திற்குள் புகுந்து நம்பியாரூரரின் திருமுடிமேல் தம் செய்ய சேவடிகளை வைத்து துயில் கொள்வார்போல் படுத்திருந்தார்.

"அதுகண்டு வீரட்டத் தமர்ந்தருளும் அங்கணரும்
முதுவடிவின் மறையவராய் முன்னொருவர் அறியாமே
பொதுமடத்தி னுட்புகுந்து பூந்தாரான் திருமுடிமேல்
பதுமமலர்த் தாள்வைத்துப் பள்ளிகொள்வார் போற்
பயின்றார்."[6]

## 5:2:3 நம்பியாரூரைத் திருக்கூடலையாற்றூருக்கு அழைத்துச் செல்லவந்த வேதியர் கோலம்

(பெரியபுராணம்-ஏயர்கோன் கலிக்காமநாயனார் புராணத்து இடையில்வரும்பகுதி. ... ... நம்பியாரூரர் ...

கொங்கு நாட்டுப் பேரூரில் நிருத்தனாரைத்தரிசித்து மீளும் வழியில் திருமுதுகுன்றம் என்னும் சிவப்பதியை நோக்கிச் சென்றார். அப்போது உமைகேள்வன் வேதியர் கோலம்கொண்டு வழியிடை நம்பியின் முன்நின்றார்.

"செப்பரும் பதியில் சேரார் திருமுது குன்றை நோக்கி
ஒப்பரும் புகழார் செல்லும் ஒருவழி உமையாளோடு
மெய்ப்பரம் பொருளாய் உள்ளார் வேதிய ராகிநின்றார்
முப்புரி நூலுந் தாங்கி நம்பியா ரூரர் முன்பு"[7]

## 5: 2: 4 திருக்குருகாவூரில் நம்பியாரூரருக்குத் தண்ணீரும் பொதிசோறும் அளிக்க வந்த மறை வேதியர் கோலம் (படம் எண் 42)

(பெரியபுராணம் ஏயர்கோன்புராணத்திடை 156-162 பாக்களில் வரும் நிகழ்ச்சி)

நம்பியாரூரராகிய சுந்தரர் தம் ஆறாம் யாத்திரையில் திருவாரூரினின்றும் புறப்பட்டுப் பல தலங்களையும் தரிசித்துக் கொண்டு சீர்காழிக்கு அருகில் உள்ள திருக்குருகாவூர் என்னும்



படம் 42 சுந்தரருக்கு திருக்குருகாவூரில் கட்டமுது அளிக்கவந்த கோலம் — ஆய்வுக்கு வரைந்தது.

சிவத்தலத்தை நோக்கிச் சென்றார். அப்போது இவரை உறு பசியும் நீர்வேட்கையும் வருத்தியது. இதனைப் போக்கத் திருக் குருகாவூர் கண்ணுதலாகிய வெள்ளடைநாதர் வழியில் தண்ணீர் பந்தல் ஒன்று அமைத்து, பொதி சோறும் வைத்துக் கொண்டு வேதியராய் அருள்வேடங்கொண்டு அமர்ந்திருந்தார்.

"வேனிலுறு வெயில்வெம்மை தணிப்பதற்கு
விரைக்குளிர்மென்
பானல்மலர்த் தடம்போலும் பந்தர்ஒரு
பால் அமைத்தே
ஆனமறை வேதியராய் அருள்வேடங்
கொண்டிருந்தார்
மானமருந் திருக்கரத்தார் வன்றொண்டர்
தமைப் பார்த்து"[8]

## 5. 2. 5 திருக்கச்சூரில் நம்பியாரூரருக்குச் சோறு இரந்துவந்து கொடுத்த அந்தணர் கோலம்

(பெ. பு. ஏயர்கோன் புராணம் 176-182)

திருக்குருகாவூரில் இறைவன் அளித்த பொதிசோற்றை உண்டு, பின் தலப்பயணத்தை மேற்கொண்ட நம்பி பல சிவப் பதிகளையும் தரிசித்து, 'கண்ணுதலான் காதல் செய்கோயில்' திருக்கழுக்குன்றத்தைப் பணிந்தார். பின் இதனை அடுத்த, திருக்கச்சூர் — ஆலக்கோயில் என்னும் தலத்தை அடைந்து தரிசனம் செய்து இருந்தபோது அமுதுண்ணும் நேரம் வந்தது.

அவ்வமயம் இவருக்கு அமுது சமைத்தளிக்கும் பரிசனங்கள் வந்தடையாமையால் அக்கச்சூர்மேய மருந்திசர் தம்மின்னுமான் மழுவும், வெவ்வழல்விழியும், மிளிர் கறைக் கண்டமும் மறைத்து அந்தணர் வடிவில் கையில் வெற்றோடு ஒன்று ஏந்தி தம்பியிடம் வந்து "மெய்ப்பசியால் இளைத்திருக்கும் உம்வாட்டம் தீர இப் பொழுது சோறு இரந்து வந்து அளிக்கிறேன்" என்று கூறி அவ்வாறே செய்தருளினார்.

## 5. 2. 6 நம்பியாரூரருக்காக பரவையார்பால் தூதுவராய் சென்ற கோலம்

(பெ. பு. ஏயர்கோன் புராணம் பாட்டு 326-381)

நம்பியாரூரராகிய சுந்தரர் திருஒற்றியூரில் சங்கிலியாரை இரண்டாவதாகத் திருமணம் செய்துகொண்ட தன்மையினால் இவர்தம் முதல்தேவியார் பரவைநாச்சியார் பிணக்குற்றார். இப்பிணக்கினை தீர்த்துவைக்கும் வண்ணம் நம்பி, ஆரூர் வித்தகனை வேண்டி விண்ணப்பித்தார். அப்போது ஆரூர்வித்தகர் தம்மைப் பூசிக்கும் ஆதிசைவ அந்தணர் கோலந்தாங்கி இருமுறை பரவையார் இல்லத்திற்குத் தூது சென்று அவரது பிணக்கைத் தீர்த்து இருவரையும் ஒருங்கிணைத்தார்.

## 5. 2. 7 நீலகண்டநாயனாரை விளக்கங்காணக் கொண்ட சிவயோகியார் கோலம்

(பெ. பு. திருநீலகண்ட நாயனார் புராணம்)

நாயன்மார் அறுபத்து மூவருள் முதலில் வைத்துப் போற்றப் பெறுபவர் திருநீலகண்டர். வேட்கோவர்குலத்தில் தில்லையில் வாழ்ந்த இவர் சிவனடியார்கட்குத்திருஓடு அளித்து சிவநெறியில் நின்றவர். இவர்தம் துணைவியார் தம்மை இவர் தீண்டல் கூடாது என்று இறைவன்மீது ஆணை இட்டதின் காரணமாய் அவ்வாறே இளமையைத் துறந்து வாழ்ந்து முதுமைப் பருவமுற்றார். இவ்வாறு இருந்த இவரை விளக்கங்காண அம்பலத்துள் ஆடும் பரமனார் ஒரு சிவயோகி வேடந்தாங்கி இவர்தம் இல்லம் நோக்கி வந்தார். சிவயோகியார் கோலம்;

அரையில் கீழும் கோவணமும் அணிந்து, நிலைபேற்றினை (அழியாமையை) செய்யும் ஒளிமிகும் திருநீற்றுப் பூச்சினால் விளங்கும் திருமேனியில் துவள்கின்ற முந்நூலும், நெற்றியில் திருநீற்றொளி.

அவர்தம் வார்சடை மறைந்திட அவ்விடத்து நெறித்துச் சுருண்ட பம்பை மயிரும், கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும் கொண்டு கையினில் பிச்சைப்பாத்திரம் (திருஓடு) ஒன்றினை ஏந்தி தம் திருவடிகள், பொய்ப்பிறவிப் பிணியோட்டும் தில்லைத் திருவீதியில், தோயத் திருநீலகண்டர்தம் இல்லம் வந்தடைந்தார்.

இவ்வாறு வந்த தில்லை நாயகர் தாம் கொணர்ந்த ஓட்டினை இவரிடம் கொடுத்து வைத்துப்பின் மறையச் செய்து வழக்கிட்டுப் பின் இவரையும் இவர்தம் மனைவியாரையும் மீண்டும் இளமைநலம் அடையச் செய்து அருள்புரிந்தார்.

## 5. 2. 8 இயற்பகை நாயனாரை சோதிக்கக்கொண்ட தூர்த்த வேடம்

சிவனடியார் எப்பொருளைக் கேட்பினும் இல்லை என்னாது கொடுத்து வந்தவர் பூம்புகார்ப் பகுதியில் வாழ்ந்து வந்த வணிகர் குல இயற்பகையார். இத்தகைய பெருமகனாரை சோதிக்கத் திருவுள்ளங்கொண்ட சிவபிரான் இதன் பொருட்டுத் தம் பொன்னார்மேனியின் வெண்ணீறு விளங்க தூர்த்த வேடம் (காமுகன் வேடம்) தாங்கிய வேதியரால் இயற்பகையார் இல்லம் வந்தடைந்தார். இவ்வேடத்தினை:

"ஆயும் நுண்பொரு ளாகியும் வெளியே
அம்பலத்துள் நின்றாடுவார் உம்பர்
நாயகிக்கும்; தறியவோ பிரியா
நங்கை தானறி யாமையோ அறியோம்
தூய நீறுபொன் மேனியில் விளங்கத்
தூர்த்த வேடமும் தோன்றவே தியராய்
மாயவண்ணமே கொண்டுதந் தொண்டர்
மாறாதவண்ணமும் காட்டுவான் வந்தார்"[9]

எனப் புராணம் காட்டுகிறது.



படம் 43 இளையான்குடி மாறநாயனாரை ஆட்கொள்ளவந்த அடியவர் கோலம் ஆய்வுக்கு வரைந்தது

இவ்வாறு வந்தவர் இயற்பகையாரை நோக்கி அவர்தம் மனைவியைக் கேட்க உறவினர்களின் எதிர்ப்புகளுக்கிடையே அவளும் கொடுக்க வாங்கிப் பின் அவரையும் அவரது தேவியாரையும் சிவானந்தப் பெருவாழ்வினைப் பெறச் செய்தார்.

## 5.2.9 இளையான்குடி மாறநாயனாரை உய்விக்க வந்த அடியவர் கோலம் படம்

இளையான்குடிமாற நாயனார் என்பவர் தாம் பெற்ற பெருஞ்செல்வத்தால் சிவனடியார்கள் தம் இல்லத்திற்கு வந்தால் அவர்களை சிவம் என வழிபட்டு அறுசுவை உண்டி அளித்து வந்தார். இவரது அடியவர் வழிபாட்டினை உலகறிய செய்ய சிவபிரான் இவரது செல்வ வளத்தைக் குறையச் செய்து வறுமை மிக்கிடச் செய்தார். இப்படியிருந்தும் மாறனார் அடியவர்களது வழிபாடு உபசரிப்பில் குறையவராகியிருக்கும் சமயம் ஒருநாள் இரவு அடைமழை பொழிந்து இவ்வமயம் சிவபிரான் சிவனடியார் உருக்கொண்டு இவரில்லத்தை வந்தடைந்தார்.

"மற்றவர்செயல் இன்ன தன்மைய தாக
மாலயனான அக்
கொற்ற ஏனமும் அன்ன மும்தெரியாத
கொள்கைய ராயினார்
பெற்றம் ஊர்வதும் இன்றி நீடிய பேதை
யாளுடன் இன்றி ஓர்
நற்ற வத்தவர் வேடமேகொடு ஞாலம்
உய்ந்திட நண்ணினார்[10]

அவ்வமயம் மாறனாரும் இவர்தம் தேவியாரும் பசியோடிருந்தனராயினும் இவரை உபசரிக்கத் தக்கதைச் செய்து உணவு கொள அழைக்க முற்பட்டனர். அவ்வமயம் சிவபிரான் உமையுடன் விடைமீது தோன்றிக் காட்சிதந்து இருவரையும் ஆட்கொண்டார்.



படம் 44 அமர்நீதி நாயனாரை ஆட்கொள்ள வந்த பிரமசாரிய கோலம் — ஆய்வுக்கு வரைந்தது.

## 5. 2. 10 அமர்நீதிநாயனாரை ஆட்கொள்ளவந்த மறைகுலத்துமாணி (பிரமசரிய) கோலம் (பெ.பு.அமர்நீதிநாயனார் புராணம்) படம்

பிற்காலச் சோழமன்னரது திருவுடை நகர்களில் ஒன்று பழையாறை மாநகர். இங்கு வணிகர் குலத்துதித்து, பெருஞ் செல்வராய் வாழ்ந்தவர் அமர்நீதியார். இவர் தம்மூருக்கு அருகில் உள்ள திருநல்லூர் என்னும் சிவப்பதிக்கு வந்து திரு மடம் ஒன்று கட்டி அதில் இருந்து சைவ அறங்கள் பல செய்து வந்தார். இவ்வறங்களில் ஒன்று அடியார்களுக்குக் கோவணமும் ஆடையும் அளித்தல். இவ்விரண்டில் கோவணமளிக்கும் அறத் தின்வழி இவரை ஆட்கொள்ள மங்கைபாகராகிய திருநல்லூர் இறைவர் ஒரு மறைக்குலத்து மாணியாய் (பிர்மச்சாரியாய்) வடிவம் தாங்கி இவர்தம் திருமடத்தை அடைந்தார்.

### இம்மாணி (பிர்மச்சரிய) கோலத் தோற்றம்:

சிவந்த சடையினை மறைத்து உச்சியில் திருமுடிச்சிகையும் அதாவது தலையில் உச்சியில் சிறிதளவே வட்டவடிவில் முடியை நீளவளர்த்து நுனியில் முடிச்சுப் போட்டுத் தலையின் முன்பக்கம் படியவைத்து, திருமேனியில் முப்புரியாகத் திருநீற்றினைப் பதி னாறு இடங்களில் பூசியிருந்த ஒளியின் தழைப்பும், வெண்மை யான புரிநூலுடன் விளங்கும் மான்தோலும், கையினில் மரகதக் கதிர்விடும் நாணல்புல்லால் ஆன மோதிரமும் (பவித்திரமும்), இடையில் முஞ்சிப் புல்லால் முறுக்கிய அரைஞாணும் அதில் மாமறைக் கோவணமும் அணிந்து, மாசற்ற நெஞ்சத்து அடிய வர்களது உள்ளத்தில் நீங்காது நிற்கும் திருவடி மண்மீது தோய நடந்து வந்தார். இவ்வாறு வந்த இவர்தம் கையிலில் உள்ள மூங்கில் கோலில் (வேணுத்தண்டில்) இரண்டு கோவணமும் திருநீற்றுப்பையும் நாணற்புல்லும் விளங்கியது.

இவ்வாறு வந்தவர் அமர்நீதியாரிடம் தண்டினில் இருந்த கோவணங்களில் ஒன்றைக் கொடுத்து மறையச் செய்து, பின் மறையச் செய்த கோவணத்திற்காகத் தண்டினில் இருந்த

மற்றொரு கோவணத்தின் உடைக்கு நிகராக, அவர்தம் பொருளையும் மனைவி மகவையும் துலையில் ஏறச் செய்து சமன்செய்து வீடுபேறு அளித்தார்.

## 5.2.11 மானக்கஞ்சாற நாயனாரை உய்விக்க வந்த மாவிரதியார் கோலம்

உலக அன்னையாகிய உமாதேவியார் மயில் வடிவாயிருந்து பூசித்த திருத்தலம் மயிலாடுதுறை. இத்தகைய பேரூரின் வடபால் விளங்குவது கஞ்சாறூர் என்னும் தலம். இங்கு வேளாளர் குலத்து தித்து, சிவனடிக்கு அன்பராய் விளங்கியவர் மானக் கஞ்சாறர். இவர் சிவபிரானுக்கே அன்றி, இவர்தம் அடியவரிடத்தும் அன்பு கொண்டவர். இவர்தம் அருமைமகளார் தம் திருமணத்திற்கு முதல்நாள் இவரைச் சோதித்து நல்லருள் வழங்கக் கயிலை நாயகன் ஒரு மாவிரதியார் கோலத்தில் இவர் தம் இல்லம் வந்தடைந்தார். 'மாவிரதியார் வடிவம்':

தலைமீதுள்ள முடியில் எலும்பு மணிகளால் கோக்கப்பட்ட கோவையையும், காதினில் குண்டலமும், கழுத்தில் எலும்பு மணிகளால் ஆன தாழ்வடமும், திருத்தோளில் பட்டிகையும், மார்பினில் மயில் இழைகளால் முறுக்கப்பட்ட முந்நூலும், ஒரு கையில் திருநீற்றுப்பையும், மற்றொரு கையில் ஒரேமணியை உடையகயிறும், அருமறையாகிய கோவத்தின்மீது அணியப் பெற்ற ஆடையும், திருவடிகளில் ஐந்து (பஞ்ச) முத்திரையும், நீறுபூத்த நெருப்பை ஒத்த திருநீற்றுப் பூச்சினையும் உடைய செம்மேனியராய் மாவிரதியார் கோலம் தாங்கி வந்தார்.

வந்தவரை மானக்கஞ்சாறர் அடிபணிந்து வரவேற்க அவரிடம் அவர்தம் மணக்கோல மகளாரின் தலைமுடியைக் கேட்க அவரும் உடன்வாளால் அறுத்துக் கொடுக்க வாங்கினார். பின்னர் அவர் தம் சிவபத்தி முதிர்வைக் கண்டு விடை மீதமர்ந்து காட்சி நல்கினார். மற்றும் அவர்தம் மகளாரது வார் குழல் வளரத் திருமணமும் இனிது நடந்தது.

## 5. 2. 12 திருக்குறிப்புத் தொண்டநாயனாருக்கு அருள்புரிய வந்த அருந்தவவேடம் (திருக் குறிப்புத் தொண்ட நாயனார் புராணம் பாட்டு 111-127)

உலக உயிர் அனைத்தும் வாழ சைவ நாயகனாகிய சிவ பிரான் அளித்த இருநாழி நெல்லைக் கொண்டு உமாதேவியார் எண்ணான்கு அறங்களையும் செய்த திருப்பதி திருக்கச்சி ஏகம் பம் (காஞ்சிபுரம்) ஆகும். இத்தகைய தலத்தில் ஏகாலியர் குலத்துதித்த திருக்குறிப்புத் தொண்டர் என்னும் சிவனடியார் தம் குலத் தொழிலுக்கு ஏற்ப சிவனடியார்களது ஆடையைத் துவைத்துக் கொடுக்கும் பணியில் தலைநின்று வந்தார். இத் தகைய அடியவருக்கு அருள்புரியக் குளிர்காலத்தில் ஒருநாள் சிவபிரான் ஆதரவற்றவர்கள் போல் அருந்தவ வேடம் தாங்கி, இடையில் அழுக்கடைந்த கந்தை ஒன்றை அணிந்து வந்தார்.

## 5. 2. 13 திருநாவுக்கரசருக்குத் திருப்பைஞ்ஞீலித் தலத்தில் பொதிசோறு அளிக்கவந்த திரு நீற்று அந்தணர் கோலம்

(பெ.பு.திருநாவுக்கரசர் புராணம் பாட்டு 303-310)

என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்னும் கடமையுணர்வு உண்ணாநோன்பிருந்து எச்செயலையும் சாதிக்கலாம் என்னும் இருபெரும் செயலினைச் செய்துகாட்டி வாழ்ந்தவர் திருநாவுக் கரசர். நாளும் இன்னிசையால் குமரி முதல் இமயம் வரைத் திருப்பயணமாக நடந்து தமிழ் பரப்பிய இவர்தம் வாழ்வில் சிவபிரான் இருமுறை மானிட வடிவில் வந்து அருள்புரிந்தார்.

### 5. 2. 13. 1 முதன்முறை

திருமறைக்காட்டில் மறைக்கதவினைத் திறக்கப் பாடியபின் நாவரசர் அங்கிருந்து தலப்பயணமாக வரும்போது திருச்சிராப்

பள்ளிக்கு வடபால் உள்ள திருப்பைஞ்ஞீலி என்ற தலத்தினை நெருங்கினார். அப்போது இவருக்கு வழிநடந்து வந்தகளைப்பும் உறுபசியும் வந்தது இவருக்கு இதனைப் போக்க திருப் பைஞ்ஞீலி மேய கண்ணுதலார் இவர்வரும் வழியில் சோலையும் குளமும் அமைத்து, தாம் ஒரு செய்ய திருநீற்று அந்தணராய்ப் பொதிசோறும் வைத்திருந்தார்.

"காவும் குளமும் முன்சமைத்துக் காட்டி
வழிபோங் கருத்தினால்
மேவும் திருநீற் றந்தணராய் விரும்பும்
பொதிசோ றுங்கொண்டு
நாவும் தனிமன் னவர்க்கெதிரே நண்ணி
யிருந்தார் விண்ணின்மேல்
தாவும் புள்ளும் மண்கிழிக்குந் தனிஏனமும்
காண்பரியவர் தாம்"11

## 5. 2. 13. 2 திருநாவுக்கரசருக்குப் பனிவரையில் (இமயத்தில்) அருள்புரியவந்த் மாமுனி வர் கோலம்

(பெ. பு. திருநாவுக்கரசர் புராணம் பாட்டு 360 – 369)

இரண்டாம் முறையாக மாமுனிக் கோலத்தில் சிவபிரான் நாவரசர் முன்வந்தது.

திருக்கயிலைமால்வரையில் மலைமகளுடன் மாதேவன் வீற்றிருக்கும் கோலத்தைக் கண்டுகளிக்க பனிமால்வரையில் மேற்கொண்ட பயணத்தால் உடல்முழுதும் ஊறு ஊய்தி இடையில் செயலற்றுக் கிடந்தார்.

அப்போது சிவபிரான் அங்கு ஓர் நன்னெடும் புனலைத் தோற்றுவித்து அங்கு நின்று நாவரசை நோக்கி "உடல்குலையு மாறு இக் கொடுஞ்சுரத்தில் இவ்வாறு ஏன் வந்தீர்" என வினவினார்.

அப்போது முனிவராய் நின்ற தோற்றம் இடையில் மான் தோல் ஆடை, திருமார்பினில் முந்நூல், சடாமகுடம்.

"மாசில் வற்கலை ஆடையும்
மார்பில் முந்நூலும்
தேசுடைச்சடை மவுலியும்
நீறுமெய் திகழ
ஆசின் மெய்த்தவ ராகிநின்
றவர் தமை நோக்கிப்
பேச உற்றதோர் உணர்வுற
விளம்புவார் பெரியோர்"[12]

இவ்விதக் கோலத்தில் சிவபிரானைக் கண்ட நாவரசு பேசும் உணர்வெய்தியின் தேய்ந்த உடல் வளரப் பெற்று தாம் வேண்டி விரும்பியகயிலைக் காட்சியை ஆண்டிருந்த நெடும்புனலில் மூழ்கித் தென்னாட்டுத் திருவையாற்றில் எழுந்து கண்டுகளித்தார்.

## 5:2:14: சிறுத்தொண்ட நாயனாரை ஆட்கொள்ள வந்த பைரவர் கோலம்

(பெ. பு. சிறுதொண்டர் புராணத்துள்)

கி.பி. 630-668இல் ஆட்சிபுரிந்தவன் நரசிம்மவர்ம பல்லவன் இவனிடத்தில் தானாதிபதியாயிருந்த பரஞ்சோதி வாதாபிப் போரில் வெற்றியை நரசிம்மவர்மனுக்கு அளித்தபின் 'தவி நீங்கி தன் பிறந்த பதியாகிய திருச்செங் காட்டங்குடிக்கு வந்து திருமணஞ்செய்துக்கொண்டு ஆண்மகவு ஒன்றையும் பெற்று நித்தம் சிவனடியார்களை உண்பிக்கும் திருத்தொண்டில் தலைநின்றார். ஒருநாள் அமுதுண்ண அடியவர் எவரையும் காணாது பரஞ்சோதியராகிய சிறுத்தொண்டர் வருந்தி அலையும்போது,

சிவபிரான் இவர்செய்த தொண்டின் சிறப்பால் இவரைத் தம்மடிக்கீழ் அணைவிக்க இவருடைய திருத்தொண்டின் மெய்த் தன்மையை காட்டுவதற்கு வயிரவர் வடிவம் தாங்கிக் கயிலை மலையில் இருந்து வருகின்றார்.



படம் - 45 சிறுத்தொண்ட நாயனாரை உய்விக்கவந்த வைரவர்
கோலம் — ஆய்வுக்கு வரைந்தது.

## இவ்வுயிரவர் கோலச் சிறப்பின் தோற்றம்.

1. திருமுடி: கொன்றை மலரை அணியும் திருமுடி கருங் கடலில் நீரினை முகந்து எழும் கருமேகத்தின் சுருள் போல் கருத்தும் சுருண்டும் செறிந்த காட்டினைப் போல் அடர்ந்தும் உள்ளது. கருமேகம் சூழ்ந்த விண்வெளியில் நட்சத்திரக் கூட்டங் கள் காணப்படுவதுபோல் மைக் குழம்பில் துவைத்து எடுத்தாற் போன்ற பெருமானுடைய கருமயிரிடை வண்டுகள் மொய்க்கும் தும்பை மலர்கள் வரிசையாகச் சூடப்பட்டிருந்தது.

2. திருமுகம்: (நெற்றியில் உள்ள திருநீற்றுப் பொட்டு) திருமுடியில் விளங்கும் பிறைச் சந்திரனை முழுமதியாக்கி மீண்டும் ஒளிபொருந்திய நெற்றியில் சூட்டியதுபோல் விரியும் ஒளிபொருந்திய செம்பவளச் சோதியின் கதிர்களை விரித்து வீசும் விளக்க முடைய சுடர் நெற்றியின்மீது திருநீற்றின் ஒற்றைப் பொட்டு ஒளிவீசி விளங்கியது.

3. திருச்செவி: வெப்பமுடைய சூரிய மண்டலமும், விளக்க முடைய சந்திர மண்டலமும் மற்றும் அக்கினிமண்டலமும் ஒன்று சேர்ந்ததுபோல அழகைத் தன் வயமாக்கும் திருச்செவி யில் அழகிய சங்கக் குழையை அணிந்து அதன் உள்ளே செவ் வரத் தம்பூவை செறித்த திருத்தோடு விளங்கியது.

4. திருக்கண்டம்: பாற்கடலில் ஆலத்தை உண்டு அதனால் வந்த கண்டத்தின் கருமையினை மறைத்தருளும் பொருட்டு அப்பாற் கடலில் தோன்றிய ஒளிமிகுந்த அமிர்தக் குமிழ்களை தூயவடத்தில் கோத்து அணிந்ததுபோல் வெள்ளிப் பளிங்கினால் (படிகமணியினால்) ஆன மணிமாலை. பெருமானை சிந்திப் பவர்தம் உள்ளமும் ஊனும் உருகுமாறு விளங்கியது.

5. திருமேனியில் கருஞ்சட்டை: அந்திமாலையின் செவ் வானத்தை இராப்பொழுது தோன்றி மறைப்பதுபோல, பெரு மானது செம்மேனியில் அவர் போர்த் திருக்கும் யானைத் தோலையே மாற்றி அணிந்தது போல கஞ்சுகம் (அழகிய கருநிறச் சட்டை) விளங்கியது.

6. திருமேனியில் மணிமாலைகள்: தொண்டர்களிடம் தோன்றிய அன்பானது திருமேனியின்மீது உருவாய் அமைத்து விளைந்தது போல் எலும்பு மணிகளால் ஆன வெற்றிமாலை, ஆரம், கோவை, கைக்கங்கணம், அரையில் அரைஞாண், கால்களில் காற்சரி (காலின் அணியும் ஒருவித ஆபரணம்) ஒளி பொருந்தி விளங்கியது.

7. திருவடி: இணையற்ற சிறுத்தொண்டருக்காக இவ்வுலகில் வந்தருளி அருள் புரியும் தன்மையைக் கண்டு இறைவனது திருவருளை விரும்பிப் போற்றுங்கள். பக்தி வழி நில்லுங்கள், எனப் பறைசாற்றுவதுபோல் திருவடிகளில் அணிந்திருந்த சிலம்பு ஒலிசெய்தது.

8. திருக்கரங்கள்: இடது திருக்கையில் பிர்மகபாலமும் தோளில் திரிசூலமும், வலது திருக்கரத்தில் தமருகமும் இருந்து ஒலிக்க அவர்தம் பாத தாமரைகள் நிலந்தாங்கவும்.

9. பேரொளி: திருமுகத்தில் புன்முருவல் நிலவுபோல் குளிர்ந்து ஒளிவீசவும். மும்மலங்களைப் போக்கும் திரிசூலம் வெயில் போல ஒளிவீசவும் உண்மைப் பொருளை விளக்கும் பெருகுகின்ற அன்பு மென்மேலும் தழைத்து ஓங்கி இவ்வுலகம் ஏத்த அறிவு விளக்கம் பெருகும் தமிழ்நாட்டு செங்காட்டங்குடியை வந்தடைந்தார். இதுவரை கூறிய வைரவர் கோல வருணனைச் சுருக்கம்.

கருமையான தலை முடியில் தும்பைமலர் நெற்றியில் விபூதி பொட்டு (சந்தனப் பொட்டுக்குப் பதிலாக) காதில் சங்கக்குழை செல்வாத்தம்பூக்கள். கழுத்தில் படிகமணிமாலை, உடம்பில் கருப்புச் சட்டை. அதன்மீது எலும்புகளால் ஆன கோவை, ஆரம். வெற்றிமாலை, கைக்கங்கணம், அரையில் அரைஞான், கால்களில் காற்சரி மற்றும் ஒலிக்கும் சிலம்பு, இடதுகையில் பிர்மகபாலம். இடதுதோளில் திரிசூலம். வலது கையில் ஒலிக்கும் உடுக்கை.



தாயுருக் கொண்ட தயாநிதி

இவ்வாறான பைரவர் கோலச் சிறப்பின் வருணனையைச் சிறுத்தொண்ட நாயனாரது புராணத்தின் கண் விரிவாக 25-35 (11 பாக்களில் காணலாகும்)

இங்கு இவ்வாறு கூறப்பெற்ற வயிரவர் கோல உருவம் திருச்செங்காட்டங் குடியில் 'உத்தராபதியார்' என்ற பெயருடன் அழைக்கப் பெற்று இருக்கிறது. 'உத்தராபதி, என இங்கு இப்பெருமான் அழைக்கக் காணலாம். இக்கோலம் தாங்கிவந்த சிவபிரான் தாம் வடநாட்டைச் சார்ந்தவர் என்பதற்காக யாம் உத்தராபதி (உத்தரம்-வடக்கு, பதிக இடம்) என்னும் பொருளில் கூறிய சொல்லேயாகும்.

> "இப்பொழுதே வன்தணைவர்; எழுந்தருளி இரும் என்ன
> ஒப்பில்மனை யறம்புரப்பீர்; உத்தரா பதியுளோம்
> செப்பருஞ்சீர்ச் சிறுத்தொண்டர் தமைக்காணச் சேர்ந்தனம் யாம்
> எப்பரிசும் அவரொழிய இங்கிரோம் என்றருளி"[13]

## 5:3 வணிகப் பெண்ணுக்காகச் சிராமலைச் சிவனார் தாயாகப் பெண்ணுருவில் வந்தருளியது படம் 46

சோனாட்டு சிவத்தலங்களுள் ஒன்றான திருச்சிராப் பள்ளியில் பத்மாவதி என்ற வணிகப் பெண் தன் கணவனுடன் வாழ்ந்து வந்தாள். இவள் சிராப்பள்ளி மேவிய சிவபெருமானிடம் இடையறாப் பத்தி பூண்டு நாளும் வழிபட்டு வருங்கால் மகப்பேறு உற்றாள். நாட்கள் சில கழிய மகவு பிறக்குநேரம் நெருங்கியது. உடல் வேதனை உற்றாள்.

இந்நாள்வரை உடன் இவளுக்குத் துணையாயிருந்த இவளது அன்னை ஏதோ ஒரு செயல் நிமித்தம் அவசரமாகச் சிராப் பள்ளிக்கு வடக்கில் ஓடும் காவிரியின் வடகரையில் உள்ள ஒரு ஊருக்குச் சென்றாள். மாலையில் சிராப்பள்ளிக்கு மீளும்

போது காவிரியில் கரைபுரண்டோடிய வெள்ளத்தால் இக்கரை வரமுடியாது அக்கரையில் தவித்து இராப்பொழுதைக் கழித்தார்.

இங்கு பத்மாவதி தாயின் துணையில்லாது சிராப்பள்ளிச் சிவனைச் சிந்தித்து மகப்பேறு வேதனையில் இருந்தாள். தம் பால் பத்திபூண்ட பத்மாவதிக்காகச் சிவபிரான் அவளது தாயின் உருத்தாங்கி மகவினைப் பிறக்கச் செய்து உடன் இருந்து உதவினார். மறுநாட்காலை காவிரி வெள்ளம் வடிய உண்மைத்தாய் ஓடோடி வந்து பத்மாவதி இல்லத்தில் புகுந்ததும் இதுவரை, தாயாக இருந்த சிவபிரான் மறைந்தருளினார்.

இவ்வாறு தாயாகச் சிராப்பள்ளி சிவனார் உருக்கொண்டு வந்தமையால் இங்கு சிவபிரான் தாயுமானவர், தாயான செல்வர் என்று திருப்பெயர் பெற்றார். இறைவன் அடியவர்கட்காக ஏந்திய ஆண், பெண் வடிவங்களை இதுவரை கண்டோம். இனி அவர் ஏற்ற பிற வடிவங்களைக் காண்போம்;

## 5;4 பிறவடிவங்கள்

### 5:4:1 விலங்கு வடிவம்

#### படம் 47

பன்றிக்குட்டிகளுக்குத் தாய்பன்றியாக வந்தது

(திருவிளையாடற்புராணத்தில் பன்றிக்குட்டிகளுக்குப் பால் கொடுத்த படலம்)

பாண்டி நாட்டில் ஒருசமயம் ஆட்சிசெய்த இராசராச பாண்டியன் வேட்டையாடக் காட்டிற்குச் சென்றான். அங்கு பன்றிகளுக்கெல்லாம் தலைமையாய் விளங்கிய வீரமிகுந்த அரசப் பன்றியை நீண்டநேரம் போராடி வென்றான், இறந்த



படம் 47 கூடல் நாயகனின் பன்றி உருவக்கோலம் ஆய்வுக்கு வரைந்தது



படம் 48 சிவபிரானின் சரபவடிவம் (விலங்கும் பறவையும் இணைந்தது.) Manifestation of Shiva என்று கண்டுள்ளபடி வரைந்தது

இந்த ஆண்பன்றியின் இணையான பெண்பன்றியும் உடன் உயிர்விட்டது. அவ்வமயம் இஃற்றின் குட்டிகள் பசியால் வாட்டமுற்று இளைத்தன.

இந்நிலையில் மதுரை நாயகனாகிய சோமசுந்தரக்கடவுள் அவற்றின் தாயாக உருத்தாங்கிப் பாலூட்டினார். சிவபிரான் அளித்த தீம்பாலை அருந்திய அப்பன்றிக்குட்டிகள் முகம்மட்டும் பன்றி முகமாயும் ஏனைய உடலுறுப்புகள் மானிடவடிவாகவும் பெற்றன. பின்னர் சிவபிரான் அருளால் பாண்டிய அரசின் மதி அமைச்சர்களாயும் இருக்கும் பேறு பெற்றன.

இவ்வாறு பன்றிக்குட்டிகளுக்குக் கூடற்பெருமான் தாயாக வந்து பால் ஊட்டிய காட்சி சிற்ப வடிவில் மதுரைக்கோயில் புதுமண்டபத்தின் கீழ்ப்பக்க நுழைவாயிலின் இருபக்க கற்றூண்களில் மேற்கு நோக்கி இருப்பது காணத்தக்கது.

பிறவாயாக்கைப் பெரியோனாகிய சிவபிரான் இவ்வாறு மண்மீது விளங்கும் உயிரினங்கள் உய்யுமாறு பற்பல வடிவங்களில் எளிமையாக வந்த வரலாறுகளை தலபுராணங்கள் வாயிலாக நாம் அறியலாம்.

## 5:4 2 விலங்கும் பறவையுமான 'சரப' வடிவம் படம் 48

மானிட மடங்கல் (நரசிங்க) வடிவில் திருமால் தோன்றி இரணியன் என்ற அரக்கனைக் கொன்றபின் வெறி கொண்டு அலைந்தார். அப்போது சிவபெருமான் இம்மானிட மடங்கலைச் சரப வடிவாய் வந்து அடக்கினார்.

இவ்வடிவம் மகேசுவர வடிவங்களில் ஒன்றாயும், சிவ பராக்கிரம 64 வடிவங்களில் ஒன்றாயும் வைத்து எண்ணப்படுகிறது.

(இதன் விரிவு சிவபராக்கிரம 64 வடிவங்களில் 30வது இல் காண்க)

## 5:4:3 கனவின்கண் நம்பியாரூரருக்கு காட்டிய கோலம்

நம்பியாரூரராருக்கு சுந்தரர் தன் தோழர் சேரமானோடு (கழறிற்றறிவாரோடு) பாண்டி நாட்டின் தலங்கள் பலவற்றைத் தரிசித்துக் கொண்டு திருச்சுழியல் என்ற சிவப்பதியை அடைந்தார். வந்தவர் சிவபிரானைப் பணிந்து பாடிப் பின் அத்தலத்தில் துயில் கொண்டார்.

இவ்வாறு துயிலில் இருந்த இவரது கனவில் சிவபிரான்

அழகிய காளைப்பருவத்தராய் தலையில் சுழியக் கொண்டையுடனும் கையினில் பொற்செண்டையும் தாங்கி இதுபோன்ற வேடம் இதற்குமுன் எங்கும் இல்லாத நிலையில் தோன்றினார்.

தோன்றியவர் 'யாம் இருப்பது கானப்பேர்' எனக் கூறி மறைந்தார்

"அங்கணரைப் பணிந்துறையும்
ஆரூரர்க் கவ்வூரில்
கங்குலிடைக் கனவின்கட்
காளையாம் திருவடிவால்
செங்கையினிற் பொற்செண்டும்
திருமுடியில் சுழியமுடன்
எங்குமிலாத் திருவேடம்
என்புருக முன்காட்டி"[14]

பின்னர் சுந்தரர் சேரமானுடன் திருச்சுழியலை விட்டு கானப்பேர் (காளையார் கோயில்) சென்று பணிந்து பாடினார்.

இவ்வாறு கனவில்தம் அடியவர்களுக்குக் காட்சி தந்த வரலாறுகள் பலவற்றைத் தல புராணங்களில் காணலாம்.

## 5:5 இயற்கை வடிவங்கள்

அடியவர்களது தோற்றத்தில் இயற்கைப் பொருள்களும் சிவவடிவங்கள்

### 5:5;1 சோமாஸ்கந்தர் வடிவில் மும்மலைகள்

தமிழ்நாட்டில் கோவை மாவட்டத்தில் உள்ள வெள்ளி மலை, நீலிமலை, மருதமலை ஆகிய மூன்று மலைகளுள் வெள்ளிமலை சிவனுறையும் மலை.

நீலிமலை உமைக்கு உரிய மலை.
மருதமலை முருகனுறையும் மலை.
வெள்ளிமலை சிவன் உரு - சோ
நீலிமலை உமை உரு - உமா
மருதமலை கந்தன் உரு - ஸ்கந்தர்

இவ்வாறு இம்மூன்று மலைகளும் சோமாஸ்கந்தர் வடிவில் விளங்குவதாகப் பேரூர்ப்புராணம் கூறுகிறது.[13]

### 5. 5. 2 சோமாஸ்கந்தர் வடிவில் மூன்று ஆறுகள்

புனித நீர்த்தடங்கள் யாவும் சிவவடிவம் என்பதை 'சென்றாடு தீர்த்தங்கள் ஆனார் தாமே'[14] என்கிறார் திருநாவுக்கரசர், பரதகண்டத்தின் வடக்கில் திருவேணி, பிரயாகை என்றெல்லாம் அழைக்கப்பெறும் அலகாபாத் ஒரு சிறந்த புண்ணியத்தலம்.

இங்கு கங்கை, யமுனை, சரசுவதி என்ற மூன்று ஆறுகளும் ஒன்று சேருகின்றன. இவற்றுள் கங்கை சிவபிரானை ஒப்ப செந்நிறம். யமுனை உமையை ஒப்ப நீலநிறம் சரசுவதி கந்தனை ஒப்ப வெண்மை நிறம் உடையனவாக 'திருவாரூர்

நான்மணிமாலை'யில் குமரகுருபரர் சோமாஸ்கந்தராக ஒரே இருக்கையில் சிவபிரான் உமை இருவருக்கிடையில் கந்தன் இருக்கும் காட்சி இந்த கங்கை யமுனை சரசுவதி மூன்று ஆறுகளின் சேர்க்கையாகிய திரிவேணியை உணர்த்துவதாக

"தம்மேனி வெண்பொடியாற் றண்ணிளியா லர்நூரர்
செம்மேனி கங்கைத் திருநதியே - அம்மேனி
மானேய முனையந்த வாணிநதியுங்குமரன்
தானே குடைவேந் தனித்து"[15]

என்று பாடுகின்றார்,

## 5. 5. 3 அம்மையப்பர் வடிவில் மலையும் ஏரியும்

மன்னும் உயர்ந்த மலையாய் விளங்குவது பரதகண்டத்தின் எல்லையாய் விளங்கும் வெள்ளிப் பனிமலை (இமயமலை) இதன் நடுவில் இடங்கொண்டு விளங்குவன திருக்கயிலாய மலையும் மானசரோவர் என்னும் பெரிய ஏரியும், திருக் கயிலையை சிவபிரானாகவும் இதனை ஒட்டியுள்ள மானசரோவ ஏரியை உமையம்மையாகவும் கொண்டு நம் பரதகண்டத்து மக்கள் போற்றுகின்றனர்,

## 5. 5. 4 மரமும் அதன்கண் தோன்றும் இலை, பூ, காய், பழம் முதலியன சிவலிங்கவடிவம்

கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள் பாடியுள்ள கந்த புராணத்துள் வள்ளியம்மையார் முன் வேடர் வடிவில் தோன்றிய முருகன், பின் வேங்கை மரவடிவானார்.

இவ்வேங்கை மரச்சிறப்பினை

"ஆங்கது காலை தன்னின் அடிமுதல் மறைகளாக
ஓங்கிய நடுவன் எல்லாம் உயர்சிவ நூலதாகப்
பாங்கமம் கவடு முற்றும் பல்கலையாகத் தானோர்
வேங்கையின் உருவமாகி வேற்படை வீரன் நின்றான்"[16]

இதனை ஒப்ப பாண்டிநாட்டுத் தேவாரத் தலமான திருக்குற்றாலத்தின் தலமரமான குறும்பலா போற்றப்படுகிறது. தலங்கள் தோறும் காணப்படும் தலமரங்களில் இது மிக உயர்வாகப் போற்றப்பட்டு திருஞானசம்பந்தரால் தேவாரத்துள் ஒரு தனிப்பதிகத்தைப் பெற்றுள்ளது.

"..........
பூந்தண்நறு வேங்கைக் கொத்து மத்தகத்தில் பொலிய ஏந்திக்
கூந்தற்பிடியும் களிறுமுடன் வணங்கும் குறும்பலாவே"[17]

என்றும், மற்றும் திருக்குற்றாலத் தலபுராணத்துள்

நான்மறைகளும் ஒன்றுகூடி கிளைகளுடன் ஒரு பலா மரமானது பிரணவ மந்திரம். இதன் வேர் பாகை இரண்டு கவடு. சுருதி முழுதும் கிளைகள். இவ்வாறாகச் சிவபிரானுக்கு நிழலைத் தந்து தொழுது கொண்டிருக்கிறது என்று

திரிகூடராசப்பகவிராயர் பாடியுள்ள திருக்குற்றாலக் குறவஞ்சி என்னும் சிற்றிலியக்கியத்துள் கூறப்பட்டுள்ளது.

இப்பலாமரத்தின் கிளைகளாய்ப் பிரிந்திருக்கின்ற பல கொப்புகள் யாவும் நான்மறைகள். அக்கிளைகள் தந்த வளார் எல்லாம் சிவலிங்கம். அம்மரத்தின் பழமெல்லாம் சிவலிங்கம். அப்பழத்துள் உள்ள சுளை எல்லாம் சிவலிங்கம். அச்சுளை களில் உள்ள கொட்டைகள் எல்லாம் சிவலிங்கம் என்ற கருத்தினை,

கிளைகளாய்க் கிளைத்தபல கொப்பெலாஞ்
சதுர்வேதம் கிளைகள் ஈன்ற
களையெலாம் சிவலிங்கம், கனியெலாம்
சிவலிங்கம் கனிகள் ஈன்ற
சுளையெலாம் சிவலிங்கம், வித்தெலாம்
சிவலிங்க சொரூபமாக
விளையுமொரு குறும்பலவின் முளைத்தெழுந்த
சிவக்கொழுந்தை வேண்டுவோமே.[18]

### 5.5.5 முதிர்ந்த சிவத்தொண்டருக்கு வேப்பங்கனியும் சிவலிங்கம்

பாண்டிய மன்னர்களில் வரகுணன் ஒரு சிறந்த சிவபத்தர். இவர் சோணாட்டு சிவத்தலமான திருவிடைமருதூர் மகாலிங்கப் பெருமானிடம் இடையறாப் பேரன்பு கொண்டு அத்தலத்தில் இருந்தார். ஒருநாள் இரவு அத்தலத்தினை வலம் வரும்போது ஆங்கொருபால் நரிகள் ஊளையிட்டன. இது அரனைப்பாடும் ஒலி என நினைத்து அவற்றிற்கு போர்வை பல அளித்தார். தவளைகள் கத்தின. இவ்வொலி ஈசனை ஏத்துகின்ற ஒலி என பொற்காசுகளைத் தூவினார். மற்றும், ஆங்கொருபால் தரையில் உதிர்ந்து கிடந்த வேப்பங்கனிகள் சிவலிங்கம் எனக் கருதி அவை கிடந்த இடத்தில் விதானம் அமைத்தார் என்னும் செய்தியை

ஓடும்பல்நரி ஊளை கேட்டரனைப்
பாடின என்று படாம்பல அளித்தும்
குவளைப் புனலில் தவளை அரற்ற
ஈசன் தன்னை ஏத்தின என்று
காசும் பொன்னும் கலந்து தூவியும்
... ... ...
காம்பவிழ்ந் துதிர்த்த கனியுருக்கண்டு
வேம்புகட் கெல்லாம் விதானம் அமைத்தும்
.. ..
பெரிய அன்பின் வரகுண தேவரும்

'திருவிடைமருதூர் மும்மணிக் கோவை'யில் கூறப்படுகின்றது.

## 5.6 செயற்கைப் பொருள்களும் சிவ வடிவங்களே

### 5.6.1 மாடுகட்டும் முளை (கட்டுத்தறி) சிவலிங்க வடிவு

சைவ சமய பத்தி நிறைந்த பெண் ஒருத்தி வைணவக் குடும்பத்தில் வாழ்க்கைப்பட்டாள். அங்கு அவளது நித்திய சிவ பூசைக்குத் தடை நேர்ந்தது. அதனால் அவள் மாட்டுத்

தொழுவத்தில் பசுங்கன்றினைக் கட்டுவதற்கு இருந்த ஆப்பினை (கட்டுத்தறியை) சிவலிங்கமாகக் கருதி நித்தம் மலர் தூவிப் பூசித்து வந்தார். இதனைப் பொறாத அவளது கணவன் அந்த நடுத்தறியினை (முளையைக் கோடாரி கொண்டு பிளக்க முயன்றான். அப்போது கண்ணுதற் பெருங்கடவுள் வெளிப்பட்டு அச்சைவப் பெண்ணுக்கு அருள் பாலித்தார். இதனால் அங்கு தோன்றிய இலிங்கம் 'நடுதறியப்பர்' என்றும் இது இருக்கும் தலம் 'கன்றாப்பூர்' எனவும் பெயர் பெற்றது. இத்தகைய தலம் திருவாரூருக்குத் தென்கிழக்கில் உள்ளது.

## 5. 6. 2 மொக்கணீச்சரம் குதிரை கொள்ளு தின்னும் பையே சிவலிங்கமானது

மாவீரன் ஒருவன் தன் பணியாளுடன் பயணம் செய்தான் வீரன் சிவபத்தி மிக்கவன். தினம் பரமனைப் பூசியாது. உண்ணமாட்டான். வழியிடை உணவு கொள்ள அதற்கு சிவ தரிசனம் செய்ய சிவ வடிவை எண்ணித் தன் பணியாளனை சிவவடிவம் இருக்கும் இடத்தைக் கண்டு வரச்செய்து நீராடச் சென்றான். பணியாளன் கண்ணுக்கு எங்கும் சிவவடிவம் இல்லை. இதற்காக ஒரு உத்தி செய்தான்.

குதிரைக்கு கொள்ளு கட்டி வைக்கும் பை மொக்கணியில் கொள்ளை நிரப்பி வைத்து மலர்களை , அணிவித்துத் தோற்றத்திற்குச் சிவலிங்கம் போல் அமைத்தான். மாவீரனும் இத்தோற்றத்தைக் கொண்டு பணிந்து போற்றி பின் பூசை முடிவில் அதனை எடுக்கப் புக அது உண்மையிலேயே சிவலிங்கமாகி விட்டது.

இத்திருவடிவம் உள்ள இடம் 'மொக்கணீச்சரம்' எனப் பெயர் பெற்று இப்போது கோவை மாவட்டத்தில் உள்ளது. திருவாசகத்துள் இத்தலம்

> "மொக்கணியருளிய முழுதழல்மேனி
> சொக்கதாகக் காட்டிய தொன்மையும்"[20]

என வாதவூரடிகளால் குறிப்பிடப்படுகிறது.

## 5. 7 நாளும் பொழுதும் சிவவடிவங்கள்

இயற்கைப் பொருள்கள் பல எத்தன்மைத்தாயினும் அவற்றுள் உண்மைப் பொருளாய இறைவடிவத்தைக் காணும் அருளாளர்கள் நாளிலும் பொழுதிலும் இறைவடிவைக் கண்டு காட்டுகிறார்கள்.

கடைச்சங்கப் புலவராகிய நக்கீரர் கண்களுக்கு காலையில் கடலிடைத் தோன்றும் கதிரவன் நீலமயிலில் முருகன் தோன்றும் காட்சியாக இருக்கிறது என்பதை

"உலகம் உவப்பவலனேர்பு திரிதரு
பலர் புகழ் ஞாயிறு கடற்கண்டா அங்கு
ஓவற இமைக்குஞ் சேண்விளங்கவிரொளி"[21]

என்று காட்டுகிறார்

5 - 7 - 1 இதனை ஒப்ப முருகனடியவராகிய காஞ்சி குமரக்கோட்டத்து கச்சியப்ப சிவாச்சாரியார் கண்களுக்கு இரவு பகல் மாலைப்போதுகள் சோமாக்கந்தர் வடிவாகத் தெரிகிறது.

வலப்பால் சிவபிரான். இடப்பால் உமாதேவியார். இவர்கள் இடையில் கந்தன். பகல் இரவு இதனிடைமாலை நேரம் வந்து ஒன்று சேர்கிறதை மேற்கூறிய சிவம் சத்தி குமரனது ஒருங்கு சேர்ந்த வடிவம்

"ஏலவார்குழ லிறைவிக்கும் எம்பிரான் தனக்கும்
பால னாகிய குமரவேளடுவுறும் பான்மை
ஞால மேலுறும் இரவொடு பகலுக்கு நடுவாய்
மாலை யானதொன் றழிவின்றி வைகுமா றொக்கும்"[22]

கந்தர்புராணப் பாடலொன்றன் வாயிலாக காட்டுகின்றார்.

## 5. 7. 2 காரைக்கால் அம்மையார் பார்வையில் காலை, பகல், மாலை இரவு சிவவடிவம்

அருளாளர்கள் பலரும் சிவனருளைப் பெற்று அவ்வடிவைப் பாடி பரவியுள்ளனர். ஆனால் காரைக்கால் அம்மையாரோ திருக்கயிலைக்கு மானிட உடலுடன் சென்று சிவபிரானைக் கண்டு உரையாடிப் பின் சிவபிரானைப் பாடிப் பரவியுள்ளார். இத்தகைய அம்மையார் தாம் நேரில் கயிலையில் கண்ட சிவ வடிவத் தோற்றத்தை 'அற்புத திருவந்தாதி' மூலம்பார்க்க இவ்வாறு காட்டுகிறார்.

1. திருமேனி: காலைக் கதிரவனது உதயம் போன்றது.

2. திருமேனியில் விளங்கும் வெண்ணீற்றுப்பூச்சு; கதிரவன் உச்சியில் வரும் நண்பகற் பொழுதைப் போன்றது.

திருமுடியில் விளங்குஞ்செஞ்சடை: மாலைப்போதின் அந்தி வானநிறம் போன்றது.

விடமுண்டு கருத்தகாண்டம்: மாலைப்போதின் அந்திவான நிறம் போன்றது.

விடமுண்டு கருத்தகண்டம்: மாலைப்போதுக்கு பின்வரும் இரவை ஒத்தது. என்றிவ்வாறு ஒருநாளின் கூறுகளாகிய காலை, நண்பகல், மாலை, இரவுப் பகுதிகளுக்கு ஒப்பாக

''காலையே போன்றிலங்கும் மேனி; கடும்பகலின்
வேலையே போனறிலங்கும் வெண்ணீறு; மாலையின்
தாங்குருவே போலுஞ் சடைக்கற்றை;
மற்றவர்க்கு வீங்கிருளே போலும் மிடறு''[23]

என்று பாடுகின்றார்.

—o—

## அடிக்குறிப்புகள்

1. மதுரைக் கலம்பகம் (குமரகுருபரர்) பாட்டு எண் 63
2. திருவிளையாடற்புராணம் தண்ணீர் பந்தல் வைத்த படலம் பாட்டு எண்
3. திருவிளையாடற்புராணம் மண் சுமந்த படலம். பாட்டு எண் 16
4. தனிப்பாடல், ஔவையார்
5. பெரியபுராணம் - தடுத்தாட்கொண்டபுராணம் பாட்டு 32
6. மேலது மேலது 85
7. மேலது ஏயர்கோன்புராணம் 101
8. மேலது மேலது 157
9. மேலது இயற்பகை நாயனார்புராணம் 4
10. மேலது இளையான்குடிமாறநாயனார்பிராணம் 8
11. மேலது திருநாவுக்கரசுநாயனார்புராணம் 305
12. மேலது மேலது 363
13. மேலது சிறுத்தொண்டர்புராணம் 40
14. மேலது கழறிற்றறிவார்புராணம் 112
15. திருவாரூர் நான்மணிமாலை குமரகுருபரர் பாட்டு எண் 8
15. அ. மகாகயிலாயயாத்திரை தருமை ஆதீனப்பதிப்பு பக்கம் 29
16. கந்தபுராணம். கச்சியப்ப சிவாச்சாரியர் வள்ளியம்மை திருமணப்படலம் பாட்டு எண் 75
17. சம்பந்தர் திருமுறை 2 பதிகம் 21 பாடல் 8
18. திருக்குற்றாலக் குறவஞ்சி கடவுள் வாழ்த்து பாட்டுஎண் 4
19. 11ஆம் திருமுறை திருவிடைமருதூர் மும்மணிக்கோவை வரிகள் 36-37
20. திருவாசகம் கீர்த்தித் தி 5 அகவல் 33-34
21. திருமுருகாற்றுப்படை வரிகள் 1-3
22. கந்தபுராணம் உற்பத்திக் காண்டம் பாட்டு எண் 26
23. 11ஆம் திருமுறை அற்புதத் திருவந்தாதி பாட்டு 65



படம் 49 வட இந்திய ஓவியத்தில் அம்மையப்பர் தோற்றம்.
பழைய படம் ஒன்றின் பிரதி



படம் 50 சிவவடிவ செப்புச் சிற்ப முன்பின் தோற்றம்.
Manifestation of shiva நூலில் கண்டுள்ளவடி வரைந்தது.

## பரத கண்டத்திற்கு வெளியில் உள்ள நாடுகளில் சிவ வடிவங்கள்

நாம் வாழும் இந்நிலவுலகில் மக்களை செம்மை நெறிக்குள் புகுத்தி செல்கதிக்கு வழிகாட்டியாக விளங்கும் சமயங்கள் பல. இவற்றுள் முன்னைப் பழமைக்கு பழமையாயும் பின்னைப் புதுமைக்கு புதுமையாயும் விளங்கி நிற்பது சைவ சமயம். இச்சமயம் இப்போது மிகுதியாக விரவி விளங்கும் இடம் பரத கண்டமேயாகும் ஆனால் ஒரு காலத்தில் இந்நில உலகெங்கும் நீக்கமற நிறைந்து விளங்கியிருந்ததை கீழ்க்கண்ட குறிப்புகளால் அறியலாம்,

சிவாலயர்கள் 1008 என்பர். இவ்வாறு குறிப்பிடப்படும் இந்த 1008இன் இருப்பிடக்[1] குறிப்பினை இது தெளிவுபடுத்தும். இச்சிவாலயங்கள் வெள்ளிப் பனிமலையாகிய இமயத்தின் உச்சியில் விளங்கும் திருக்கயிலையை நடுவில் கொண்டு

| | |
|---|---|
| வடக்கில் | 292 |
| கிழக்கில் | 274 |
| தெற்கில் | 269 |
| மேற்கில் | 263 |

என்ற எண்ணிக்கையில்[2] இருந்தனவாம்.

மற்றும் உலகின் பல பகுதிகளில் தோண்டி எடுக்கப்பட்ட புதைபொருள் ஆய்வு மூலமாயும்" பல இடத்தில் காணப்படும் சிவ வடிவங்கள் மூலமாயும் அறியலாகும். இவ்வாறு பழமையாக விளங்கும் இச்சைவ *மயச் சின்னங்கள் இன்று நம் பாரத கண்டத்திற்கு வெளியில் காணப்படும் இடங்கள்

வீரசைவ சமயத்தைப் பற்றி பண்டித காசிநாத சாஸ்திரி அவர்களது பேருரை (காசிநாத சிரக்த மாலா எண் 12) மைசூர் ஸ்ரீ பஞ்சசெரியா மின் இயக்கப் பதிப்பகத்தில் பதிப்பிக்கப்பெற்றது 19?1 (பக்கம் 1-85) பழைய விலை 0.12 0. 24-4-2? இல் முதல் பேருரை (ஆங்கிலத்தில்)

1. ஆப்பிரிக்கா கண்டம் எகிப்து நாட்டில் நைல் நதிக் கரையில் உள்ள 'மெம்பிஸ்' என்னும் நகரத்தில் புலித்தோலான அரவாபரணம் அணிந்து காளை ஊர்தியில் அமர்ந்துள்ள சிவ வடிவம் ஒன்றுள்ளது. இங்கு வரும் யாத்ரீகர்கள் இதற்கு பால் அபிஷேகம் செய்து இலைகளால் அர்ச்சிக்கின்றனர். இவ்வடிவம் ஒசிரிஸ் (Osiris) என்றும், காளையை ஆபிஸ்(Apis) என்றும் கூறப்படுகிறது.

2. மெசபட்டோமியாவில் உள்ள பாபிலோன் என்னும் இடத்தில் பதினாறு அடி உயரமுள்ள சிவலிங்கம் ஒன்று இருக்கிறது.

3. கெட்ரோ பொலிஸ் (Hedrapolis) என்னும் மேல் நாட்டு நகரமொன்றில் உள்ள ஒரு கோயிலில் எட்டு அடி உயரமுள்ள சிவலிங்கம் ஒன்று இருக்கிறது.

4. அரேபியாவில் முஸ்லீம் மக்களின் புனித யாத்திரைத் தலமான 'மக்கா' நகரத்தில் சிவலிங்க வடிவம் ஒத்த ஒன்று. சம்சம் என்ற பெயரில் இருப்பதாகக் கூறப்படுகிறது.

இம்மக்கா நகரத்து 'காபா' என்னும் கோயிலில் ஆதியில் இருந்து திருஉருவங்கள் முகம்மது நபியால் உடைக்கப் பட்டனவாம்.

இன்னும் தேவாரத்தில் 'மக்கீச்சரம்' அக்கீச்சரம்' என்று அழைக்கப்படும் தேவார வைப்புத் தலப் பெயர்கள்

மக்கா ஈச்சரம் மக்கீச்சரம்

இதனை குறிக்கின்றதோ?

"நாடகமாடிட ... குக்குடேச்சர
மக்கீச்சரங் கூறுங்கால் ... ... ..."
..... இறைவனுறை சுரம்பரவும் இயம்புவோமே"[3]

5. பிரசில் : தென்அமெரிக்கா பிரசில்நாட்டில் பல பழமையான சிவலிங்கங்களும் பிள்ளையார் சிலைகளும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

6 கொரிந்து என்னும் இடத்தில் பார்வதியம்மைக்கு கோயில் ஒன்று உள்ளது.

7. கிதாஸ்கோ : ஸ்காட்லாந்து நாட்டில் கிளாஸ்கோப் பட்டணத்தில் தங்கக் கவசம் அணிவிக்கப் பெற்ற சிவலிங்கம் ஒன்றுள்ளது.

8. சிவலிங்கம் ஒன்று அய்டிஸ் (Actis) என்ற பெயருடன் எல்ரன் நாட்டிலும் (Elren Country) மற்றொன்று ஆஷிர் (Aesheer) என்று 'நிம்நீத்' நகரத்திலும் (city nimneeth) மெசபட்டோமியாவில் இன்றும் வழிபடப்படுகிறது.

9. ஆப்ரடிஸ்தான், சித்ரால், காபல், பால்க், பொக்காரோ (ஆப்கனிஸ்தானம்) ஆகிய ஐந்திடத்தில் உள்ள சிவலிங்கங்கள் மக்களால் கஞ்சவீர் என்றழைக்கப்படுகிறது.

சிவம் உருவமற்ற கடவுள் என்றால் சிவலிங்கமும் கிட்டதட்ட என்ன உருவம்? என்று கூறமுடியாத உருவமற்ற ஒன்றே.

சிவ வணக்கம் மிகப் பழமையான 50000 ஆண்டுகளுக்கு முந்திய சைவ சமயமாகும். வேதங்களின்படி சுயம்பு மனுவே மேருமலைத் தொடரில் உள்ள 'சிவாலிக்' பகுதியில் தோன்றிய முதல் மனிதன். இதை இருக்குவேதம் குறிப்பிடுகிறது. 'சிவாலிக்' என்ற சொல் சிவனுடன் தொடர்புடையது. புராணங்களின்படி 'சிவன்-பார்வதி' இருப்பிடம் மேருமலை.

எகிப்தை ஆண்ட 'பாரோக்கள்' சிவத்தையே வணங்கி வந்தனர் ............ நைல் ஆறு நெடுக சிவலிங்கங்களைக் காணலாம்.

பண்டைய உலகம் பாரத அறங்களையும் சிவ வணக்கத்தையும் மட்டுமே அறியும் ஈசன் ஒருவனே. கடவுள் பண்டைய தமிழில் 'இயவுளா'கி இருந்தது. அதுமேலும் சுருங்கி சுமேரியார் 'இய' என்றனர். ஈசனே செருசல மக்களால் ஈசச்(ஸ்) ஆயிற்று.

இந்தியாவிலேயே ஈசுவரனுக்கு மகேசுவரன், பரமேஸ்வரன், பிரகதீசுவரன், வீரட்டேசுவரன், சம்புகேசுவரன் எனப் பெயர்கள் வழங்குகின்றன. நான்மறைகளை ஓதும்போது 'ஈசுவரா சர்வ பூதானாம்' என்று நாம் கூறுகிறோம்.

பண்டைச் சுமேரியார் சிவத்தை லிங்க வடிவில் வழிபட்டனர். குமரிக்கண்டத்தின் பழைய ஆட்சியாளர்களின் பட்டப்பெயர் சிவனாக இருந்தது.

அமெரிக்கக் குன்று ஒன்றில் மிகப் பழமையான சிவாலயம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. பேராசிரியர் கா. அப்பாதுரை அவர்கள் தனது 'குமரிக்கண்டம்' என்ற நூலின்

முன்னுரையில்:

புவிஇயல் ஆய்வு அறிஞர்கள் அந்தக் குன்று 100000 ஆண்டுகளுக்கு முந்தையதாகக் கருதுகிறார்கள். 50000 ஆண்டுகட்கு குறைவாக இருப்பினும் அது தமிழர்களுக்கு மதிப்புமிக்க ஒரு சான்று. சிவனை வணங்கும் கூட்டத்தினரே அக்குகைக் கோயிலைச் செதுக்கியிருக்க வேண்டும். அமெரிக்க புவிஇயல் தாவர இயல் நிபுணர்கள் சிவனை வணங்கும் அந்த தமிழர்களின் வரலாற்றைக் கண்டுபிடிக்கப் பல்வேறு ஆய்வுகளை இப்போது தீவிரமாக நடத்தி வருகின்றனர்.

துர்க்மெனியாவில் ரசியர்கள் கண்டுபிடித்த பண்டைய நகரமொன்றில் சிவன், துர்க்கை கோபுரம் சிறிய சிலைகள், முத்திரைகள், ஏடுகள் கிடைத்துள்ளன.. முத்திரைகளில் திரிசூலத்துடன் சிவன் காணப்படுகிறார்.

ஆஸ்திரேலியாவும் குமரிக்கண்டமும் ஆப்பிரிக்காவுடன் ஒரு காலத்தில் இணைந்திருந்த அங்கெல்லாம் பாறைகளில் சிவன் கணேசன் உருவங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. உதாரணம் 'சிம்பர்வே' குகைச் சிற்பம்.

தென்அமெரிக்காவில் பரவலாக சிவலிங்க வணக்கம் இருக்கிறது. மெக்சிகோவிலும் சிவனை மலைவடிவமாக வணங்கும் வழக்கம் இருந்து வந்தது.

பாலித்தீவுகளில் ஏராளமான சிவன், உமை கோயில்களில் இருக்கின்றன. சயாமி சிவனுடைய திரிசம்பவா நடனத்தை ஆடுகிறார்கள். சாவாத் தீவில் அகத்தியர் சிலைகள் பல காணப்படுகின்றன. அகத்தியர் சிவனை வணங்குகிறவர்.

சம்பா நாட்டில் (தெற்கு வியட்னாம்) கண்டுபிடிக்கப்பட்டுள்ள பழமையான கல்வெட்டுகளின்படி இந்திய மன்னனான (வியத்திரசாகரன்' சகாரா மாநிலத்தில் 1800000 ஆண்டுகளுக்கு முன்னர் சிவலிங்கத்தை உருவாக்கி வைத்தான். பிற்காலத்தில் பிரகதீசுவரர் கோயில் கட்டப்பட்டது. பின்னர் இது கடற் கொள்ளையர்களால் அழிக்கப்பட்டது.

பண்டைய சப்பாணியர் சைவத்தையே பின்பற்றி வந்திருக்கிறார்கள். இந்தியர்கள் இமயமால் வரையில் இருக்கும் திருக்கயிலாய மலைக்கு புனிதப் பயணம் செய்வது போல் சப்பானியர் 12835 அடி உயர் 'பிசி' மலைக்கு திருப் பயணம் செய்கின்றனர்.[4]

Hindu 27.2.44

.........Hindu Shrine at ancient Chinas port town on the coast opposit to Formosa now known as Chand-Chow.

மேற்கண்ட 'சுவர்ன்சென' என்னும் பட்டினத்தில் உள்ள ஒரு ஆலயத்தில் சிற்பங்கள சமயச்சார்புடையனவாக உள்ளன. அவற்றுள் சிலந்தி, யானை கோச்செங்கம் சோழநாயனார், மற்றும் சண்டேசுரநாயனார் சிற்பங்களும் உள்ளன.

சுதேசமித்திரன் 5-4-1947

உலக அதிசயங்கள் என்னும் தலைப்பில் 'ஆப்பிரிக்கா கண்டத்தில் 'கென்யா'வின் தலைநகராகிய 'நைரோபி'யில் ஒரு சிவன் கோயில் உள்ளது.

ஆசிரியர் ந. சி. கந்தையா அவர்கள் எழுதியுள்ள பழந்தமிழர்' பக்கம் 67இல்

"வடஅமரிக்காவில் 'கொலராடோ' ஆற்றுமுகத் துவாரத்தில் உள்ள பீடபூமியில் பத்தாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட சிவாலயம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

**சங்க 25—4—80 தினமணிசுடர்**

அமெரிக்காவில் இருக்கும் 'கிராண்ட்கான்யான்' எனப்படும் பள்ளந்தான் மிக ஆழமான பள்ளம். இதன் ஆழம் ஒரு மைலுக்கு மேல், அகலம் 4 மைல் முதல் 18 மைல் வரை: நீளம் 217 மைல்கள்: இந்தப் பள்ளம் மனிதர்களே தோன்றாத காலத்தில் உருவானது என்கிறார்கள்.

வை அரிசோனாபள்ளம் பற்றி

8. 17-10-1937, Sunday. Hindu

The Shiva Temple scientific excavation who the ancient Shiva, a plateau on the south rim of the grand can you of Arzone which was isolated the ice age 12000 to 35000 years ago.

9. 'ஞானபூமி' தமிழ் இதழ் ஜூன் 1982 இதழ் பக்கம் 19ல்

1. மெசபட்டோமியா நாட்டில் கங்கையை மலையில் வைத்த சிவபெருமானது சிலைகள் கிடைத்துள்ளன.

2. அயர்லாந்தில் பூமியிலிருந்து விநாயகர் விக்கிரகம் ஒன்று தோண்டி எடுக்கப்பட்டுள்ளது.

3. சயாம், சுமத்ரா, ஜாவா முதலிய நாடுகளில் பல சிவ விஷ்ணு ஆலயங்கள் உள்ளன.

4. மலேஷியாவில் முருகன் ஆலயங்கள் ஏராளமாக உள்ளன. இதுவரை குறிப்பிட்ட வெளிநாட்டு இடங்கள் தவிர்த்து இன்னும் எத்தனையோ இடங்களில் சிவவடிவங்கள் (பழமையானவை) காணப்படும் விவரங்கள் நிறைய உள்ளன.

இதுவன்றி நம் நாட்டில் இருந்து வணிகம், அரசியல் தொடர்பாக வெளிநாடு சென்று அங்கேயே குடியமர்ந்த இந்திய மக்களால் கட்டப்பட்டு இன்னும் பூசனை நடந்து வரும் பல நூற்றாண்டுகட்கு முற்பட்ட கோயில்கள், பர்மா, மலேஷியா தாய்லாந்து முதலிய நாடுகளில் உள்ளன.

மற்றும் இந்த 20ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உலகின் பல பாகங்களிலும் இந்திய மக்களால் புதிதாகக் கட்டப்பட்டு இன்று அங்கு வாழும் இந்திய மக்களால் வழிபடப்பட்டு வரும் கோயில்கள் வடஅமெரிக்காவிலும் லண்டன் முதலிய நகரங்களில் புத்தொளியுடன் திகழ்கின்றன.

இவற்றையெல்லாம் விட வெளிநாட்டு அருங்காட்கியகங்களில் (Museum) நம் இந்திய சிற்பங்கள் நிறைய பார்வைப் பொருளாக வைக்கப் பெற்றுள்ளன.

இன்னும் கூறப்புகுந்தால் நம் தென்னாட்டு மதுரையில் இருந்த சிற்பச் சிறப்புடைய கருங்கல்கோயில் ஒன்று இங்கிருந்து பெயர்த்தெடுக்கப்பட்டு அமெரிக்க ஐக்கியநாட்டு 'பிலடெல்பியா' நகரத்தில் இருக்கிறது.

வெளிநாட்டில் பல செல்வச்சீமான்கள் நம்நாட்டு சிறப்பு மிகு பழைய சிற்பங்களையும் புதிய சிற்பங்களையும் காட்சிப் பொருளாக தம்மிடம் வைத்துள்ளனர்.

## அடிக்குறிப்புகள்

1. தமிழ்ப் பேரகராதி பக்கம்-800 கோபாலகிருட்டிண கோனார் பதிப்பித்தது.
2. இவ்வெண்ணிக்கை பேரகராதியில் கண்டுள்ள எண்ணிக்கைப் படி 1008 ஆக உள்ளது. 90 அதிகமாயுள்ளது.
3. அப்பர் தேவாரம் திருமுறை 6, பதிகம் 71, பாடல் 8
4. Siva Around the World By, U. G. Ramachandran.

# பின்னிணைப்பு 2

"சிவ வடிவங்கள் பற்றி பல்வகைச் செய்திகள்"

* மிகப்பெரிய சிவலிங்கங்கள்
* மிகப் பெரிய நடராசர்
* பெரிய வடிவில் மணவழகர்
* மான்மழு இடமாற்றம்
* மான்மழுவற்ற சிவவடிவம்
* கருவறையில் மூலவடிவ உரு
* இடம்பெயர்ந்தமைந்த வடிவங்கள்
* அந்நியமதத்தினரால் அழிந்தவை
* புதையுண்ட சிவவடிவங்கள்
* நுட்பமான சிவ வடிவங்கள்
* ஆனந்த சயன சிவலிங்கம்
* லிங்கத்திற்குரிய நட்சத்திரங்கள்
* கருவறை சிறிது கோபுரம் பெரிது
* இலிங்கவடிவில் வடுக்கள் பள்ளங்கள்
* இருமூலட்டானங்கள்
* ஆவுடை மட்டும் மூலலிங்கம்
* ஆவுடையின்றி மூலலிங்கம்
* லிங்கம் பெயர் கொண்ட வடிவங்கள்
* லிங்கம் நோக்கும் திசைகள்
* பெண் வடிவம் இணைந்த லிங்கம்
* திருந்துதேவன்குடி/திருநீலக்குடி லிங்கங்கள்
* சிவலிங்கத்தின் சின்னங்கள்
* கோயிலும் வடிவும் இல்லா தலங்கள்
* மூலலிங்கத்திற்குப் பின் அம்மையப்பர் வடிவம்
* தலங்களில் சிறப்புச் சிவ திருஉருவங்கள்
* மகேசுவர வடிவங்களுக்குரிய இடங்கள்

## சிவ வடிவங்கள் பற்றி பல்வகைச் செய்திகள்

## மிகப்பெரிய சிவலிங்கங்கள்

1. தஞ்சைப் பெரியகோயில் என்ற பெயருக்கேற்ப கோயில் கருவறை விமானமும் பெரியது. இதனுள் இடங்கொண்டுள்ள சிவலிங்கமும் பெரியது.

2. கங்கை கொண்ட சோளேச்சரம் எனப்படும் கங்கை கொண்ட சோழபுரத்துக் கோயிலினுள் இருக்கும் சிவலிங்கமும் பெரியது.

3. பாண்டி பதினான்கு தேவாரத் தலங்களுள் ஒன்றான திருப்புனவாயில் சிவலிங்கமும் மிகப்பெரிது.

இம்மூன்று சிவலிங்கங்களுக்கும் அணிவிக்கும் ஆடை பற்றி வழங்கும் பழமொழி

"மூன்று முழமும் ஒருசுற்று
முப்பது முழமும் ஒருசுற்று" என்பது.

அதாவது ஆவுடையாருக்கு மேல் உள்ள சிவபாகத்திற்கு சுற்ற மூன்று முழம். ஆவுடையாருக்குச் சுற்ற முப்பதுமுழம் ஆகும்.

4. ஆந்திரமாநிலத்தில் 'லெப்பாட்சி' என்னுமிடத்திலும் தஞ்சைப் பெரியகோயில் சிவலிங்கம் போல் ஒன்று உள்ளது எனப்படுகிறது.

மற்றும் பரதகண்டத்திற்கு வெளியில் ஆசியாக்கண்டத்தின் மேற்பகுதியிலுள்ள மெசபட்டோமியா நாட்டில் உள்ள 'பாபிலோன்' என்னுமிடத்தில் பதினாறு அடி உயர சிவலிங்கம் ஒன்று உள்ளது.

இந்த பெரிய சிவலிங்க அளவிற்கு சற்று குறைந்ததாய் விளங்கும் பெரிய சிவலிங்கங்கள் திருச்சிராப்பள்ளி (தாயுமானவர் திருவிடைமருதூர் மகாலிங்கர், திருஇன்னம்பர் சிவலிங்கம் மற்றும் சிலவற்றைக் கூறலாம்.

## மிகப்பெரிய வடிவ நடராசர்

சோழநாட்டுத் தேவாரத் தலமான திருநல்லம் (கோனேரிராசபுரம்) ஆடல்வல்லானின் உருவம் மிகப்பெரிது. இதற்குச் சான்று இவ்செப்புவடிவம் இடம் பெயராது வைத்த இடத்திலேயே இருப்பதுதான். இதனை ஒத்த உலோக வடிவம் எங்கும் இல்லை எனலாம்.

இதற்கு அடுத்த நிலையில் திருவிடைமருதூர், குடந்தை நாகேச்சுரர்கோயில், மற்றும் சில தமிழ்நாட்டு அருங்காட்சி யகத்திலும் இருக்கிறது.

## பெரிய வடிவில் மணவழகர் (கலியாணசுந்தரர்)

சோனாட்டுத் தேவாரத் தலமான திருவீழிமிழலையில் நின்ற கோல வடிவில் அம்மையப்பர் மணக்கோலத்தில் இருக்கும் செப்புத்திருமேனியும் மற்றும் சிலவாகும்.

## சிறிய வடிவில் பெருமையும் புகழும் பெற்று விளங்கும் சிவவடிவங்கள்

சிதம்பரம் பொன்னம்பலத்தில் நின்றாடும் தெய்வமான நடராசர், திருவாரூர் திருமூலட்டானத்தில் இருந்தாடும் அழகராகிய தியாகராசர் இரண்டும் மூர்த்தி அளவில் சிறிது எனினும் கீர்த்தியில் மிகப்பெரிதாக விளங்குகின்றன.

## திருக்கைகளில் தாங்கும் சிலபொருள்களின் மாற்றம் மான்மழு இடமாற்றம்

சிவவடிவங்களில் மானும் மழுவும் முக்கிய இடம்பெறுவன. இவற்றுள் மழு சிவவடிவங்களில் மேல் வலக்கரத்திலும், மான் இட மேல்கரத்திலும் இருக்கும். இதற்கு மாறாக மான் வலது

மேல் கரத்திலும், மழு இட்டு மேல் கரத்திலும் மாறியிருக்கின் வடிவம் ஒன்று இருக்கிறது. இவ்வாறு வலது மேற்கரத்திற மானை ஏந்தி இருக்கும் இவ்வூர் வலங்கைமான் ஆகும். இது கும்பகோணத்திற்கு தெற்கில் உள்ள ஊர் ஆகும்.

## மானும் மழுவும் கைகளில் இல்லாத சிவவடிவம்

ஞானத்தின் எழுபிறப்பு என்று போற்றப்பெறும் திருஞான சம்பந்தர் பிறந்த பதி சீர்காழியாகும். இது தோணிபுரம் என்றும் பெயர் பெறும். இத்தலத்தில் இத்தல மூலலிங்கத்திற்கு மேல் கட்டுமலையில் உமையுடன் சிவபிரான் சுதை வடிவில் காட்சி தருகிறார். வழக்கமாக காணப்படும் மானும் மழுவும் இச்சிவ வடிவில் இல்லை. இதனை ஞானசம்பந்தர் இத்தலப் பதிகத்தில்

"செறிமுளரித் தவிசேறி யானுஞ்
செற்றதில் வீற்றிருந்தானும் மற்றைப்
பொறியரவத் தணையானுங் காணாப்
புகலி நிலாவிய புண்ணியனே!
எறிமழுவொடு இளமான் கையின்றி
யிருந்தபிரான் இதுவென்கொல் சொல்லாய்?
வெறிகமழ பூம்பொழுல் சூழ்மிழலை
விண்ணிழி கோயில் விரும்பியதே"[2]

என்ற பாடலில் 'மழுவொடு இளமான் கையின்றி' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது நோக்கத்தக்கது.

## சிவாலயக் கருவறை மூலவடிவம் உருவத்திருமேனி

சிவாலயங்களில் மூலவடிவாய்க் கருவறையில் இருப்பது அருஉருவ வடிவாகிய சிவலிங்கமே. ஆனால் ஒரே ஒரு தலத்தில் மட்டும் உருவமூர்த்தியாக இருக்கிறது. அதுதான் மாதொரு பாகன் (அர்த்தநாரீச்சுவரன்) இருக்கும் திருக்கொடிமாடச் செங்குன்றூர் என்னும் திருச்செங்கோட்டு மலையில் ஆகும்.

## தான் முதலில் தோன்றிய இடத்திலிருந்து பெயர்ந்து வேறிடத்தில் அமர்ந்துள்ள சிவவடிவங்கள்

நம் பரத கண்டத்தின் பழமையான இந்து சமய வழிபாட்டு இடங்கள் அங்குள்ள தெய்வ வடிவங்கள் இன்றைக்கு ஆயிரம் ஆண்டுகட்கு முன் தொடங்கி அழிக்கப்பட்டும் இடம் பெயர்ந்தும் உள்ளன. இதற்குக் காரணங்கள்

ஒன்று இயற்கைச் சீற்றம்

இரண்டாவது அந்நியமதவெறி

மூன்றாவது மக்களது பாராமுகம்

1. இயற்கைச் சீற்றம் கடல் வெள்ளத்தால் கடலோரப் பகுதியிலும், ஆற்று வெள்ளத்தால் ஆற்றங்கரையில் இருந்த கோயில்களும் அழிந்தன. அவற்றுள் குறிப்பிடப்படுபவை நடுநாட்டுத் தேவாரத்தலமாகத் திருக்கூடலையாற்றூர், சிதம்பரத்திற்கு அருகில் கொள்ளிடக் கரையிலிருந்த திருக் கழிப்பாலை கொங்கு நாட்டு திருவெஞ்சமாக்கடல் இவை அழிந்து மீண்டும் புதுப்பிக்கப்பட்டன. நடுநாட்டு திருச்சோபுரம், சோழநாட்டில் திருக்காட்டுப் பள்ளிக்கு அருகில் உள்ள திருக்கானூர் இரண்டும் மணலில் புதையுண்டு மீண்டும் தோண்டி வெளிப்படுத்தப்பட்டன. சென்னைக்கு மேற்கில் பூண்டி நீர்த்தேக்கத்தில் அகப்பட்ட திருவெண்பாக்கம் என்னும் தலம் இடம் பெயர்ந்து ஈழநாட்டு திருகோணமலை, திருக்கேதீச்சரம் இரண்டும் மறைந்து மீண்டும் புதுப்பிக்கப்பட்டன.

## அந்நிய மதத்தவரால் அழிந்தவை

நம் இந்திய வரலாற்றில் முஸ்லிம் மன்னர்களது படை யெடுப்பு ஆட்சியில் கஜினிமுகம்மது. ஔரங்கசீப், ஹைதர் அலி போன்றவர்களால் மிக்க பழமையும் புனிதமும் வாய்ந்த சிவ வடிவங்கள் சீர்குலைந்தன.

கஜினிமுகம்மதுவால் பன்னிரு சோதிலிங்கங்களில் முதலாவதான சோம்நாதபுர இலிங்கம், ஔரங்கசீப் என்ற மொகலாய மன்னரால் புனித கங்கை காசி விசுவ லிங்கமும் சீர்குலைந்து பின்னர் புதிதாக உருவாக்கப்பட்டு இப்போது விளங்குகின்றன.

அலாவுதீன் என்ற மன்னனின் படைத்தலைவன் மாலிக்காபூரால் தமிழகத்துக் கோயில்கள் சில அழிந்தன. அவற்றுள் குறிப்பிடத்தக்க சம்பவம் ஒன்று மதுரைக்கோயில் இவனால் இடிக்கப்பட்டு வரும்போது இடையில் திருவருள் கைகூட்ட நேர்ந்த ஒரு அற்புதச்செயலால் அதற்கு மேல் இக்கோயில் தப்பியது.

சென்னையில் சிறந்து விளங்கும் தேவாரத் தலக் கோயிலான மயிலை கபாலீச்சரமும் தன் பண்டைய இடத்திலிருந்து அந்நிய மத ஆதிக்கத்தால் பெயர்ந்து இப்போதைய இடத்தில் உள்ளது என்பர். இதுபோன்ற வருந்தத்தக்க நிகழ்ச்சிகள் பலப் பலவாகும். இதுபோல் இன்னும் சிலவும் உள்ளன.

## போலிச் சிவவடிவங்கள்

சற்றுமுன் கூறப்பட்ட அந்நியமத மன்னர்களது படையெடுப்பு நெருங்கியபோது சிவ புனிதக்கோயில்களில் உள்ள வடிவங்களைக் காப்பாற்ற இந்து சமய மக்கள் செய்த சில செயல்கள்.

கோயில் தெய்வ வடிவங்களைப் பெயர்த்து மண்ணில் புதைத்துவிட்டு அவ்விடத்தில் புதிதாய் ஒரு வடிவை வைத்து விடுவர். வரும் பகைவர்கள் தங்களது வெறியை இவ்வடிவில் காட்டி அகன்றிடுவர். இவ்வகைப் போலி வடிவங்கள் இன்றும் சில இடங்களில் காணலாகும். திருக்காளத்தியில் இப்படி ஒரு போலி லிங்கம் உள்ளது.

## புதையுண்ட சிவவடிவங்கள்

பகைவர்கள், அந்நிய மதத்தவர்கள் படைகொண்டு தங்களது நாட்டில் புகுந்து கொள்ளையும் கொலையும் செய்வர். இவ்வமயம் புனிதமான சிலைகளைப் பூமியைத் தோண்டிப் புதைத்து விடுவர். பின்னர் நாட்டின் நிலைமை திருந்தியபின் புதைத்த சிலைகளை எடுத்துக் கோயிலில் வைத்து வழிபடுவர். இவ்வாறு புதைக்கப்பட்டவை பலநாட்கள் அதிகமானபின் வைத்தவர்களும் மறைய அவை புதைத்த வண்ணமே இருக்க வேண்டியதாகி விடுகிறது.

தற்காலம் பூமியைத் தோண்டும் போதும் உழும்போதும் சில இடங்களில் சிலைகள் கண்டு எடுக்கப்படுகின்றன. இவை எல்லாம் பாதுகாப்பிற்காக முன்னர் புதைக்கப் பட்டவைகளே எனலாம்.

## நுட்பமான சிவவடிவங்கள்

பெரும்பாலும் கோயில்களில் கல், உலோகத்தால் ஆக்கப் பட்ட வடிவங்கள் அங்குள்ள பூசகர்களது கையினால் தீண்டி திருமுழுக்கு, அலங்காரம் செய்யப்படுபவையே. ஆனால் ஒரு சில இடத்தில் இச்சிவ பூசகர்களது கைபடாது இருக்கும் நிலையிலும் உள்ளன. திருக்காளத்தியில் உள்ள மூலலிங்கம் இந்த நிலையில் உள்ளது.

திருக்கோகர்ணம் என்ற துளுவ நாட்டுத் தேவாரத்தல சிவலிங்கமான மகாபலேசுவரர் பசுவின் காதுவடிவில் மிகச் சிறியதாய் நுட்பமாய் விளங்குகிறது. இன்னும் பன்னிரு சோதிலிங்கங்களும் ஒரு சில தரையோடு தரையாக உள்ளன.

## அனந்தசயனத்தில் சிவலிங்கம்

கேரளநாட்டின் தலைநகர் திருவனந்தபுரம். இங்குச் சிறந்து விளங்குவது அனந்த பத்மநாபசாமிகோயில். இவ்வனந்த பத்மநாபர் திருவரங்க அரங்கநாதரைப்போல் கிடந்த (சயனக்)

கோலத்தில் உள்ளவர், இவர் சயனத்தில் தம் வலக்கையை தலைக்கு அடியில் வைத்து நீட்டி ஒரு சிவலிங்கத்தின் மீது வைத்துள்ள நிலையில் உள்ளது.

மராட்டிய நாட்டில் சிறந்து விளங்கும் பண்டரிபுரத்து பண்டரிநாதனது திருமுடியில் சிவலிங்கம் ஒன்று காணப் படுவதாகக் கூறப்படுகிறது.

கொங்கு நாட்டுப் பேரூர் லிங்க உச்சி தாமரை மலர் அமைப்பு என்பர்.

## சிற்ப நூல்களில் கூறப்பட்டுள்ள சில சிவவடிவங் களுக்கு உரிய நட்சத்திரங்கள்

1. சுயம்புலிங்கத்திற்கு — திருவாதிரை
2. தைவிகலிங்கத்திற்கு — பூசம்
3. ஆரிடலிங்கத்திற்கு — சுவாதி
4. ஆசுரலிங்கத்திற்கு — உத்திரம்
5. மானுடலிங்கத்திற்கு — அனுடம்

## மூலலிங்கக் கருவறை சிறிது திருமதில், கோபுரம் பெரிது?

பல கோயில்கள் இவ்வித அமைப்பில் இருக்கும் கருத்து என்னவெனில் திருமதில், கோபுரம் இவை பிரபஞ்சம் அதாவது காணப்படும் உலகம். கருவறை இறைவன், இதிலிருந்து காணப்படும் உண்மை? உலகம் விரிந்து பரந்து இருக்க அதனுள் நுண்பொருளாக (சூக்குமமாக) இறைவன் இருக்கிறான் என்பதைக் காட்டுகிறது,

சில கோயில்களில் கருவறை விமானம் விண்ணளாவ, இருக்க கோபுரம் திருமதில்கள் இதனுள் அடக்கமான அளவில் இருக்க தஞ்சைப் பெரிய கோயிலைப் போல் இருக்கும். இதனால்

அறியப்படுவது? காணப்படும் உலகம் பரந்து விரிந்து பெரிதாகத் தோன்றினாலும் இறைவன் இதனினும் பெரியவன் என்பதைக் காட்டுகிறது.

## பல கோயில் மூலலிங்கங்களில்வடுக்கள் பள்ளங்கள்

திருப்பந்தணைநல்லூர், திருப்பாதளீச்சரம், திருநெல்வேலி போன்ற பல தலத்து மூலலிங்கங்களில் வடுக்கள் தோன்றும். இதற்குக் காரணமாக கூறப்படும் செய்திகள் கிட்டத்தட்ட ஒரே விதமாக இருக்கும். பசு உருபெற்ற பார்வதியின் குளம்படி பட்டதெனக் கூறுவர். திருக்கொண்டீச்சரம், திருக்கோலும்பம் இத்தலத்து மூலலிங்கங்கள் இப்படிக் காணப்படும்.

திருவலம்புரம் எனப்படும் தேவாரத் தலத்து மூலலிங்கம் உச்சியில் பள்ளம் ஒன்று உள்ளது. இக்காரணத்தால் இவ்வூர் கீழப்பெரும்பள்ளம் என்று அழைக்கப்பெறுகிறது.

திருக்கைச்சின்னம் (கைச்சின்னம்) என்றத் தலத்து இலிங்கத்தில் கையின் அடையாளம் காணப்படுகிறது. இந்திரன் இங்கு தான் பூசித்த லிங்கத்தைப் பிடித்துத் தூக்கிய கைச் சின்னம்—கை அடையாளம் என்பர்.

சில கோயில்களில் மூலலிங்கம் மண்வடிவில் ஆவுடையார் கருங்கல், சிவபாகம் மண்வடிவு. இதில் இரண்டு விதம் ஒன்று தானே தோன்றிய புற்று. திருவாரூர், திருவையாறு, திருஒற்றியூர் முதலிய தலங்கள், மற்றொன்று மண்ணைப் பக்குவப்படுத்தி அமைத்தது.

திருப்பந்தணைநல்லூர், திருச்சிறுகுடி, திருப்புன்கூர் திருமுல்லைவாயில் (வட) திருகுடமூக்கு இதுபோன்ற சில தலங்கள்.

## இருமூலட்டானங்கள்

கோயில்கள் அனைத்திலும் கருவறைக்குள் இருக்கும் சிவலிங்கத்திருமேனிகள் மூலத்தானம் (இடம்பெயரா) எனப் பெயர் பெறினும் சிறப்பாக அழைக்கப்பெறும் திருமூலட்டானம் என்ற சொல் இருதல சிவலிங்கங்களே சிறப்பாகப் பெற்றுள்ளன.

1. தில்லை (சிதம்பரம்) மூலட்டானம்

பொன்னம்பலத்தில் வடபால் உள்ள சிவசந்நிதியில் இருக்கும் சிவலிங்கம் திருமூலட்டானேசுவரர் (ஸ்ரீமூலநாதர்) என்றழைக்கப்பெறுகிறார்.

திருவாரூர் கோயிலில் உள்ள புற்றிடங்கொண்ட பெம்மான் சிவலிங்கத் திருமேனி திருவாரூர் மூலட்டானம் என்று அழைக்கப் பெறுகிறது.

"மணியாரூர்த் திருமூலட்டானனாரே
திருமூலட்டானத்தெஞ் செல்வன்றானே
திருமூலட்டானனே போற்றி போற்றி
திருவாரூர் திருமூலட்டான மேயாய்

## சிவபாகம் உச்சியில் இல்லாது ஆவுடை மட்டும் மூலலிங்கமாய் இருப்பது

சிவலிங்கம் என்பது ஆவுடைக்குள் சிவபாகம் பொருந்தி விளங்குவது ஆகும். ஆனால் சிவபாகம் அற்று ஆவுடை மட்டும் சிவ வடிவமாய்த் திகழும் இடம் மாணிக்கவாசகர் அமைத்த திருப்பெருந்துறை என்னும் ஆவுடையார் கோயிலாகும். ஆவுடையாரே வழிபாட்டில் மூலவடிவாய்த் திகழ்வதால் இப்பதி ஆவுடையார் கோயில் எனப்பெயர் பெற்றது போலும்?

## ஆவுடையின்றி சிவபாகம் மட்டும் மூலலிங்கமாய் இருக்கும் இடங்கள்

முன்னர் சிவபாகமின்றி ஆவுடை மட்டும் சிவவடிவாய்த் திகழுமிடம் கூறப்பட்டது. இங்கு ஆவுடையற்ற சிவலிங்கம் பல ஆலயங்களில் மூலலிங்கக் கருவறையைச் சுற்றி (சிவபாகம்) பாணம் மற்றும் பலவாக வரிசையில் இருக்கக் காணலாம். ஆனால் மூலவடிவே இப்படி இருப்பது குறிப்பிடத்தக்கது.

பரதகண்டத்தில் பன்னிரு சோதிலிங்கத்தலங்களுள் தமிழ்நாட்டு இராமேச்சரம் தவிர்த்த மற்ற 11 தலங்களுள் ஆவுடை இன்றி இருக்கிறது. மக்கள் அனைவரும் அறிந்த காசி என்று வழங்கும் வாரணாசி விசுவலிங்கமும் இதில் ஒன்று ஆகும்.

## இலிங்கம் என்ற சொல்லைச் சிறப்பாகக்கொண்ட சிவவடிவங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1 | திருவிடைமருதூரில் | — | மகாலிங்கம் |
| 2 | வைத்தீசுவரன்கோயிலில் | — | வைத்திலிங்கம் |
| 3 | திருக்கீழ்வேளூரில் | — | அட்சயலிங்கம் |
| 4 | தருமபுரத்தில் | — | தருமலிங்கம் |
| 5 | வாரணாசியில் | — | விசுவலிங்கம் |
| 6 | திருவானைக்காவில் | — | சம்புலிங்கம், அப்புலிங்கம் |
| 7 | மதுரையில் | — | சொக்கலிங்கம் |
| 8 | இராமேச்சரத்தில் | — | இராமலிங்கம் |
| 9 | திருவண்ணாமலையில் | — | தேயுலிங்கம் |
| 10 | திருக்காளத்தியில் | — | வாயுலிங்கம் |
| 11 | கும்பகோணத்தில் | — | கும்பலிங்கம் |

12 அவிநாசியில் — அவிநாசிலிங்கம்

13 திருநல்லூரில் — சுந்தரலிங்கம், அகத்தியலிங்கம்

14 திருநாகேச்சரத்தில் — நாகலிங்கம்

15 திருக்கடையூரில் — அமிர்தலிங்கம்

## சிவலிங்கங்கள் நோக்கும் திசைகள்

சிவனுறையும் கோயில்கள் பலவற்றிலும் மூலலிங்கம் கிழக்கு நோக்கியவை. வீரட்டத் தலங்களில் வழுவூர், திருவதிகை தவிர்த்த ஆறு தலங்களில் மற்றும் திருப்பனந்தாள், மயிலை, வைத்தீசுவரன் கோயில், திருக்கடவூர் மயானம், திருஆலம் பொழில் முதலிய தலங்கள்.

வடக்கு நோக்கியிருக்கும் ஒரே சிவலிங்கம் கடம்பர் கோயில் கருவறையில் உள்ள மூலஇலிங்கமாகும்.

## பெண்வடிவம் இணைந்த சிவலிங்கம்

பிப்ரவரி 1988 'சக்தி' மாத இதழில் விளம்பரப்பகுதியில் வந்த ஒரு சிவலிங்க அமைப்பு விசித்திரமாக உள்ளது. இது இருக்கும் இடம் குறிப்பிடப்படவில்லை. எனினும் சிற்பநூல் களில் குறிப்பு உள்ளது என ஸ்பதிகள் கூறுகின்றனர். இச் சிவலிங்க ஆவுடையாரின் மேல்பகுதி அம்பிகை வடிவில் கோமுகப்பக்கம் காலை நீட்டி உள்ளது. பிரமன் அருகில் நின்று சிவ பாகத்தில் தன்முன் இருகரங்களையும் வைத்துள்ளார்.

இந்த அமைப்பு எதனைக் குறிப்பிடுகின்றதென்றால் ஆவுடையார் பெண்வடிவம் (திருமாலின்பகுதி) என்பதனைக் குறிப்பிடுகிறது ஆகும்.

மற்றும் பிரம, விட்டுணு, சிவம் மூன்றும் ஒருகிணைந்தது சிவலிங்கம் என்பதனைக் காட்டுகிறது.

சிவலிங்க வடிவின் சிவபாகத்தில் பாணத்தின் வலப்பாதி சிவமாகவும், இடப்பாதி திருமாலாகவும் வடஇந்தியாவில் ஒரு இடத்தில் இருப்பதாகத் தினமணி வாரமலர் ஒன்றில் படத்துடன் செய்தி ஒன்று வந்துள்ளது.

திருமாகறல் என்னும் சிவப்பதி தொண்டை நாட்டில் உள்ளது. இங்குள்ள சிவலிங்கம் உடும்பின் வாலைப்போல் சிறிதாக இருக்கிறது.

திருச்சத்திமுற்றம் என்னும் தேவாரத்தலம் தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத்திற்கு அருகில் தென்பக்கம் உள்ளது. இங்குத் தலபுராணத்திற்கு ஏற்ப சிறிய சிவலிங்க வடிவினை அம்பினை அமர்ந்து கட்டி அணைத்துள்ள கோலத்தில் உள்ளது.

## திருந்துதேவன்குடி சிவலிங்கம்

இத்தேவாரப் பதி கும்பகோணத்திற்கு வடக்கில் உள்ள திருவிசலூருக்கு அருகில் உள்ளது. மிகவும் சிதைந்த நிலையில் உள்ள இக்கோயிலில் உள்ள மூலலிங்கத்தைப் பண்டு நண்டு பூசித்ததாகப் புராணம். ஒரே நிறப் பசுக்களின் பால் பத்துக் கலம் கொண்டு வந்து திருமுழுக்காட்டினால் பொன்னிற நண்டு இலிங்கத்து மேலே உள்ள துளையில் இருந்து வரும் என்கின்றனர்.

## திருநீலக்குடி சிவலிங்கம்

இத்தேவாரப்பதி தஞ்சை மாவட்டம் ஆடுதுறை புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கில் தென்னலக்குடி என வழங்குகிறது இங்குள்ள சிவலிங்கத்திற்கு நல்லெண்ணெயை எவ்வளவு திருமுடியில் ஆட்டினாலும் அப்படியே திருமேனியில் சுவரிவிடும்.

## சிவலிங்கத்தில் சின்னங்கள் — தோற்றங்கள்

1 திருக்கச்சினம் — கைச்சுவடு

2 திருப்புகலூர் — சற்றுச் சாய்ந்தது

3 திருக்கண்ணார் கோயிலில் — எண்ணற்ற விழித்தோற் தோற்றங்கள் (திருக்கண்ணாயிரமுடையார்)

4 திருவெண்ணியில் — கரும்புக்கட்டுத்தோற்றம் (108 லிங்க வடிவு)

5 அரிமங்கை (தஞ்சைமாவட்டம் ஐயம்பேட்டைக்கருகில்) — உப்புக்கல் லிங்கம்

6 கொட்டையூர் — பலாப்பழ வடிவம்

7 திருப்பனந்தாளில் — தொங்குசடைத்தோற்றம்

8 திருக்குற்றாலலிங்கத்து உச்சியில் — அகத்தியர் கைச்சுவடு

9 தலைப்பிளவுடையன் — பாதாளீச்சரம், பந்தனை நல்லூர், திருக்கழிப்பாலை, திருந்துதேவன்குடி

10 சிவபாகத்தில் துவாரம் — திருநல்லூர், திருவலம்புரம்

11 திருக்கழிப்பாலையில் உள்ள மூலலிங்கங்கள் வெள்ளை நிறத்தில் உடைந்து சிதைந்த நிலையில் காணப்படுகிறது.

12 திருஏடக சிவலிங்கம் ஓலைச்சுவடிகளை அடுக்கி வைத்துள்ள தோற்றம்.

13 திருமாகறல் சிவலிங்கம் உடும்பு வாலை ஒத்த தோற்றம்.

திருவிற்கோலம் என்னும் தேவாரத்தலம் தொண்டை நாட்டில் சென்னைக்கு மேற்கில் உள்ளது. இங்கு கருவறையில் உள்ள மூலலிங்கம் தீண்டாத் திருமேனி பெருமழை பெய்யும் என்றால் இவ்விலிங்கத்தில் வெண்ணிறம் தோன்றும். போர் வருமானால் செந்நிறம் தோன்றும் என்கின்றனர்.

திருக்காளத்தியில் உள்ள மூலலிங்கமும் தீண்டாத்திருமேனி. இவ்விலிங்கத்தில் சிலந்தி, பாம்பு, யானையாகிய மூன்று உருவங்கள் உள்ளன. உயரமான இவ் இலிங்கத்தில் எங்கும் இல்லாத வகையில் வரிவரியாக, உள்ள சட்டம் சாத்தி வைக்கப்பட்டிருக்கிறது.

திருவெண்ணி (கோயில்வெண்ணி) இங்குள்ள மூலலிங்க சிவபாகம் கரும்புக் கட்டின் தோற்றமாக உள்ளது. சுந்தரர் ஊர்த்தொகை பதிகத்தில் "வெண்ணிக்கரும்பே" என்கிறார். இவ்வாறு இருப்பது ஒரே வடிவில் 108 லிங்க (அட்டோத்திர லிங்க) தோற்றமாகும்.

## கோயிலும் சிவவடிவங்களும் எதுவும் இல்லாத தேவாரத்தலங்கள்

1 திருக்கயிலாயமலை: முன் விளக்கப்பட்டுள்ளது.

2 இந்திரநீலப்பருப்பதம்; நேபாளத் தலைநகரில் இருந்து கண்ணுக்குத் தோன்றும் இமயத்தின் ஒரு பகுதி.

3 அநேகதங்காவதம்: உள்ள திருக்கேதாரத்திற்குச் செல்லும் வழியிடையிருந்து கண்ணுக்குத் தோன்றும் இமயத்தின் ஒரு பகுதி. இதனை கௌரிகுண்டம் எனவும் கூறுவர். இவை மூன்றையும் சம்பந்தர் திருக்காளத்தியில் இருந்து பாடியுள்ளார். நாவரசர் திருக்கயிலையைமட்டும் இமயத்தின் ஓரிடத்தில் இருந்து பாடியுள்ளார்.

சுந்தரர் பாடிக்கொண்டே கயிலையைச் சென்று அடைந்தார்.

## கருவறை மூலலிங்கத்திற்குப் பின் அம்மையப்பர் உருவ வடிவங்கள் உள்ள தலங்கள்

1 திருநல்லூர்
2 திருஅவளிவணல்லூர்
3 திருநெல்வாயில்
4 திருவீழிமிழலை
5 திருஅம்பர்
6 திருவேற்காடு
7 திருக்கொடுங்குன்றம்
8 இரும்பாவனம்

## சிறப்புச் சிவத் திருஉருவங்கள்

1 சிதம்பரத்தில் — நடராசர்
2 திருவாரூரில் — தியாகராசர்
3 திருவெண்காட்டில் — அகோரமூர்த்தி
4 திருஆக்கூரில் — ஆயிரத்தொருவர்
5 திருக்கடவூரில் — காலனைக்காய்ந்தவர் (காலாரி)
6 திருக்குறுக்கையில் — காமனை எரித்தோன் (காமாரி)
7 திருப்பறியலூரில் — வீரபத்திரர்
8 திருவிற்குடியில் — சலந்தராரி
9 திருவதிகையில் — திரிபுராந்தகர்
10 வழுவூரில் — கசாசுரசம்காரர் (கஜாரி)
11 திருச்செங்காட்டங்குடியில் — உத்தராபதியார் (பைரவர்கோலம்)

| | | |
|---|---|---|
| 12 | ஆலங்குடியில் | — தென்முகக்கடவுள் |
| 13 | திருப்புகலூரில் | — சந்திரசேகரர் |
| 14 | திருச்செங்கோட்டில் | — மாதொருபாகர் |
| 15 | சங்கரன்கோயிலில் | — சங்கரநாராயணர் |
| 16 | சுசீந்திரத்தில் | — மும்மூர்த்தி (திரிமூர்த்தி) |
| 17 | திருவீழிமிழலையில் | — மணவழகர் (கலியாணசுந்தரர்) |
| 18 | திருபுவனம் | — சரபமூர்த்தி |
| 19 | திருச்செங்காட்டங் குடியில் | — உத்தராபதியார் |
| 20 | கங்கைகொண்ட சோழபுரத்தில் | — சண்டேச அனுக்கிரகமூர்த்தி |
| 21 | காரைக்கால்தரும புரத்தில் | — யாழ்மூரிநாதர் |
| 22 | பேரூர் | — நடராசர் |
| 23 | ஆலங்காடு | — நடராசர் |
| 24 | திருவேட்களம் | — வேட்டுருவர் |
| 25 | திருவேட்டக்குடி | — வேட்டுருவர் (கிராதமூர்த்தி) |

## சிற்பநூல்களில் கூறப்படுவதாக சிவாலயங்களில் மகேசுவர வடிவங்களுக்குரிய இடங்கள் [திசைகள்]

| | | |
|---|---|---|
| 1 | வடகிழக்கில் (ஈசானத்தில்) | நடராசர் |
| 2 | தென்கிழக்கில் (அக்கினியில்) | இடபாருடர் |
| 3 | தென்மேற்கில் (நிருதியில்) | சோமாஸ்கந்தர் |
| 4 | வடமேற்கில் (வாயுவில்) | கங்காளர் |

| | | |
|---|---|---|
| 5 | வெற்றியில் (ஜயத்தில்) | பிட்சாடனர் |
| 6 | உண்மையில் (சத்தியாம்சத்தில்) | சுகாசனர் |
| 7 | விதியம்சத்தில் | திரிபுராரி |
| 8 | சுக்ரீவாம்சத்தில் | சங்கரநாராயணர் |
| 9 | கந்தர்வாம்சத்தில் | சந்திரசேகரர் |
| 10 | சேஷாம்சத்தில் | சண்டேசானுக்கிரகர் |
| 11 | முக்கியாம்சத்தில் | காலாரி |
| 12 | உதிததிக்கில் | அர்த்தநாரி |
| 13 | கிழக்கில் | கலியாணசுந்தரர் |
| 14 | பர்ஜந்யதிக்கில் | பைரவர் |
| 15 | தெற்கில் | ஆலமர்செல்வர் |
| 16 | மேற்கில் | இலிங்கோத்பவர் |
| 17 | வடக்கில் | கஜாசுரசம்காரர் |

பின்னிணைப்பு-3

## ஆய்வுக்குத் துணை நின்ற நூல்கள்


அருணந்தி தேவ நாயனார் — 'சிவஞானசித்தியார் சுபக்கம்' திருவாவடுதுறை ஆதீனம் திருவாவடுதுறை. 1965

ஆடலரசு. ந. ரா. — 'சிவத்தல வழிகாட்டி' தெய்வீக சித்தாந்த இலக்கிய மன்றம் 89, வரதாமுத்தியப்பன் தெரு, சென்னை-1 1986

இரத்தினவேலு முதலியார். ஆ. — 'சிவபராக்கிரமம்' ரெங்கசாமி முதலியார் அன் சன்ஸ், 24 தாண்டவராய பிள்ளை வீதி சென்னை. 1932

இராமசேஷன். இரா.
கிருஷ்ணன். இரா. — அருணகிரிநாதர் அடிச்சுவட்டில், சுவாமிநாதசாமி திருக்கோயில் வெளியீடு சாமிமலை, 1981

இராமசாமி. மே. சு. — 'தமிழ்நாட்டுச் செப்புத்திருமேனிகள்' தமிழ்நாடு அரசு தொல்பொருள்ஆய்வுத்துறை, சென்னை. 1976

இராசமாணிக்கம்.தி. — 'தமிழகக் கலைச்செல்வங்கள்' சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. 1985

| | | |
|---|---|---|
| இராதாகிருஷ்ணன்.இரா<br>இராமநாதன்.மா | 1963 | தமிழகத்துக் கலைகள்<br>உமாதேவன் கம்பெனி<br>மவுண்ட்ரோடு, சென்னை-18 |
| கச்சியப்ப சிவாச்சாரியார் | 1952 | கந்தபுராணம்<br>குமரகுருபரன் சங்கம்<br>ஸ்ரீ வைகுண்டம் |
| கணபதிஸ்தபதியார்.வை<br>முதலியோர் | 1978 | சிற்பச் செந்நூல்<br>தொழில்நுட்பக் கல்வி<br>இயக்கம், தமிழ்நாடு,<br>சென்னை. |
| கணேசமூர்த்தி ஸ்தபதி | 1960 | ஆலய விக்ரக நிர்மாண<br>ஆயாதி சிற்ப ரகசியம்<br>துரைசாமி முதலியார் கம்<br>பெனி, 1/1, மலையப்ப<br>பெருமாள் தெரு,<br>சென்னை-1. |
| கந்தையா.ந.சி | 1945 | தமிழ் இந்தியா<br>சைவ சித்தாந்த நூற்பதிப்<br>புக் கழகம்<br>சென்னை. |

கலைக்கோவன்.இரா — 1984 — கலைவளர்த்த திருக்கோயில்
கள், சைவ சித்தாந்த நூற்
பதிப்புக் கழகம்,
சென்னை.

காஸ்யபர் — 1968 — காஸ்யப சிற்ப சாத்திரம்
சரசுவதி மகால் நூல்நிலையம்
தஞ்சாவூர்.

கிருஷ்ணராஜ மகாராஜா — 1966 — ஸ்ரீ தத்துவநிதி
சரசுவதி மகால் நூல்நிலையம்
தஞ்சாவூர்.

குமரகுருபரசுவாமிகள் — 1947 — குமரகுருபரர் பிரபந்தத்
திரட்டு,'குமரகுருபரன்சங்கம்'
ஸ்ரீவைகுண்டம்.

சபாரத்தினம்.எஸ்.பி. — 1982 — நாதம் எனும் கோயிலிலே
எழுத்தாளர் பதிப்பகம்,
பாரத்துவாஜேசுவரர்காலனி
சென்னை—24.

சிங்காரவேலு முதலியார் — 1981 — அபிதான சிந்தாமணி
ஏசியன்எசுகேஷனல் சர்வீசஸ்
சி.215, எஸ்.டி.எ. புதுடில்லி.

சிவகுருநாதபிள்ளை. மா — திருநல்லூர்த் தலவரலாறு
திருவாடுதுறை ஆதீனம்,
1984 திருவாடுதுறை.

சுப்பிரமணிய முதலியார், சி.கே — பெரியபுராண உரை
கோவைத் தமிழ்ச் சங்கம்
1954 கோயம்புத்தூர்

சேக்கிழார் சுவாமிகள் — பெரியபுராணம்
திருவாடுதுறை ஆதீனம்
1988 திருவாடுதுறை

சொக்கலிங்கம்பிள்ளை.வீ — சமாதிலிங்க பிரதிட்டாவிதி
சரசுவதி மகால் நூல்நிலையம்
தஞ்சாவூர்

சோமசுந்தரதேசிக பரமாச்சாரிய சுவாமிகள் — திருப்புறம்பயத் தலவரலாறு
சாட்சிநாத சாமி திருக்
1972 கோயில் திருப்புறம்பயம்

ஸ்ரீ குமாரர் — சிற்பரத்தினம்
சரசுவதிமகால் நூல்நிலையம்
1961 தஞ்சாவூர்

தண்டபாணி தேசிகர். ச. த — 'ஆடல் வல்லான்'
திருவாடுதுறை ஆதீனம்
1967 திருவாடுதுறை

திரிகூடராசப்பகவிராயர் — திருக்குற்றாலக் குறவஞ்சி
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
1965 சென்னை

திருஞானசம்பந்தர் முதலியார் — தேவார அடங்கன்முறை.
மயிலைகிழார் இளமுருகனார்
திருவருளகம்
கோவிந்தப்பநாயக்கன் தெரு
1953 சென்னை

திருஞானசம்பந்தசாமிப்பிள்ளை. கு — சைவ சித்தாந்த வினாவிடை
தருமபுர ஆதீனம்
1941 தருமபுரம்

திருமாளிகைத்தேவர் முதலிய ஒன்பதின்மர் — ஒன்பதாந்திருமுறை
சைவசித்தாந்தமகாசமாஜம்
1339 சென்னை

திருமூலர் — திருமந்திரம்
திருவாடுதுறை ஆதீனம்
திருவாடுதுறை

| | | |
|---|---|---|
| திருவாலவாயுடையார் முதலியோர் | 1963 | 11-ஆந்திருமுறை ஸ்ரீ குமர குருபரன் சங்கம் ஸ்ரீவைகுண்டம். |
| பட்டுச்சாமிஓதுவார்.தி | 1970 | சிவபூசை முறை அருணாசலம் செட்டியார் அன் சன்ஸ் மலைவாசல், திருச்சி. |
| பரஞ்சோதி முனிவர் | 1951 | திருவிளையாடற்புராணம் குமரகுருபரன் சங்கம், ஸ்ரீ வைகுண்டம். |
| மணிவாசகம் கடந்தார் | 1987 | உண்மைவிளக்கம் தெய்விக சித்தாந்த மன்றம், வரதாமுத்தியப்பன் தெரு, சென்னை—1 |
| மாணிக்கவாசகர் | 1964 | பதிப்பாசிரியர் ஸ்ரீ கந்தசாமிப் பிள்ளை அண்ணாமலைப் பல்கலைக் கழகம். அண்ணாமலை நகர். |
| முருகவேள். ந.ரா | | ஞானியார் அடிகள் நினைவு மலர், சைவ சித்தாந்த மகா சமாஜம், சென்னை. |

| | | |
|---|---|---|
| வாலையானந்த சுவாமிகள் | 1917 | சைவ சித்தாந்த படவிளக்கம் சித்தாந்த நிலையம், கொரடாச்சேரி. |
| ஜகந்நாதன். கி.வா. | 1987 | கலைமகள், ஏப்ரல் 1987 இதழாசிரியர், கலைமகள், சென்னை. |
| கும்பாபிஷேகக் குழுவினர் | 1963 | மதுரை மீனாட்சி சுந்தரே சுவரர் கும்பாபிடேக மலர், மீனாட்சி சுந்தரசுவரர் திருக்கோயில், மதுரை. |
| திருமயிலை குடமுழுக்குவிழா மலர் | 1984 | பதிப்பாசிரியர் இரா. கிருஷ்ணன் மயிலை கபாலீச்சுரர் திருக்கோயில் சென்னை. |
| வியாசவித்வத்சதஸ் | 1964 | காஞ்சி காமகோடி மடம் காஞ்சிபுரம் |
| | 1959 | 'திருக்கயிலாய யாத்திரை' தருமபுர ஆதீனம்' தருமபுரம். |
| | | 'பன்னிரு சோதிலிங்கத் தலங்கள், தருமபுர ஆதீனம், தருமபுரம். |

# வடமொழி நூல்கள்

| | | |
|---|---|---|
| | | 'தெட்சிணாகுடத்வீப மகாத்மியம் பதிப்பாசிரியர் இராம.கு.இராம. இராமசாமிசெட்டியார்' திட்டை. |
| திரிலோசன சிவாச்சாரியர் | 1975 | 'சித்தாந்த சார்ரர்வலி' தென்னிந்திய அர்ச்சகர், சென்னை |
| அகோரசிவாச்சாரியார் | 1967 | 'சிர்யாக்ரமத்ராயாகி, தென்னிந்திய அர்ச்சகர், சங்கம் சென்னை |
| ஸ்ரீ நிகமக்ஞான சிவாச்சாரியமர் | 1980 | 'ஜீர்ணோத்தாரசதகம்' தென்னிந்திய அர்ச்சகர் சங்கம், சென்னை |



# ENGLISH BOOKS


| | | |
|---|---|---|
| Swami shantanard | | ,Hindu Gods Shiva'<br>Swami Shantanard.<br>Neapean Sea Coad,<br>Bombay. |
| Ramachandran. U.G. | | 'Siva Around the World'<br>International society<br>Poes Garden<br>Madras. |
| Gopinatha Rao · | | Elements of Hindu<br>The Law printing House, |
| Pro.Kramriesh | 1914 | Mount Road, Madras<br>Manifestation of Shiva<br>Philadelphis Museum of Arts<br>Philadelphion U.S. |
| Radha Kamal Mukerjee | 1959 | The Cultural and Art of<br>India George Allen & Union<br>Ltd, London. |

